உ

சிவமயம்.

ஸ்ரீலஸ்ரீ நித்தியானந்த பரமஹம்ஸர்

திரட்டிய

வேதாந்த சாராமிருத

# சிவஇராஜயோகமும்

# சிவஞானச்

# செம்பொருளும்

சசிவர்ணபோதம் பொழிப்புரையும்

ஆகிய கற்கண்டுண்டி.

இவை

வேட்டைக்காரன்புதூர்

ஷ சுவாமிகள் வெளியீடு

சுபகிருது-ஞு வைகாசி-மீ

( 1962-ஞு மே-மீ )

பிரதிகள் 500] [இதன் விலை ரு. 3—8—0

உ

சிவமயம்.

சுரோத்திரிய பிரஹ்ம நிஷ்ட

ஸ்ரீலஸ்ரீ நித்தியானந்த முனிவரர்

இயற்றிய

# வேதாந்த சாராமிருத சிவ இராஜயோகமும் சிவஞானச் செம்பொருளும் சசிவர்ணபோதம் பொழிப்புரையும்

ஆகிய கற்கண்டுண்டி.

இவை

வேட்டைக்காரன்புதூர்

ஷை சுவாமிகள் அவர்களால்

பொள்ளாச்சி கோபால விலாசம் பிரஸில்
பதிப்பிக்கப்பட்டன.

சுபகிருது-ஸ்ரீ வைகாசி-மீ
( 1962-ஸ்ரீ மே-மீ )

பிரதிகள் 500] [இதன் விலை ரு. 3—8—0





உ

சிவமயம்.

சுரோத்திரிய பிரஹ்ம நிஷ்ட

ஸ்ரீலஸ்ரீ நித்தியானந்த முனிவரர்

இயற்றிய

# வேதாந்த சாராமிருத

# சிவஇராஜயோகமும்

# சிவஞானச் செம்பொருளும்

# சசிவர்ணபோதம் பொழிப்புரையும்

ஆகிய கற்கண்டுண்டி.



இவை

வேட்டைக்காரன்புதூர்

ஷை சுவாமிகள் அவர்களால்

பொள்ளாச்சி கோபால விலாசம் பிரஸில்
பதிப்பிக்கப்பட்டன.

சுபகிருது-ஞு வைகாசி-மீ
( 1962-ஞு மே-மீ )

பிரதிகள் 500] [இதன் விலை ரூ. 3—8—0





தவத்திரு நித்யானந்த சுவாமிகள்.

27-2







உ

சிவமயம்.

சுரோத்திரிய பிரஹ்ம நிஷ்டர்

# ஸ்ரீ நித்தியானந்த பரமஹம்ஸர்

## ஸ்ரீ முருகவேள் வழிபாடு செய்தல்.

ஓம் கணேசாய நம:
ஓம் குமாராய நம:
ஓம் காசி விஸ்வேஸ்வராய நம:
ஓம் நீலகண்ட ஞான தேசிக.

ஸ்ரீ சற்குருப்யோ நம:

முருகனே செந்தில் முதல்வனே மாயோன்
மருகனே ஈசன் மகனே வணக்கம்

நெடும் பெருஞ் சிமையத்து நீலப் பைஞ்சுனை
ஐவருள் ஒருவன் அங்கை யேற்ப
அறுவர் பயந்த ஆறமர் செல்வா
ஆல் கெழு கடவுள் புதல்வ மால்வரை
மலைமகள் மகனே மாற்றோர் கூற்றே
வெற்றி வெல்போர் கொற்றவை சிறுவ
இழை அணி சிறப்பிற் பழையோள் குழவி
வானோர் வணங்கு விற்றானைத் தலைவ

மாலை மார்ப நூல் அறி புலவ
செருவில் ஒருவ பொரு விறல் மள்ள
அந்தணர் வெறுக்கை அறிந்தோர் சொன் மலை
மங்கையர் கணவா மைந்தர் ஏறே
வேல் கெழுதடக் கைச் சால்பெரும் செல்வ
குன்றங்கொன்ற குன்றாக் கொற்றத்து
விண் பொரு நெடுவரைக் குறிஞ்சிக் கிழவ
பலர் புகழ் நன்மொழிப் புலவர் ஏறே
அரும் பெறல் மரபிற் பெரும் பெயர் முருக
நசையினர்க்கு ஆர்த்தும் இசை பேராள
அலந்தோர்க்கு அளிக்கும் பொலப் பூட் சேஎய்
மண்டமர் கடந்த நின் வென்றாட கலந்துப்
பரிசிலர்த்தாங்கும் உருகெழு நெடுவேள்
பெரியோர் ஏத்தும் பெரும் பெயரிய வுள்
சூர்மருங்கறுத்த மொய்ம்பின் மதவலி
போர் மிகு பொருந குரிசிலும் எனப்பல
யான் அறி அளவையின் ஏத்தியாறுது
நின்னளந்தறிதல் மன்னுயிர்க் கருமையின்
நின் அடி உள்ள வந்தனன் நின்னொடு.

புரைகு நர் இல்லாப் புலமையோய் எனக்குத் தேவரீர் இடத்தில் என்றும்நீங்காதபேரன்பும், பிறனை ஆசிரயக்காத

ஜீவனமும் அனுயாசமான மரணமும் தந்து அருள் புரியு மாறு வேண்டுகின்றேன். ஹே! முக்கண்ணமைந்த முழுமுதற் கடவுட்கும் முடி பொருள் உதவிய முழுமுதற் பொருளே! ஹே! கலியுக வரத! ஹே! கண்கண்ட தெய்வமே! யான் எனது தேகத்தை நோக்குங்கால் தேவரீரது அடிமையா யுள்ளேன்! எனது ஜீவனை நோக்குங்கால் தேவரீரது அம் ஸமாயுள்ளேன் எனது ஆத்மாவை நோக்கிலோ தேவரீரே யானுக உள்ளேன்.

ஹே! தோன்றுத் துணைவ! தேவரீர்திருவருள் தூண்டு வித்து ஆக்குவித்த! வேதாந்த சாராமிருத! சிவராஜ யோக மும், சிவஞானச் செம்பொருள் கோள் அறு திருப்பதிகம், பொழிப்பு உரை! ஐந்தெழுத்து! எட்டெழுத்து! ஸோஹம் காயத்திரி! பிரணவம்! கிருஷ்ணன்! இ ர ா ம ன் என்னும் வாசகங்களின்! வாச்சியங்களும் அதன் உண்மை நிலையும் ஆகிய இவைகள் யாவும் யாவர்க்கும் ஒப்ப என்றும் நிலை பெறும்படியும் அதனை முறையோடு குரு சன்னிதியிற் கேட் போர் சிந்திப்போர்க்கு அவர்கள் எண்ணிய எண்ணியாங்கு எய்த வேண்டுமெனவும் தேவரீரது பொன் போன்ற திரு வடிக்கு மீண்டும் மீண்டும்வணங்குகின்றேன்! ஓம் சரவண பவா.

ஆறிரு தடந்தோள் வாழ்க! அறுமுகம் வாழ்கவெற்பைக்
கூறுசெய் தனிவேல் வாழ்க! குக்குடம்வாழ்க செவ்வேள்
ஏறிய மஞ்ஞை வாழ்க யானை தன் அணங்கு வாழ்க
மாறிலா வள்ளி வாழ்க! வாழ்க சீர் அடியார் எலாம்.

அன்பே சிவம்.

ஓம் சாந்தி! சாந்தி!! சாந்தி!!!

ஓம் தத் ஸத்.

## இந்நூற் பதிப்பிற்கு பொருள் உதவி செய்த அன்பர்களின் திருநாமங்கள்.

| வேட்டைக்காரன்புதூர். | ரு. அ. பை |
|---|---|
| 1. V.A. பழனிச்சாமிக்கவுண்டர்அவர்கள் V.A.P. | 150—0—0 |
| 2. V. N. கன்னிமுத்துக்கவுண்டர் ,, | 100—0—0 |
| 3. V. P. வெங்கிடாசலக்கவுண்டர் ,, | 50—0—0 |
| 4. V. R. திருமலைசாமிக்கவுண்டர் ,, | 200—0—0 |
| 5. S. T. அருணுசலக்கவுண்டர் ,, (சோமனுதபுரம்.) | 50—0—0 |
| 6. A. S. சென்னியப்பகவுண்டர் அவர்கள் தென்அர்த்தநாரிபாளையம், தமது தந்தை சுப்பேகவுண்டர், கருப்பாத்தாள் அம்மை இவர்கள் ஞாபகார்த்தமாக... | 100—0—0 |
| 7. துளசிராஜுரெட்டியார் அவர்கள்(ரெட்டியாருர்) | 50—0—0 |
| 8. V. S. இராமசாமி செட்டியார்அவர்கள்(V.S.R) | 100—0—0 |
| 9. V. N. நாராயணசாமி செட்டியார் ,, மரப்பேட்டை, | 50—0—0 |
| 10. V. K. மலையப்பசுவாமி செட்டியார், அவர்கள் | 25—0—0 |
| 11. V. V. வெங்கிடுசுவாமி செட்டியார் ,, | 25—0—0 |
| 12. V. S. இராஜு செட்டியார் ,, | 25—0—0 |
| 13. V. S. கந்தசாமி செட்டியார் அவர்கள் தமது தந்தை சுப்புசெட்டியார் ஞாபகார்த்தமாக... | 25—0—0 |
| 14. V. P. சின்னுஞ்செட்டியார் அவர்கள் தமது தந்தை பெருமாள் செட்டியார் ஞாபகார்த்தமாக | 10—0—0 |
| 15. அருணுசலம்செட்டியார்அவர்கள் குத்தாம்புள்ளி, | 25—0—0 |
| 16. V. V. சற்குருசுவாமிசெட்டியார் அவர்கள் தமது மாதா மல்லம்மாள் அம்மை ஞாபகார்த்தமாக | 25—0—0 |
| 17. P. K. காளியப்பக் கவுண்டர் அவர்கள் தமது பாட்டியார் K. பெரியம்மாள் ஞாபகார்த்தமாக | 25—0—0 |
| 18. P. கந்தசாமிக்கவுண்டர் அவர்கள், மாதா, பிதாக்கள் பழனிக்கவுண்டர் மாராத்தாள் அம்மை ஞாபகார்த்தமாக (பொன்னுட்சியூர்) | 25—0—0 |
| 19. பழனியப்ப ஆசாரி அவர்கள் (ரெட்டியாருர்) | 25—0—0 |
| 20. N. பால்ச்சாமிசெட்டியார் அவர்கள் தந்தை நடராஜு செட்டியார் ஞாபகார்த்தமாக | 25—0—0 |

சிவமயம்.

# வேதாந்த சாராமிருத சிவஞானச் செம்பொருள்.

## அனுக்கிரக மணிகை.

சிவமயம்.

# வேதாந்த சாராமிருத சிவராஜயோக
## அனுக்கிர மணிகை.



சிவராஜயோகம் முற்றுப்பெற்றன.

சிவமயம்.

# வேதாந்த சாராமிருத சிவராஜயோக
## அனுக்கிர மணிகை.



சிவராஜயோகம் முற்றுப்பெற்றன.

# வேதாந்த சாராமிருத சிவஞானச் செம்பொருள்.

## அனுக்கிரக மணிகை.



உ
சிவமயம்.



கணேசாய நம,
குமாராய நம,
காசி விஸ்வேஸ்வராய நம:
நீலகண்டஞான தேசிக
ஸ்ரீ சற்குருப்யோ நம,

# சிவராஜயோகம்

## அணிந்துரை.

பரம புருஷார்த்தமாகிய மோக்ஷத்தை அடைவதற்கு சாதனமாகச் சாங்கியயோகம் கருமயோகம் என இரண்டு மார்க்கங்களை சுருதி, ஸ்மிருதி முதலிய நூல்களிற் கூறப்பட்டுஉள்ளன. அவற்றுள் சாங்கிய யோகம் ஒருவருக்கும், கரும யோகம் ஒருவருக்கும் எளிதாக இருக்கும். ஆயினும் சாங்கிய யோகமானது பூர்வ அப்பியாசமுடைய. உத்தம அதிகாரிகளுக்கே எளிதாய் இருக்கும். ஆதலின் ஏனைய அதிகாரிகளைக்குரித்தே இந்த யோகம் சொல்லப்படுகின்றது

யோகம் என்பது பிரமாணம், விபரியயம், விகற்பம், நித்திரை ஸ்மிருதி என்னும் ஐந்து விருத்திகளையும், நிரோதித்தலால், சித்தம், நிர்விஷய, சைதன்னிய மாத்திரமாக நிலைத்தலேயாம்.

## யோகம் சித்த நிரோதம்

அதாவது சித்தம் ஒருவழிப்படுதல் அந்த கர்மயோகமும், இயமாதி அட்டாங்கங்களும் சாதனமாகச் சொல்லப்பட்டிருக்கின்றது. அந்தச்சாதனயோகமும் வியவகார திருஷ்டியால் மந்திரயோகம், ஹடயோகம், சிவயோகம், இராஜயோகம் என நான்கு வகையாம்.

அவற்றுள் விதி பூர்வமாக மந்திரத்தை பன்னிரண்டு வருடம் வரையில் அப்பியசித்தல், மந்திரயோகமாம் இப்படி கிரமமாக அப்பியாசம் செய்தால் அணிமாதி சித்திகளைப் பெறலாம். அற்ப புத்தியுள்ள அதமனே இந்த மந்திரயோகத்தை அனுஷ்டிப்பான்.

இந்தயோகம் சர்வோத் தமர்கள் ஆகிய பிரமா, விஷ்ணு உருத்திரர்களாலும் — நாரதர் சுகர் யாஞ்ஞு வல்கியர் வசிஷ்டர் முதலிய ஞான சிரேஷ்டர்களாலும், மச்சேந்திரர் முதலிய சித்தர்களாலும் அப்பியசிக்கப்பட்டதேயாம்.

இந்த யோக சித்தி எதனது கிருபையால் உண்டாம் என்று விசாரம் செய்யின், ஈசுரன், குரு வேதம், அந்தக்கரணம் இந்த நான்கின் கிருபையால் உண்டாம்.

சற்குரு முதலிய ஞான சாமக்கிரிகளின் பிராப்தியே ஈசுர கிருபையாம்.

சாஸ்த்திரார்த் தத்தின் ஞாபகசக்தியே வேதத்தின் கிருபையாம்.

சாஸ்திரானுசாரமாகவும் தனது அநுபவ அநுசாரமாகவும் யதார்த்த உபதேசத்தை செய்தலே குரு கிருபையாம்.

சாஸ்திர அநுசாரமாகவும். குருவாக்கிய அநுசாரமாகவும் சாதனங்களை சம்பாதித்தலே அந்தக்கரணத்தின் கிருபையாம்.

குருவினது கிருபையும் ஈசுரனுடைய கிருபையும் வேண்டும் என்பது இது உலகப்பிரசித்தம்.

ஒருவருக்கு சித்தத்தின் பிரசன்னத்துவமே சுபா. சுபகர் மங்களைக் கெடுக்கின்றான். அவ்வியய சுகத்தினைப் பெறுகின்றான். என உப நிடதங்கள் கூறும் ஆதலின் இதனைப் பகவத் கீதை, வாசிட்டம் முதலிய நூல்களில் ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியாலும் ஸ்ரீ வசிட்டராலும் கூறியுள்ள அந்தச் சித்தத்தால் அடையும் தீமை, நன்மைகளையும் அதனை வெல்லும் திரமும், வென்றபின் அதனால் அடையும் பெரிய பேற்றினையும் நாம் அவர்கள் கூறியவாறே எடுத்துக்காண்பிப்பாம்.

ஆயத் தக்கது வேதத்தின் அந்தம்.
ஓயத் தக்கது வேட்கையின் பெருக்கே.



கொள்ளற் பாலது துயர் இலாதவர் நிலை
தள்ளற் பாலது தீயவர் நெறி,

அற்றது பற்று எனில்
உற்றது வீடு.



உ

சிவமயம்.

# சிவராஜயோகம்

## நூன் முகம்.

இவ்வுலகின் கண்ணே யாவருக்கும் துன்பம் ஒழிவிக்கவும் இன்பம் அனுபவிக்க வேண்டும் என்ற விருப்பமேயாம், அத்துன்பங்கள் அனைத்தினுக்கும் மூலவேர் அறியாமையே ஆகும், அதனை மூலத்தோடு கெடுக்கும் சாதனம் ஞானமே. அன்றி வேறு எவ்வித முயற்சிகள் செய்யினும் பயன் இன்றியதே ஆகும். அந்த ஞானம் விசாரத் தினாலேயே உண்டாகின்றன, ஆதலின் அதனை விசாரிக்கும் இடத்தில் ஞானம், ஆவது பரஞானம், அபரஞானம், என இரண்டு பிரகாரமாய் உள்ளன. அவற்றின் இலக்கணம் வேதாகமம், கீதை முதலிய கலைகளை ஆராச்சி செய்து, பொருள் நிச்சயம் பண்ணுதலே அபர ஞானம் என்றும், அந்நிச்சயத்தால் உணர்ந்த பொருளுக்கும் ஆன்மாவிற்கும் உள்ள ஏகத்துவத்தை அநுபவ ரூபமாக அறிதலே பரஞானம் என்றும் சொல்லுவர் அதன் தன்மையாவது தன்னை அறிந்தவன் தலைவனை அறிவான் எனக்கூறிய முதுரையைக் கூறுவாம்.

இந்த உடம்பின் கண்ணே பொருந்தியிருக்கின்ற ஜீவனது இயல்பினை அறிந்தால் அல்லது அப்பரம் பொருளை அறிய முடியாது அச்சீவனை அறியும் இயல்பு ஆவது யாது எனின் அறியாமையைக் கெடுத்தால் அல்லது அந்தச் ஜீவனையும் அறிந்து ஒருவரும் கிட்டக்கூடாது. இனி அறியாமையைக் கெடுக்கும் முறைமை யாதுஎனின், நனவில் சுழுத்திநிலை எவனுக்குடையது

அவனே அந்த அறியாமையைக் கெடுத்தவன், ஆவன் ஆனால் நனவிற் சுழுத்திநிலை அடையும் நெறியாது எனின் அந்தக்கரண வாதனைகளை ஒழித்தால் அபாவம் என்று சொல்லப்படும் நனவிற் சுழுத்தியும் கைகூடும்.

ஆனால் அந்தக்கரணவாதனை ஒழியும் நெறியாவது யோக சாதனையினால் அந்தக்கரணங்களுக்கு வாதனை ஒழியும் அந்த யோகத்தின் இலக்கணமாவது கரும யோகம், சாங்கியயோகம் என்றும் இரண்டு பிரகாரமாக இருக்கும் அந்த இருவிதயோகங் களின் இலக்கணம் ஆவது,

கருமயோகம் ஆவது இயமம், நியமம், ஆசனம், பிராணா யாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம் சமாதி என எண் வகையாய் இருக்கும்.

சாங்கிய யோகம் ஆவது ஏகமாய் உள்ள மெய்ப்பொருளை வேதாகமம் கீதை முதலியநூல்களை பிரஹ்ம நிஷ்ட பண்டிதர் ஆகிய குருவினிடம் கிரமமாகப் பொருள்களைத் தெளிவுறக்கேட்டு நிச்சயம் பண்ணிக்கொண்டு பின்னர் ஞான நிட்டை கூடி அது இது என்று சுட்டி அறியும். சுட்டு அறிவு அனைத்தும் ஒழிந்து கருவி கரணங்கள் அசைவு நீங்கப் பெற்று சுபாவ சித்தமாய் இருத்தல் ஆகும்.

அந்த இருவகை யோகத்தை அடையும் நெறியாவது யாது எனின் ஐம்புலன்களையும் ஒழிக்க வேண்டும் ஆனால் அந்த ஐம் புலன்களும் ஒடுங்கும் நெறியாவது யாது எனின்.

ஐந்து அவாவினையும் ஒழிக்க வேண்டும் ஐந்து அவா வினை யும் கெடுத்தலால் ஐம்புலன்களும் ஒடுங்கிவிடும், இனி ஐந்து அவாவினையும் கெடுக்கும் நெறியாது எனின் வீடு அடையக் கருதினேன் ஐம்புலன்களையும் அடல் வேண்டும் என்றும் அந்த ஐந்தும் கெடுப்பதற்கு அவற்றால் அநுபவிக்க விரும்பி வைத்த பொருள்கள் அனைத்தினையும் ஒருங்கே விடல் வேண்டும் என்றும்.



உ
சிவமயம்.

# சிவராஜயோகம்

## நூன் முகம்.

இவ்வுலகின் கண்ணே யாவருக்கும் துன்பம் ஒழிவிக்கவும் இன்பம் அனுபவிக்க வேண்டும் என்ற விருப்பமேயாம், அத்துன்பங்கள் அனைத்தினுக்கும் மூலவேர் அறியாமையே ஆகும், அதனை மூலத்தோடு கெடுக்கும் சாதனம் ஞானமே. அன்றி வேறு எவ்வித முயற்சிகள் செய்யினும் பயன் இன்றியதே ஆகும். அந்த ஞானம் விசாரத் திறலேயே உண்டாகின்றன, ஆதலின் அதனை விசாரிக்கும் இடத்தில் ஞானம், ஆவது பரஞானம், அபரஞானம், என இரண்டு பிரகாரமாய் உள்ளன. அவற்றின் இலக்கணம் வேதாகமம், கீதை முதலிய கலைசனை ஆராச்சி செய்து, பொருள் நிச்சயம் பண்ணுதலே அபர ஞானம் என்றும், அந்நிச்சயத்தால் உணர்ந்த பொருளுக்கும் ஆன்மாவிற்கும் உள்ள ஏகத்துவத்தை அநுபவ ரூபமாக அறிதலே பரஞானம் என்றும் சொல்லுவர் அதன் தன்மையாவது தன்னை அறிந்தவன் தலைவனை அறிவான் எனக்கூறிய முதுரையைக் கூறுவாம்.

இந்த உடம்பின் கண்ணே பொருந்தியிருக்கின்ற ஜீவனது இயல்பினை அறிந்தால் அல்லது அப்பரம் பொருளை அறிய முடியாது அச்சீவனை அறியும் இயல்பு ஆவது யாது எனின் அறியாமையைக் கெடுத்தால் அல்லது அந்தச் ஜீவனையும் அறிந்து ஒருவரும் கிட்டக்கூடாது. இனி அறியாமையைக் கெடுக்கும் முறைமை யாதுஎனின், நனவில் சுழுத்திநிலை எவனுக்குடையது

அவனே அந்த அறியாமையைக் கெடுத்தவன், ஆவன் ஆனால் நனவிற் சுழுத்திநிலை அடையும் நெறியாது எனின் அந்தக்கரண வாதனைகளை ஒழித்தால் அபாவம் என்று சொல்லப்படும் நனவிற் சுழுத்தியும் கைகூடும்.

ஆனால் அந்தக்கரணவாதனை ஒழியும் நெறியாவது யோக சாதனையினால் அந்தக்கரணங்களுக்கு வாதனை ஒழியும் அந்த யோகத்தின் இலக்கணமாவது கரும யோகம், சாங்கியயோகம் என்றும் இரண்டு பிரகாரமாக இருக்கும் அந்த இருவிதயோகங் களின் இலக்கணம் ஆவது,

கருமயோகம் ஆவது இயமம், நியமம், ஆசனம், பிராணா யாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம் சமாதி என எண் வகையாய் இருக்கும்.

சாங்கிய யோகம் ஆவது ஏகமாய் உள்ள மெய்ப்பொருளை வேதாகமம் கீதை முதலியநூல்களை பிரஹ்ம நிஷ்ட பண்டிதர் ஆகிய குருவினிடம் கிரமமாகப் பொருள்களைத் தெளிவுறக்கேட்டு நிச்சயம் பண்ணிக்கொண்டு பின்னர் ஞான நிட்டை கூடி அது இது என்று சுட்டி அறியும். சுட்டு அறிவு அனைத்தும் ஒழிந்து கருவி கரணங்கள் அசைவு நீங்கப் பெற்று, சுபாவ சித்தமாய் இருத்தல் ஆகும்.

அந்த இருவகை யோகத்தை அடையும் நெறியாவது யாது, எனின் ஐம்புலன்களையும் ஒழிக்க வேண்டும் ஆனால் அந்த ஐம் புலன்களும் ஒடுங்கும் நெறியாவது யாது எனின்.

ஐந்து அவாவினையும் ஒழிக்க வேண்டும் ஐந்து அவா வினை யும் கெடுத்தலால் ஐம்புலன்களும் ஒடுங்கிவிடும், இனி ஐந்து அவாவினையும் கெடுக்கும் நெறியாது எனின் வீடு அடையக் கருதினோன் ஐம்புலன்களையும் அடல் வேண்டும் என்றும் அந்த ஐந்தும் கெடுப்பதற்கு அவற்றால் அநுபவிக்க விரும்பி வைத்த பொருள்கள் அனைத்தினையும் ஒருங்கே விடல் வேண்டும் என்றும்.

தேவர்களும் தோத்திரம் பண்ணு நின்ற ஒப்பு அற்ற தமிழ் வேதம் ஆகிய திருவள்ளுவப் பயன் கூறுதலின் முன்னர் இரு வகைச்சார்பாகிய புறப்பற்றினை ஒ ழி த் து அதற்குமேல் அத னிடத்து வைத்த அவாவினைக் கழித்து.

அதற்குமேல் காணப்பட்ட விஷயங்களில் எழுந்து செல்ல ஒட்டாது. இந்திரியங்களைத் தடுத்து அதற்கு மேல் முன்னர் ஏறி இருந்த கரணவாதனைகளை ஒழித்து அதற்குமேல் நனவிற் சுழுத்தி நிலையைப்பெற்று அதற்குமேல் அறியாமையைநிவிருத்தி பண்ணி அதற்குமேல் ஜீவதரிசனம்பண்ணி அதற்குமேம் சிவதரி சனம் பண்ணி அதற்குமேஸ் இரண்டினது ஐக்கியம்கூடவேண்டு தலின் இந்த முறையே ஒவ்வொன்ருக நீத்துச் சென்று யாவரா லும் அறிதற்கு அறிய அந்தச்செவ்விய மெய்ப்பொருளை அறி வதே ஞானம் எனவும் அந்த ஞானத்தாஸ். அஞ்ஞானத்தை கெடுத்தலே வீடு எனவும் உயர்ந்தோர் கூறுவர்.

அ தா வ து வாழையினது மட்டைகளுக்கெல்லாம் உள் ளீடாய் விளங்கா நின்ற தண்டினை எடுத்தல் போல், ஒருவன் அநுபவ ருபமாய் மாயா, காரிய காரணங்களுக் கெல்லாம் முத் தினுள் நூல் போல உள்ளீடாய் விளங்கா நின்ற சிவத்தினை அறிதலே எங்கும் பரிபூரணம் ஆகிய பரஞானம் எனவும் அந்த வாழைத்தண்டின் மேலே பொருந்தி நின்ற மட்டைகள் அனைத் தினையும் ஒவ்வொன்ருக நீக்குதல் போலத் தம்மால் விரும்பப் பட்ட உட்பற்று ஆகிய இருவகைப் பற்றினையும் நீக்கி அஞ்ஞா னம் ஆகிய இருளைக் கெடுத்தலே வீ டு எனவும் பெரியோர் கூறுவர்,

இ து அ ன் றி வார்த்தை மாத்திரத்தால் அடைந்த பர ஞா ன த்தி னை யு ம் மோக்ஷ வீ ட் டி னை யு ம் வேறே யாம் அறிந்திலேம்.

எல்லாம் செயல்கூடும் என்னுனை அம்பலத்தே
எல்லாம் வல்லான்றனையே யேத்து,

ஓம் தத் ஸத்.

## வஸ்து நிர்த்தேசரூப மங்கலம்

சங்கரனைய் மாலாய்ச் சதுர்முகனைய்ச் சத்திகளாய்
ஐங்கரனைய்ச் செவ்வேளாய் ஆரியனைய் மங்கலம் செய்து
எல்லாவுயிர்களையும் ஈடேற்றி இன்பு அருள
வல்லான் எவன் அவனை வாழ்த்து.

## நிர்குண வஸ்து நிர்தேசரூப மங்கலம்.

இரவியும் மதியு வானும் வாயுவும் அனலும் அப்பும்
உரவிய மண்ணும் மற்றை உணர்பவன் தானும் ஆகிப்
பரவிடும் பன்னுன் காயும் அன்றுயும் நின்றே
உரைமனம் இறந்துஉள்ஓங்கும் ஒளியினை வணங்கல் செய்வாம்

## ஸ்ரீ ஆதி சங்கர பகவற் பாதர் வணக்கம்.

பொங்கரா பிறை முக்கண்ணும் புனிதமா மகிமை தங்கும்
கங்கைநீர் அதுவும் வேய்ந்த கடவுளே கருணை கூர்ந்து
இங்குளார் எவரும் உய்ய இறைவனைய் அவதரித்த
சங்கராசார்யன் நற்றுள் தலைமிசை அணிகின்றேனே.

பொங்கருள் ஞானம் நங்கள் புண்ணியம் அனைத்தும் ஒன்றய்
அங்கு புல் என்னவந்து ஆண்டு அருமறைப் பொருளை யார்க்கும்
அங் கையில் நெல்லி போல அளித்து அருள் அமலானந்த
சங்கர பகவற் பாதன் தாள் மலர் நம் தலைக்கே

## ஸ்ரீ குரு வணக்கம்.

அடியேனை யாள அருள் மேனி சாத்திப்
படி மீது வந்த பரனே—கொடியேன் என்று
யெண்ணுது இமைப்பு அளவில் இங்ஙனே வீடு அளித்த
கண்ணு கடை போகக் கா.

## ஸ்ரீ வாக் தேவியின் வணக்கம்.

ஆய கலைகள் அறுபத்து நான்கினையும்
யேய உணர்விக்கும் என் அம்மை—தூய
உருப்பளிங்கு போல் வாள் என் உள்ளத்தின் உள்ளே
இருப்பள் இங்கு வாராது இடர்.

## பாயிரம்.

### கடவுள் வணக்கம்.

அழகு வளரா நின்ற தாமரை மலரின்கண் எழுந்தருளி இருக்கின்ற பிரமனால் சிருஷ்டிக்கப்பட்ட இந்தப் பிருதிவிதத்துவம் முதலாக நாததத்துவம் ஈறாக விளங்கா நின்ற பிரபஞ்சங்கள் யாவுமே தன்னிடத்து கற்பித பேத வாஸ்தவ அபேதமாகப் பொருந்திய சிற்சத்தியாகிய கிரணத்தினாலே வந்து தோன்றின கானற்சலமாக அறிஞர்களது துவித புத்தியாகிய சந்திரனது ஒளியை மறைத்து அவர்களாகிய காந்தக் கற்களிடத்து கிருபையாகிய அக்கினியைத் தோன்றச் செய்து விளங்கா நின்ற சிவ சூரியனை நமது அஞ்ஞானமாகிய இருள் நீங்கும்படி எக்காலமும் வணங்குவாம்.

சூரியனை விட்டு நீங்காத கிரணமும், அக்கிரணத்தை விட்டு நீங்காத பொய்மையாய்த் தோன்றும் கானற் ஜலமும் அச்சூரியனது பிரகாசத்தினாலே சந்திர பிரகாசம் மறைதலும் காந்தக்கல்லில் அக்கினி தோன்றுதலும் அதனது சன்னிதி விஷேடத்தால் இயல்பாய் உண்டாவதுபோல சிவத்தினை விட்டு நீங்காத அபின்னசத்தியும், அந்தச் சத்தியை விட்டு நீங்காது பொய்யாய்த் தோன்றுகின்ற பின்ன சத்தியும் அந்தச் சிவஞானத்தால் அறிஞர்களின் துவித புத்தி மறைதலும், அவரிடத்து அருள் தோன்றுதலும் இவனதுசன்னிதிவிசேடத்தால் இயல்பாய் உண்டாம் என்பதும் சிவன், ஈசுரன் சகத்து இம்மூன்றும் பின்ன சத்தியால் தோன்றுவதினாலும், அந்தப் பின்ன சத்தியானது கிளிஞ்சிலில் வெள்ளி போலப் பொய்மையாய் தோன்றுகையினாலும், அபின்ன சத்தி சிவப்பிரகாசமே ஆகலினாலும் சத்திமானாகிய சிவத்திற்கு வேறாக இல்லையாகலானும் பரம் பொருள் ஒன்றைத் தவிர இரண்டில்லை என்பதும் கண்டு கொள்க.

## அருள் இறை வணக்கம்.

நாநாவாகத் தோன்றுகின்ற பூத பௌதிகங்கள் யாவுமே தானுயுள்ள தனது சொரூபம் உள்ளது உள்ளபடியே இருக்க நீரானது ஆலங்கட்டியாய் தடித்தது போல அஜங்கமாய் அதிசூட்சுமமாய் ஆகாயம் போன்று வியாபகமாயுள்ள பரம்பொருள் காமரூபத்தோடு கூடி சற்குருமூர்த்தமாய்த் தோன்றி எம்போல்வார்க்கு இன்பம் பொருந்திய நிதி போலவும், தாய் போலவும் தந்தை போலவும் கண்ணின்மணி போலவும் தபோபலம் போலவும், உடலின்கண் உயிர் போலவும் வந்து ஆட்கொண்டருளிய நீலகண்டன் என்னும் நாமத்தினையுடைய ஆசாரியனது அழகிய பாதங்களை வணங்குவாம்.

ஓம்.

## பாயிரம்.

நிதிகளை நினைக்குந்தோறும் மனப்பூரிப்பு வருவதுபோல ஆசாரியரை நினைக்குந்தோறும் வருதலின் நிதியென்றும் மாதா அமுதூட்டி உடலை வளர்த்தல்போல உபதேச மொழிகளால் அறிவை வளர்த்தலின் மாதா என்றும் தந்தை விதித்ததைச் செய்யவும், விலக்கியன தவிரவும்செய்தல்போன்று, நன்னெறிக்கண் செலுத்தலின் தந்தை என்றும் கண்மணியானது இது நன்று இது தீது என்று அறிவித்தல் போன்று பந்தம் துன்பம் என்றும் மோக்ஷமே இன்பம் என்றும் அறிவித்தலின் கண்மணி என்றும், தவப்பயன் எங்கே இருந்தாலும் அங்கே வந்து உதவி இன்பத்தைக் கொடுத்தல்போல் எங்கே இருந்தாலும் அங்கே வந்து உதவி இன்பத்தைக் கொடுத்தல் போல் எங்கே இருந்தாலும் தமது பூரணமாய் நிறைந்துள்ள சொருபத்தை விளக்கி இன்பத்தை கொடுத்தலின் தவப்பயன் என்றும் உடலின்கண் உயிர் அந்த உடலை அபிமானித்து அதன் கண் வரும் துன்பத்தைத் துடைத்தல்போல் உயிருக்கு உயிராய் இருந்து அவ்வுயிருக்குத் துன்பத்தினை விளக்கும் மும்மலங்

களையும் துடைத்தலின் உடலின் கண் உயிர் என்றும் சொல்லப்பட்டது.

ஒரு வியாதியைக் குறித்து கொடுக்கப்பட்ட பெரிய மருந்தினை உட்கொண்ட காலத்தில் அம்மருந்தானது முன் இருந்த வியாதியை ஒரு சிறிதே நீங்கிப் பின்னரே தனது சாரம் உடலிலே நின்று ஊறி அந்த உடலை வருத்துதல் செய்யும் வியாதிகளை எல்லாம் ஒருங்கே நீக்குதல் போல- வஞ்சகனாகிய எனது மனத்தின் கண் நீங்குதற்கு அரிதா இருந்துள்ள எவ்வகைப்பட்ட பற்றுக்களையும் பின் சில நாட்களில் விட்டு நீங்கும் வண்ணம் யான் திருவடியைச் சார்ந்த அன்றே கிருபா நோக்கம் செய்தருளிய ஆசாரியனது கிருபை இருந்த தன்மையை எக்காலத்தும் மனத்தினாலே நினைத்துவாக்கினாலே தோத்திரம் பண்ணுவாம். வைத்தியன் கொடுத்த மருந்தினை ஒருவன் உட்கொண்ட காலத்தில் அம்மருந்தானது முன்னர் ஒரு சிறிதே வியாதியை நீக்கி அவன் சொன்ன பத்திய பாகப்படியே நிற்க அம்மருந்தாவது உடலிலே நின்று ஊறி பின்பு மற்றைய வியாதிகள் எல்லாம் ஒருங்கே நீக்குதல்போல் ஆசாரியர் கிருபா நோக்கம் வைத்த காலத்தில் அக்கிருபா நோக்கம் முன்னர் சிலபற்றுக்களை நீக்கி அவர் அருளிச்செய்த நன்மார்க்கத்தின்படியே நிற்க அக்கிருபை மனத்தின்கண் மாறுதநின்று ஏனைய பற்றுக்களும் ஒழிந்தன.

## பாயிரம்.

### நூல்களின் சிறப்பு.

இராஜாவின் வாய்மொழிகள் எழுதப்பட்ட திருமுகமானது வரக்கண்டபோது அவனது ஆணையின் வழி நின்றோர் மனம் நடுக்குற்று அந்தத் திருமுக வார்த்தைகள் யாவுமே நன்றாய் விசாரித்து அதன் கண் சொல்லிய பிரகாரமே செய்து முடிப்பாரேயானால் மட்டில்லாத பிரஹ்மானந்தத்தை தருதற்பொருட்டு எமக்கு இறைவனால் கூறப்பட்ட உறுதி மொழிகளானால் வேறேயும் வார்த்தைகள் என்னை உள்ளன? வேதாக

மங்களை அவ்விறைவன் எனவே கண்டு அவற்றின் கண்ணே சொல்லப்பட்ட முறையே செய்து முடிப்பதே அல்லாமல் இராஜாவின் திருமுகத்திற்குசொன்னபடியே செய்தோர்க்கு இன்பமும் மாறுபட்டவர்க்கு துன்பமும் இம்மைக்கண் வருதல் போல வேதாகம நெறியை இறைவன் ஆணையின் வழி நின்றவர்க்கு வீட்டின்பமும் அதற்கு மாறுபட்டவர்க்குப் பிறவித்துன்பமும் மறுமைக்கண் வருமே என்பதை அறிந்து இராஜாவைக் காணாத இடத்தும் அவனது வாய்மொழி வரைந்த திருமுகத்தை அவன் எனக் காணுதல்போல இறைவனைக் காணாத இடத்தும் அவனது வாய் மொழிகளாகிய வேதாகமங்களை அவ்விறைவன் எனவே காணவேண்டுப.

### யோக சாதன் இலக்கணம்

ஜெயம் உள்ளவனும் சாந்தனும்முத்தியில்இச்சைஉடையவன் ஆகவும் தோஷங்கள் இல்லாதவனும் போகங்களில் பற்று இன்றியவனும் சற்குணம் உள்ளவனும் பிரஹ்ம நிஷ்ட பண்டிதர்களால விதிககப்பட்ட கர்மம் உடையவனும காம சங்கற்பம் இல்லாதவனும் இயமம் நியமம் உடையவனும் சர்வ சங்கப்ரித்தியாகியும் வித்கை உள்ளவனுயும், கோபத்தை வென்றவனுயுர், சத்தியம் தர்மத்தை விரும்பியவனுயும் குரு பணிவிடையை விரும்பியவனுகவும் மாதா, பிதா முதலியோரை உபசரிப்பவனுயும், தனது ஆசிரமத்தில் உள்ளவனுயும் நல் ஒழுக்கம் உடையவனுயும் உள்ளவன் எவனே அவனுக்கே ஞாதாக்களால் செவ்வையாக உபதேசித்ததற்கு உறியன் என்பர். இது அன்றி பெண்களை கூடுதலும் வயிறு வளர்த்தலுமே வேலையாய் இருக்கும் வேஷதாரிகளுக்கு இவை உபதேசிக்கத்தக்கது அன்று என்றும் சில இடங்களில் கூறி உள்ளன. இகலோக பரலோகங்களில்உள்ள வனிதாதி விடய போகங்களில் விரக்தனும், சமசாரத்தினின்றும் விடுபட்டு யோக நிலையினையே அடைய வேண்டும். என்ற விருப்பம் உடையோனே இந்த யோகத்திற்கு அதிகாரியாவான்.

யோக சாதகன் வசிக்கும் இடத்தின் இலக்கணம்.

நல்ல ராஜ்யமும் தர்மம் நிறைந்துள்ளதும், சுபிட்சம் உள்ளதும் (பஞ்சமஇல்லாததும்) திருடர், புலி முதலியவற்றின் உபத்திரவம் இல்லாததும் ஆகிய தேசத்தில் வில் அளவு கல்லும் அக்கினியும் ஜலமும் இல்லாத ஏகாந்தம் ஆகிய சிறிய மடத்தில் யோகிகள் வசிக்க வேண்டும். இராஜாவின் கருமம் ஆவது அல்லது தன்மை ஆவது எதில் நன்மையாய் இருக்கின்றதோ அது நல்ல ராஜ்யம் எனப்படும். அரசன் எவ்வண்ணமோ அவ்வண்ணமே குடிகளும் என்னும் அரசனது நன்மையால் குடிகளின் நன்மையும் உண்டாம்' அதனுல் யோகப்பயிர்ச்சி உடையோருக்கு அநுகூலமாகிய ஆகாரம் முதலியவற்றின் இலாபம் உண்டாகின்றது, அதில் வெகுகாலம் வசிக்கத் தக்கதேயாம். வில் அளவு நாலு முழம் வரையில் ஆசனத்திற்கு கல். அக்கினி ஜலம் முதலியவை இருத்தல் கூடாது என்பது ஆம்.

ஏகாந்தமாவது ஜனங்கள் இல்லாத இடம். அதாவது ஜனங்களின் சேர்க்கை இல்லாத இடம். அதுவே கலகமில்லாத நிலையாம். ஜனசங்கம் ஆனது கலக முதலிய உண்டாகவே செய்யும். அநேகர் வசிப்பதால் கலகம் உண்டாகும் இருவர் இருந்தால் வார்த்தை உண்டாகும் ஆதலால் சுபகாலத்தில் சுபதேசத்தில் சிவக்ஷேத்திரம் முதலியவற்றில் ஜனங்கள் இல்லாததும் ஜந்துக்கள் இல்லாததும் பாதம் இன்றியதும் செவ்வையாய் மெழுகப்பட்டதும், காட்சிக்கு இனியதும், கந்தம், தூபம் முதலியவற்ருல் பரிமளிக்கப்பட்டதும் உதிர்ந்த புஷ்பங்கள் நிறைந்ததும், மேற்கட்டி முதலியவற்ருல் அலங்கரிக்கப்பட்டதும், அரும்பு மலர், சமித்து நீர், பழம், கிழங்கு, என்பவற்ருேடு கூடியதும் ஆகிய இடங்களே யோக அப்பியாசத்திற்கு உரிய இடமாம்.

யோக அப்பியாச காலம் ஆவதுவசந்தருதுவானசித்திரை

வைகாசி மாதங்களிலும் சரத் ருதுவான ஐப்பசி, கார்த்திகை மாதங்களிலும் யோகம் அப்பியசித்தால் சரீரத்தில் எவ்வித ரோகமும் உண்டாக மாட்டாது. நிர்விக்னமாகவே நிறைவேறும்.

உ

## மடத்தின் இலக்கணம்.

சிறு வாயில் உள்ளதால் பலகணி அமைந்த ஜன்னல்களும் பள்ளமும் பெருச்சாளி முதலியவற்றின் வளையும் இல்லாததாய் மிக உயரமும், மிக தாழ்ந்ததும் அல்லாததாய் பசுவினது சாணத்தால் செவ்வையாக மெழுகப்பட்டதாய் நின்மலமாய் கொசுகு, மூட்டைப்பூச்சி முதலிய எவ்வித ஜெந்துக்களும் இல்லாததாய் மடத்திற்கு வெளியே மண்டபம் வேதி (மேடை) முதலியவற்றால் மிகவும் இரமணீயமாய் நாற்புறமும் மதில்களாற் சூழப்பட்டதாய் இருக்க வேண்டும்.

இவ்வாறே மடத்தின் இலக்கணம் சிவயோகப்பிரதீபிகையில் இயமம், நியமங்களோடு கூடிய புருஷன் சகல சங்கமும் விட்டவனாய், கல்வி உடையவனாய், சத்திய தருமம் உடையவனாய், கோபத்தை வென்றவனாய், குரு பணியில் விருப்பு உடையவனாய் பிதா, மாதாக்களால் விதிக்கப்பட்டவனாய், தனது ஆசிரமத்திற்குரிய நல் ஒழுக்கம் உடையவனாய், ஞாதாக்களின் உபதேசம் பெற்றவனாய் பழம், கிழங்கு நீர் முதலியவற்றோடு கூடிய தவ வனத்தை அடைந்து இரம்மியமானதும் வேத கோசத்தோடு கூடியதும் பிரஹ்ம வித்துக்களால் சூழப்பட்டதும் பழம், கிழங்கு, நீர், புஷ்பம் முதலியவற்றால் நிறைந்துள்ளதுமான க்ஷேத்திரம் அல்லது நதி தீரம் அல்லது கிராமம், அல்லது நகரம் என்னும் இடங்களில் உயரமும், ஆழமும், அகலமும் இல்லாததாய் சிறுவாயில்உள்ளதாய் கோமயம் முதலியவற்றால் மெழுகப்பட்டதாய் எல்லா

விதத்திலும் பாதுகாப்பு உள்ளதாய் இருக்கும் ஒரு சோபனமாகிய மடத்தைச் செய்து அதில் வேதாந்த சிரவணம் செய்து கொண்டு யோகம் அப்பியசிக்கக்கடவன். யோகம் அப்பியசிக்கும் இடம் காற்றுப் போகாத குகையும் நாலு முழ அகல, நீளமும், வட்ட ஆகிய வாயில் உள்ளதும் தேக தோஷங்களை போக்குவதும் வாயு தோஷத்தை விலக்குவதும், நாடிகளில் உள்ள தோஷம் நீங்கி உள்ளே விகாசத்தைத் தருவதும் இருதயத்தில் ஸ்திரத்தன்மையை உண்டு பண்ணுவதும் ஆக இருக்க வேண்டும் மேலும் அந்த இடத்தில் நெய் விளக்கே எரிய வேண்டும், ஏனெனில் எண்ணெயால் எரிகின்ற விளக்கினைப் பார்க்கில் செவ்வையக்கும் பித்த வாயு சீக்கிரமாய் வேறு பக்கம் வெளிப்படும். ஆகையால் நெய் விளக்கே எரிக்க வேண்டும் என்று சொல்லப்பட்டிருக்கின்றது.

முனிவர்கள் தீர்த்தங்கள், நதிகள், விருக்ஷங்கள், பிரம்மரிஷிகள், மலைகள் முதலியவற்றால் சிறப்பிக்கப்பட்டதாயும், சிற்பத்தாற் செய்யப்பட்டதாயும் உள்ள இரம்மியமான முறையில் அமைக்க வேண்டும். சித்திரத்தில் உள்ள சித்தர்களைப்பார்த்து மதிமிக முயற்சி உடையதாகும். சாந்தமுள்ள முனிவர்களைக்காணுங்கால் மனம் சாந்தியடையும் அந்தமடத்தின் மத்தியில் சம்சார மண்டலத்தை எழுத வேண்டும். ஓரிடத்தில் பயங்கரமாயுள்ள வற்றினையும், வியாதியஸ்தர்களையும் தாழ்ந்தவர்களையும் எழுத வேண்டும் மத்தர்களையும் ஒழுகுகின்ற இரணம் உள்ளவர்களாயும் உள்ளவரைப் பார்த்து சித்தியில் விருப்பமுள்ள யோகியானவன் சாரம் அற்ற சம்சாரத்தில் பிரியம் இல்லாதவனாய் இருக்கிறான் என்று மடத்தின் இலக்கணம் சொல்லப்பட்டிருக்கின்றன.



## பகவற்கீதை 6-வது அத்தியாயம்

### 33-வது சுலோகம் அருச்சுனன் வினு

ஹேமதுசூதன நீர் சமத்துவத் தன்மையாற் கூறியருளிய யோகத்தின் ஸ்திர நிலையை மனத்தின் அதி சஞ்சலத்தால் நான் பார்க்கின்றேன் இல்லை.

### இதன் விரிவுரை.

ஹேமதுசூதன ஹேசர்வவைதிக சம்பிரதாய பிரவர்த்தக சர்வேஸ்வரனுகிய நீர் எல்லா இடத்தும் சமதிருஷ்டி வடிவமாக்க கூறினீர், அதாவது சித்தத்தில் உள்ள விஷமதிருஷ்டிக்குக் காரணமாகிய இராகத் துவேஷாதிகளின் நிராகரணத்தால் யோகத்தைக்கூறி அருளினீர்! அச்சர்வ மனோ விருத்திகளின் நிரோத வடிவ யோகத்தில் நெடுநாள் இருக்கப்பட்ட நிலையை அர்ச்சுனன் ஆகிய யான் கண்டிலேன் அதாவது அத்தன்மையை சர்வ விருத்தி நிரோத வடிவ யோகம் நெடுநாள் வரையில் நிலைக்கும் என்னும் சம்பாவனை எனக்கு உண்டாகவில்லை, ஏனெனின் இம்மனம் மிகச் சஞ்சலமானது ஒரு க்ஷண மாத்திரமேனும் நிலைப்பதில்லையாதலின் அத்தன்மையை சம்பாவனை எனக்கு உண்டாகவில்லை.

ஹே பகவன்! இம்மனம் சஞ்சலமானது அதாவது மிகுந்த சலன சுபாவமுடையது ஒருபோதும் நிலைப்படுவதில்லை இஃது எவ்வுலகத்திலும் அநுபவ சித்தமாம், அஃதல்லாமலும் பிரமாதியும் ஆம் ஆண்டுத் தேகேந்திரியங்களை கலக்கமடையச் செய்யும் சுபாவம் பிரமாதியாம். அதாவது இம்மனம் தேகேந்திரியங்களை கலக்கம் அடையச்செய்வது ஆதலின் அவைகளின் விவசகாரணமாதலின் பிரமாதியாம் அஃதல்லாமலும் மலமுடையதும்ஆம். அதாவது அபிப்பிராயப்பட்ட விஷயத்தினின்றும் இம்மனம் எவ்வுபாயத்தினுலும் திருப்பமுடியாததேயாம். இவ்வுலகத்திலும் ஒரு காரியத்தில் முயன்றவனை அதில் நின்று

ஒருவராலும் திருப்ப முடியாததாகில் அவன் பலமுடையான் எனப்படுதல் போலவே மனமும் ஆம். அங்ஙனமே இம்மனம் திடம் உடையதும் ஆம். அதாவது பல பிறப்பிற் பல்லாயிரம் வாசனைகளோடு கூடியது ஆதலின் பேதித்தற்கு முடியாததே ஆம், அல்லது தந்து நாகம் போலச் சேதிக்கப்படாததால் திடமாம்! ஈண்டு தந்து நாகமாவது நாகபாசமாம் அல்லது நீர் மடுவில் உள்ள பிராணி விசேடமாம்! ஈண்டு அர்ச்சுனன் கூறிய சஞ்சலம் பிரமாதி மலவத் திருடம் என்னும் நான்கு மனோ விசேஷங்களில் முன் முன் விசேஷண சித்தியில் பின் பின் விசேஷணங்காரணமாம், இம்மனம் திடம் ஆதலின் பலவான்! பிரமாதி ஆதலினால் சஞ்சலம்! மிக்க மதமுடைய காட்டானையை அடக்கல் மிகவும் கடினமாவது போல! இம்மனம் அடக்கலுமேயாம், அதாவது சர்வ விருத்திகள் அற்றதாய்ச் செய்வது மிகவும் கடினம் என்று உணர்கின்றேன். எனக்கூறி மேலும் அதற்கு ஒரு திருஷ்டாந்தங் கூறுகின்றான்! ஹே பகவன்! வானில் உலாவித்திரியும் வாயுவினைச் சலிப்பின்றி அடக்கல் முடியாததே போல எப்போதும் சலித்துக்கொண்டிருக்கும் மனத்தினை அடக்கல் முடியாததேயாம்.

உதாரணம் வாசிட்டம்.

ஹே இராகவா பெருங்கடலைக் குடித்தலினும் மேரு மலையை அடியோடு பெயர்த்தலினும், தீயினை உண்ணலினும் இம்மனத்தை அடக்கல் மிக மிக கடினமேயாம். ஈண்டு கிருஷ்ண என்னும் சம்போதனையால் அர்ச்சுனன் ஸ்ரீபகவானை குறித்த இப்பொருளை சூசிப்பித்தான். அதன் பொருளாவது அன்பர்களின் நீக்க முடியாத துன்பத்தினை நீக்குபவனும் அல்லது அன்பர்களுக்கு எவ்வாற்றானும் புருடார்த்தத்தைக் கொடுப்பதனாலேயே கிருஷ்ணன் எனப்படுவன்.

தாங்கள் அத்தன்மைய பெயருடையர் ஆதலின் தங்களுடைய பெயரைப் பொருளுடையது ஆக்குதற் பொருட்டு என் மனோசஞ்சலம் நீக்கொணாததேனும் தாங்கள் அவசியம் நீக்கி அருளுவீர். அங்ஙனமே இச்சமாதிச் சுகம் கொடுக்கொணாததேனும் தாங்கள் அவசியம் கொடுத்தருளுவீர் ஈண்டு அருச்சுனனுக்கு இது கருத்தாம் தத்துவ ஞானம் உண்டாயினும் பிராப்த கருமத்தை நுகர்தற் பொருட்டுச் சீவித்திருக்கும் வித்துவானுக்குக் கருத்திருத்துவ போக்திருத்துவ சுக துக்க இராகத் துவவேஷ முதலிய சித்த தருமங்கள் பாதிதானுவிருத்தியால் உள்ளதாயினும் கிலேச காரணங்கள் ஆதலின் பந்த வடிவமேயாம் அன்றியும் சர்வசித்த விருத்தியின் நிரோத வடிவ யோகத்தால் பந்த நிவிருத்தி வடிவ ஜீவன் முத்தியைத் தேடிக் கொள்வதால் அவ்வித்துவான் பரமயோகி எனப்படுவன் எனத் தாங்கள் முற்கூறியருளினீர்கள், அவ்வர்த்தத்தில் யான் கூறுவது ஆவது, அப்பந்த நிவிருத்தி சாக்ஷி சேதனத்திற்கா, அல்லது சித்தத்திற்கா, முதலாவது எனின் அது பொருந்தாது என்னை முன்னுண்டாகிய தத்துவ ஞானமே அச்சாக்ஷியினது பந்தத்தை நிவிர்த்திக்கில் அதில் யோகத்திற்கு சிறிதளவும் உபயோகம் இன்மையாம். இரண்டாவது எனின் அதுவும் அமையாது. என்னை அப்பந்தம் சாக்ஷி சேதனத்தில் ஆரோபிதம் ஆவது போல் சித்தத்திலும் ஆரோபிதம் ஆயின் அதன் நிவிருத்தி கூடும். மற்றோ அப்பந்தம் சித்தத்தின் சுபாவமாம் ஆரோபிதம் அன்று எதற்குளது சுபாவமோ அது நீக்க ஆயிரம் உபாயத்தானும் நீக்க இயலா,

எங்ஙனம் நீரின் தன்மை, தீயின் வெப்பம் பல உபாயத்தானும் நீரினின்றும், தீயினின்றும் நீக்க இயலாததே போலச் சித்தத்தின் சுபாவமும் நீக்கொணாததேயாம்.

சாஸ்திரத்தில் சித்தம் க்ஷண பரிணாமியெனக் கூறப்பட்டுள்ளது. அதாவது சைதன்யத்தினும் வேறாகிய அனான்ம வஸ்துக்கள் அனைத்தும் க்ஷண பரிணாமித் தன்மையை அடையும் அல்லது பிராப்த கரும வடிவப்பிரதி பந்தகமுதிதாகவே பந்த நிவிருத்தி கூடாது. என்னை ஞான, அஞ்ஞான காரியங்

களைக் கெடுக்கப் புகுந்த தத்துவ ஞானத்தைப் பிராப்தகருமம் தடைப்படுத்தி தனது போகத்தைக் கொடுத்தற் பொருட்டு இத்தேகாதி சமுதாயத்தை நிலைப்படுத்துகின்றது. அதாவது அச்சங்காதத்தினை நிவிருத்தியாக விடுவதே இல்லை. சித்த விருத்தி இன்றி அப்பிராரப்த கருமம் சுக துக்கவடிவ தனது பலத்தைக் சம்பாதியாது சுகாதாரமாகவேனும் துக்காகார மாக வேனும் உண்டாகும் சித்த விருத்தியைச் சாஸ்திரத்தில் போகம் என்பர்.

அஃதிலாது சுக துக்க போகங்கள் அமையாது, ஆதலின் யோகத்தால் சுபாவமான சித்த பரிணமத்தின் அடக்கம் ஏக தேசத்தில் உண்டாயினும் உண்டாம். அங்ஙனம் ஆயினும் தத்துவ ஞானத்தினும் பிரபலமானது போல யோகத்தினும் பிராப்தம் பலமுடையதாம். அஃது உள்ளத்தில் உளதாகவே சலனத் தன்மையும் அவசியமேயாம். ஆதலின் யோகதகால் சித்த சஞ்சலத்தை நீக்குவது கூடாதென்று எனது அஞ்ஞா னத்தால் உணர்கின்றேன். அங்ஙனமாகவே தாங்கள் தனது ஆன்மாவைப்போல எவ்விடத்தும் சமமாய்ப் பார்ப்பவன் பரமயோகியென திருவாய் மலர்ந்தருளியது அமையாது என.

ஹே அர்ச்சுன உனது வாக்கால் உனது சித்த சரிதம் நன்கு உணர்ந்தேன். ஆனாலோ நீ இம்மன நிக்கிரகம் பண்ணு வதில் சமர்த்தன் என அர்ச்சுனனைப் சந்தோசப்படுத்துவதில் அர்ச்சுன் என விளித்தருளினர். ஹே மஹாபாகோவென நேரே மஹாதேவரோடும் போர்புரிந்ததால் மகத்தாகியதோள் களை உடையவன் மஹாபாகுவாம். இத்துணை கூறியதால் ஸ்ரீ பகவான் அருச்சுனன் இடத்தில் நிரதிசய உக்கிருஷ்டத் தன்மையை குறிப்பித்தருளினர். அதாவது அத்தன்மையனுகிய நீ இம்மனம் அடக்குவதில் அவசியமாய்ச் சமர்த்தன் ஆகுவை என்பதாம். நீ முன்னர் மனம் துர்நிக்கிரகம் என்றும அதாவது பிராப்த கருமம்பிரபலத்தால் அடக்கம்இலா மனத்தோனுக்கு கஷடத்தானும் மனோநிக்கிரகம் முடியாதெனவும்சுபாவமாகவே

சஞ்சலம் எனவும் கூறினை முற்கூறிய பிரமாதி பலவத்திருடம் என்னும் விசேஷணங்களை ஒன்றுபடுத்தி ஈண்டு துர்நிக்கிரகம் எனக்கூறியருளினர். நீ கூறியதில் சிறிதளவும் ஐயம் இல்லை, அதாவது நீ கூறியது உண்மையே அங்ஙனமாயினும் அடக்கமுள்ள மனத்தோன் சமாதி மாத்திர வடிவ உபாயத்தானும் யோகியானவன் அப்பியாசனவைராக்கிய வடிவ உபாயங்களானும் மன நிக்கிரகம் பண்ணுவன், அதாவது மனதைச் சர்வ விருத்திகளும் அற்றதாய்ச்செய்வன். ஈண்டு மனோநிரோதம் பண்ணுத அடக்கம் இலா மனத்தானின் மனோ நிரோதம் பண்ணும் அடக்கமுள மனத்தோன் விசேஷமுடையவன் என்றுஉணர்த்தி அருளற்பொருட்டு ஹே கௌந்தேயா என்னும் சம்போதனத்தால் எனது தந்தையின் சகோதரி புத்திரன் ஆனதால் யான் உனக்கு அவசியம் உனக்கு யான் சுகத்தையே கொடுப்பன் எனக்குறிப்பித்தருளினர். ஈண்டுச்சுலோகத்தின் முற்பகுதியால் சித்தத்தின் ஹடநிக்கிரகம் கூடாதெனவும் கூறி அருளினர். இரண்டாவது பாதியால் சித்தத்தின் கிரமநிக்கிரஹம் கூடும் எனவும் கூறிஅருளினர். ஈண்டு பகவானுக்கிது கருத்தாம். மன நிரோதம் இருவகைத்தாம். அட நிக்கிரகம் கிரம நிக்கிரகம் என ஆண்டு ஞான இந்திரியங்களும் கருமேந்திரியங்களும் கோளகமாத்திர நிரோதத்தால் அடமாய் நிக்கிரகப்படுவன போல மனதையும் அடமாய் நிக்கிரகம் பண்ணுவேன் என்னும்பிராந்தி மூடனுக்குண்டாம். ஆனாலோ இந்திரியங்களைப்போல் மனதின் அடநிக்கிரகம் கூடாது. என்னை மனம் இருத்தற்கிடம் இருதயமாம் அதை நிரோதித்தற் கேலாமையின் கிரமமாய் அடக்கலே உசிதமாம். இது வசிட்டமுனிவராலும் கூறப்படுகிறது.

சித்தசுபாவத்தை உணர்ந்தவன் உத்தமம் ஆன யுத்திகள் இன்றிக்கேவலம் ஆசனத்தில் உட்கார்ந்துகொண்டு மனத்தைத் ஜெயிக்கமாட்டான் துஷ்டமதயானை அங்குசம் இன்றி வசப்படாததேபோல, இம்மனமானது உத்தமமான யுக்திகளின்றி வசப்படாது. அந்தயுக்திகளாவன முதலாவது அத்தி

யான்மை வித்தியாப்பிராப்தி (2) இரண்டாவது, மகாத்மாக்களின் சங்கம் (3) மூன்ருவது, வாசனுத்தியாகம், (4) நான்காவது, பிராணன் அடக்கல் ஆம் இவைகளே மனோஜயத்தின் காரணங்கள், இவைகள் இருக்கினும், அடமாய் மனோ நிக்கிரகம் பண்ணுவோன், தீபத்தை ஒழித்து மையினுல் இருள் நீக்குபவனே ஆவன் இன்னும் இப்பொருளேயே விளக்கிக் கூறுவாம் ஆண்டு கிரமமாய் மனோநிக்கிரகம் பண்ணுவதில், அத்தியான்ம வித்தை ஒன்றே உபாயமாம். என்னை, அவ் வித்தை காணப்படும் உலகம் மித்தை எனவும், திருஷ்டாவும் சாக்ஷியும் ஆகிய ஆன்மாப் பரமார்த்த சத்தியமாயும் பரமானந்த சுவப்பிரகாசமாயும். உள்ளது எனவும், உணர்த்துகின்றது. அத்தன்மைய உணர்வு உண்டானதின் பின்னர் இம்மனம் தனது விஷயபூத திருசியப் பொருள்களில் மித்தை என்னும் ஏதுவால் பிரயோஜனம் இன்மையை நிச்சயித்து, பிரயோஜனம் உடையது பரமார்த்த சத்திய பரமானந்த திருஷ்டாவெனவும், சுயமபிரகாசமாயும் உள்ள ஏதுவால் நிச்சயிதது விறகின்றிய தீப்போலத்தானே சாந்தி ஆகின்றது. ஆதலின் அந்த அத்தி ஆனம் வித்தியாப் பிராப்தி மனோ நிக்கிரக. உபாயமாம் உணர்த்திய தத்துவத்தை, நன்கு உணராதோனும் உணர்த்திய தத்துவத்தை மறப்பவனும் ஆகிய இவர்களுக்கு மனோ நிக்கிரகத்தில் சாது சங்கமே உபாயமாம. என்னை அம்மகாத்மாக்கள் இவ்வதிகாரிக்கு அடிக்கடி தத்துவ உணர்வையும், ஸ்மரணத்தையும் உண்டாக்குவார்கள். வித்யாமதம்முதலிய பீடிதங்களால் சாது சங்கத்தை அடையாதவனுக்கு முற்கூறிய விவேகத்தால் அவ்வாசனையின் பரித்தியாகமே உபாயமாம் அதை நீக்க முடியாதவனுக்குப் பிராண ஸ்பந்தன நிரோதமே உபாயமாம் என்னை பிராணசலனம் வாசனை என்னும் இவ்விரண்டுமே சித்தத்தைச் செலுத்துவனவாம். இந்த இரண்டின் நிரோதத்தால் சித்த சாந்தி அவசியமேயாம் இது ஸ்ரீ வசிஷ்ட முனிவராலும் கூறப்பட்டுளது.

ஹே ராமச்சந்திர! இந்தச் சித்தமாகிய விருக்ஷத்திற்கு இரண்டு விதைகளாம். ஒன்று பிராண சலனம். மற்றது வாசனை; இவற்றில் ஒன்று கெடில் இரண்டும் நாசமாம. (1) பிராணயாம திட அப்பியாசத்தாலும். குரு உணர்த்திய யுத்திகளாலும், ஆசன போஜன நியமங்களாலும் பிராண சலனம் நிரோதம் ஆகின்றது. (2) அசங்கன் என்னும் வியவகாரத்தாலும், உலக சிந்தனை நீக்கத்தாலும், தேகத்தை நாசம் உடையதெனப் பார்த்தலாலும் இவ்வதிகாரிக்கு வாசனை எழுவதில்லை. (3) வாசனை நீக்கத்தாலும், பிராண சலன நிரோதத்தாலும், சித்தம் சித்தமற்ற தன்மையை அடைகின்றது (ஆதலின் உனக்கு எது இஷ்டமோ அதனை நீ செய்குதி 4) ஹே இராகவா! பாகியமான அனுன்ம பதார்த்தங்களை. வஸ்து வடிவத்தாலும். இராகத்தாலும் உள்ளே சிந்தித்தல் மாத்திரையே சித்தவடிவம் என்று எண்ணுகின்றேன். (5) ஏககாலத்தில் இவன். விடத்தக்கதும, கொள்ளத்தக்கதும் ஆகிய வஸ்துவைச் சிறிதளவும சிந்தித்தல் செய்யாது எல்லாவற்றையும் நீக்கி இருக்குங் காலத்தில் சித்தம் உற்பன்னமாகாது. (6) மனம் சர்வ வாசனைகளும் இன்மையின் வஸ்துவைச் சிறிதளவும் மனனம் பண்ணுதபோது அமனஸ்தன்மை உண்டாகின்றது அது பரான்ம பதத்தைக் கொடுக்கத் தக்கதேயாம் (7) இத்துணை கூறியதால் இரண்டு உபாயம் சித்திக்கின்றது. பிராணசலனநிரோதத்தின்பொருட்டுவைராக்கிய வடிவ உபாயமும் ஆம். சாது சங்கமும் அத்தியான்ம ஞானப் பிராப்தியும் இவ்விரண்டின் உபபாதம் ஆனதால் அந்நியதா சித்தமாம். ஆதலின் இவ்விரண்டும் அப்பியாச வைராக்கியங்களில் அடங்குவனவாம். இது பற்றியே ஈசுரன் இரண்டு உபாயத்தையே கூறி அருளினர். இவ்வர்த்தினையே பதஞ்சலி பகவானும் யோக சூத்திரத்திற் கூறியருளியிருக்கின்றார். அதாவது பிரமாண முதலிய ஐவகை விருத்தி அசுரத்தன்மையால் அக்கிலிஷ்டம் எனவும் கூறப்படும. அதன் நிரோதம் அதாவது விறகின்றிய தீப்போல் உபசாந்த வடிவ பரிணும

விசேடம் அப்பியாச வைராக்கியங்களால் ஆம், என்க யோக பாடியத்தில் ஸ்ரீ வியாச பகவானும் இதனைக் கூறுகின்றார்.

ஸ்ரீ கங்கை, யமுனை முதலிய நதிகள் பள்ளமான பூமியிற் சென்று கடலை அடைகின்றன. அதுபோலச் சித்தமான நதியும், விவேக வடிவமான பூமியிற்சென்று கைவல்ய வடிவ பலத்தில் முடிவுறுகின்றது. அது கல்யாண வடிவப்பிரவாகம் எனப்படுகின்றது. அவிவேக வடிவப் பள்ளத்திற் சென்று சம்சாரத்தில் முடிவுறும். அது பாப வடிவப் பிரவாகம் எனப்படும். இவ்வாறு சித்த வடிவ நதி இரு பக்கமும் செல்கின்றது. ஆண்டு விஷயத்தில் அடிக்கடி தோஷ திருஷ்டியால் உண்டாகிய வைராக்கியத்தால் விஷய வடிவ பக்கத்திற் செல்லும் சித்த நதியின் பிரவாகம் கட்டுப்படுகின்றது. விவேக தரிசன வடிவ அப்பியாசத்தால் பிரத்தியக் ஆன்மாவில் சித்த நதி பிரவாஹமாய்ச் செல்லுகின்றது. இவ்வாறு வைராக்கிய அப்பியாசங்களின் முதிர்ச்சியால் வசமாம் சித்த நிரோதம். கேவல வைராக்கியத்தாலும், கேவல அப்பியாசத்தினாலும் வசப்படாலாம். கருத்திதுவாம். தீவிரமான வேகத்தோடு கூடிய நதிப்பிரவாகத்தை மரம், மண் முதலியவற்றால் வாராவதி கட்டித்தடுத்து அங்கொரு மதகமைத்து வயலுக்குநேராய் வக்கிரப்பிரவாஹம் உண்டாக்குவதுபோல வைராக்கியத்தால் மித்தநதியின் விஷயஅபிமுகப் பிரவாஹத்தை நிவிருத்தித்துச் சமாதி அப்பியாசத்தால் பிரத்தியக்குப் பிரவாஹம் உண்டாக்கப்படுகின்றது. இவ்வாறு, வைராக்கிய அப்பயாசங்கட்குச் சித்த நிரோதத்தில் வெவ்வேறு வாயிலானதால் அவ்விரண்டிற்கும், சமுச்சயமே பொருந்துகின்றது. ஒரே ஹோமத்தில் நெல், கோதுமை இரண்டிற்கும் வாயில் ஒன்றானதால் விகற்பமடைந்ததுபோல, அப்பியாச வைராக்கியங்கட்கு வாயில் ஒன்றாயின் விகற்பமேயாம்.

மந்திர தப தேவதாத் தியானம் முதலியனவைகள் கிரியா வடிவம் ஆனதால் மறித்து ஆவிருத்திவடிவ அப்பியாசம்கூடும்.

ஆனால் சர்வ வியாபகரோ பரமவடிவ சமாதிக்கு ஓர் அப்பியாசமும் இல்லை. ஆதலான பொருந்தாது என்னும் சங்கையை நிவிருத்தத்பொருட்டு இவ்வாறு அப்பியாசவடிவத்தைக் கூறியருளினர். தனது சொரூபத்தில் நிலைத்த திருஷ்டா வடிவசுத்த சிதான்மாவில் சர்வ விருத்திகள் அற்ற பிரசாந்தப் பிரவாக வடிவசலனம் அற்ற நிலையின் பொருட்டு மானச உற்சாக வடிவயத்னமாமம், அதாவது தனது சஞ்சல சுபாவத்தால் பாகியப்பிரவாஹமுடைய சித்தத்தை எவ்வாற்றானும் நிரோதம் பண்ணுவேன் என்னும் மனத்தின் உற்சாக வடிவயத்னத்தை அடிக்கடி ஆவிருத்தித்தல் அப்பியாசம் எனப் படுகின்றது.

வேறு சூத்திரம் முற்கூறிய அப்பியாசமானது உத்வேகம் இன்றி தீர்க்க காலபரியந்தம் வியவதானமின்றி, நிரந்தரமாய் சிரத்தா அதிசய வடிவசத்காரத்தாற் சேவிக்கப்பட்டுத் திடபூமி ஆகின்றது. அதாவது அவ்வப்பியாசம் விஷயசுகவாசனையால் சலனப்படுவதில்லை. ஆண்டு அவ்வாறு சேவனை இன்றேல் லயமுதலிய சோஷங்கள் நீங்கா - வியுத்தான சமஸ்காரத்தின் பிரபலத்தால் அவ்வப்பியாசம் அதிடபூமியாகிய பலனைத் தார். இதுபற்றியே பதஞ்சலிபகவான் தீர்க்ககால நைரேந்திரிய சத்காரம் என்னும் இம் மூன்றையும் கூறினர் இத்துணை கூறியதால் அப்பியாச வடிவங்கூறப்பட்டது, இனி வைராக்கிய சொரூபத்தைக்கூறுவாம். அபர வைராக்கியம், பர வைராக்கியம், என்னும் வேறு பாட்டால் வைராக்கியம் இருவகைத்தாம, அவற்றுள் அபர வைராக்கியம் யதமானம், வெயதிரேகம், ஏகேந்திரியம், வசீகாரம் என்னும் வேறு பாட்டால், நால்வகைத்தாம் ஆண்டுப்பூர்வ பூமியின் சம்பாதன விவட்சையால் ஸ்ரீ பதஞ்சலிபகவான் நான்காவதாகிய, வசீகார வைராக்கியத்தையே கூறி அருளினர்.

ஸ்திரி அன்னபானம் மைதுனம ஐஸ்வரிய முதலியன எவ்வுலகத்தும பிரத்தியட்சம் ஆனதால் திருஷ்ட விஷயம்

எனப்படுகின்றன. சுவர்க்கம் விதேகத்தன்மை பிரகிருதிவயம் முதலியன கேவல சாத்திரப்பிரமாணத்தால் அறியப்பட்டன ஆதலின் அது அிராவிக விஷயம் எனப்படும் இவ்விருவகை விஷயங்களில் திருஷ்ணை இருப்பினும் விவேகத்தின் நியூநாதிகத்தன்மையால் யதமான முதலியன மூன்று வைராக்கியங்களும் உண்டாம். ஆண்டு உலகத்திலுள்ள சராசரப் பொருள்களைக் குருவினாலும் நூல்களினாலும் நிச்சயம் பண்ணுவேன் என்னும் மூரற்சியதமானமாம் தனது சித்தத்தில்உள்ள தோஷங்களுக்குள் அநுஷ்டித்த விவேகத்தால் எத்துணைப் பக்குவம் ஆயின எத்துணைபாக்கிஉள்ளன என வைத்தியன் போலப் பகுத்தல் வெயதிரேகமாம் பிரவிருத்தி பண்ணுதிருந்தும் திருஷணையின் கிளர்ச்சிமாத்திரமாய் மனதில் தங்குதல் ஏகேந்திரியமாம் அதுவும்இன்றி எவ்வாற்றாலும் திருஷணை இன்மை அதாவது திருவிணை விரோதியான ஞானப்பிரசாத வடிவ சித்தவிருததி விசேஷம், வசிகாரமாம் அது சம்பிரஞ்ஞாத சமாதியின் அந்தரங்கசாதனமாம் அசம்பிரக்ஞாதசமாதியின் பகிரங்க சாதனமாம், இதற்குப்பர வைராக்கிமே அந்தரங்க சாதனமாம் அதன் சொரூபத்தைப் பதஞ்சலி பகவான் யோக சூத்திரத்தில் கூறி இருக்கின்றார். சம்பிரஞ்ஞாத சமாதியின் திடத்தால் மூககுணவடிவப் பிரதானத்திலும் வேறு பிரித்த புருஷவடிவ சாக்ஷாத்காரம் உண்டானதின் பின்னர்ச் சம்பூரண குணவியவகாரத்தில் திருஷ்ணை இன்மை பரவைராக்கியம் எனப்படும் அதாவது சர்வத்தினும் மேலாகிய பலவடிவ வைராக்கியம் எனப்படும் அதன் பரிபாகத்தால் சித்த உபசமம்பரி பாகமாய்ச் சீககிரம் கைவல்யமே அடையப் படும். அ. 6 சு. 35 வரை கூறியதாம்.

தத்துவ சாக்ஷாத்காரம் உண்டாயினும் வேதாந்த வியாக்கியானத்தில் மனப்பற்றுளதாலேனும், ஆலஸ்ய முதலிய தோஷங்களேலானும், அப்பியாச வைராக்கியங்களால் நிரோதம் அடையாத மனம் உடையோன் அசம்சயதாத்மாவாம்






அத்தன்மையன் தத்துவ சாக்ஷாத்காரமுடையன் ஆயினும் பிராசப்தத்தால் உண்டாகும். மனோ சஞ்சலத்தால் சர்வவிருத்தி நிரோத வடிவ யோகத்தை வருத்தத்தாலும், அடையான் என நீ கூறியது எனக்கும் சம்மதமேயாம். அதாவது நீ கூறியது உண்மையே.

ஹே பகவன்! அடக்கமிலாத மனத்தோன் அந்த யோகத்தை அடையான் எனின் மற்று எவன் அடைவன் என்ன வைராக்கியத்தின் பரிபாகத்தால் வாக்ஷுயமாய் வசியமான சுவாதீனப்பட்ட அதாவது விஷயங்களின் பரதந்திரத தன்மை இல்லாத ஆன்மாவெனும அந்தக் கரணம் உடையோன் வசியாத்மாவாய். ஈண்டு வசியாத்மனது வாக்கியத்திலுள்ள 'து' சத்தமானது. முற்கூறிய அடக்கமிலாதமனத்தோனினும் வசம் பண்ணிய மனத்தோன் விலக்ஷணன் என்று உணர்த்தற் பொருட்டாம். அல்லது நிர்ணய அர்த்தகமாம். வைராக்கியத்தால் சித்த வடிவ நதியின் விஷய அபிமுகப் பிரவாகத்தைத் திருப்பி பிரத்யக் கான்ம அபி முகப்பிரவாஹம் ஆக்கற் பொருட்டு முற்கூறிய அப்பியாசம் பண்ணுவோன். யத்தனியாம் இவ்விரண்டும் உடையவனே சித்த சலனத்தைக் கொடுக்கும் பிராப்த கருமத்தையும். அமிழ்த்தி விட்டு சர்வ விருத்தி நிரோத வடிவ சமாதியை அடைவதற்குச் சமர்த்த தனுவன், என மிக வலி உடைய பிராப்த கருமத்தை அமிழ்த்தல் எவ்வாறும் என ஹே அர்ச்சுன! புருஷப் பிரயத்தன வடிவ உபாயமே அதைஅமிழ்த்துவதாம். என்னை லௌகிக வைதிகப் பிரயத்தனங்கள் பிராரப்தகரும அபேட்சையால்வலியுடையனவேயாம். இன்றெனில்உலகத்தார் பயிரிட முயலலும், வைதிகர் சோதிட்டோமாதிப் பிரயத்தனமும் பயனற்றனவாம். சர்வ காரியங்களிலும் பிராரப்த கருமம் உளது இலது என்னும் விகற்பமே வருவதால் ஒரு காரியத்திலும் முயற்சி எழாதாம். என்னை! பிராரப்தகருமம் உளதுஎனில் பலப்பிராப்தியும் ஆம் ஆகவே அதில் புருடப் பிரயத்தனம் சிறிதும் பயனற்றதாம் பிராரப்தகருமம்இன்றெனிலோ எவ்வாற்றானும் பலப்பிராப்தி



இலதாகும். ஆனதாலும் புருடப் பிரயத்தனம் பயனற்றதாம். என்று இவ்வாறு ஆராய்ந்து ஒருவரும் இக்கருமங்களில் முயலார் என.

சங்கை பிராரப்த கருமவடிவ அதிருஷ்ட காரணமானது. திருஷ்ட காரணம் இலாது காரியத்தைத் தோற்றுவியாது ஆனாலோ திருஷ்ட காரணத்தின் சகாயத்தால் காரியத்தைத் தோற்றுவித்தலால் அதிருஷ்ட காரண வடிவப்பிராப்தமும் திருஷ்டசாதன சம்பத்திஇன்றிப்பலத்தைஉண்டாக்குவதற்கு ஏலாததாம். ஆதலின் பயிரிடல் முதலிய லௌகிக காரியங்களிலும் சோதிட்டோம முதலிய வைதிக காரியங்களிலும் பிராப்த கருமத்திற்குப் புருடப்பிரயத்தனம் ஒருதலையே அபேட்சிதமாம்.

சமாதானம்இதுயோகாப்பியாசத்திலும் சமமாம். என்னை யோகாப்பியாசத்தாற் பெறப்படும் சீவன் முத்தியும் சுகாதிசய வடிவமானதால்பிராரப்தகரும பலத்திலேஅடங்கும் இதுபற்றியே அத்தியான்ம நூலில் ஜீவன்முத்திபல பிறப்பின் புண்ணிய பல வடிவமெனக் கூறப்பட்டது: ஆதலின் சீவன் முத்தி வடிவ பலம அடைவதற்கு திருஷ்ட காரண வடிவயோகாப்பியாசம் தேடற் பாலதென்பதும் பொருந்தும். தத்துவஞானிக்கு தேகேந்திரியக் கூட்டம் நிலைத்திருத்தல் கண்டு பிராரப்த கருமத்தை தத்துவ ஞானத்திலும் வலிவுடையது எனக்கற்பிக்குமாறு போல, யோகாப்பியாசம் பிராரப்த கருமத்தினும வலிவுடையது என்பதும் ஆம். நூற் கூறிய பிரயத்தனத்திற்கு எவற்றினும் வலிவுடையதாம்தன்மை காணப்படுதலின் என்று கூறி வசிஷ்ட பகவானும் கூறியுள்ளார்.

ஹே ரகுநந்தன இவ்வுலகத்தில்யாவராலும் இனியமுயற்சியாற் பொருள் அனைத்தும் அடையத் தக்கனவே. புருஷ முயற்சியால் அடையப்படாத பொருள் ஒன்றில்லை. புருடப் பிரயத்தனம் இருவகைத்தாம். ஒன்றோ உத் சாஸ்திரம், மற்றது சாஸ்திரிதம். சாஸ்திரத்தால் நிஷேதிக்கப்பட்டது உத்சாஸ்திரம் சாஸ்

திரத்தால் விதித்தது சாஸ்திரீதம் எனப்படும். அவற்றுள் உத்சாஸ்திரம் நரகப்பிராப்தியின் பொருட்டாம். (2) இந்த வாசனை வடிவ நதியானது, சுபமார்க்கம் அசுப மார்க்கம் இரண்டினும் செல்கின்றது. அவற்றுள் இவ்வதிகாரி புருஷப்பிரயனத்தால் இந்நதியை அசுபமார்க்கத்தினின்றும், திருப்பி சுபமார்க்கத்திற் செலுத்த வேண்டும். (3) வல்லார்களின் மேலோய் அசுப மார்க்கத்திற்சென்ற மனத்தினை நீ முயற்சியால் அகனின்றுத் திருப்பி சுபமார்க்கத்திற் செலுத்துவாய். (4) மாற்றானை அடுவோய் முன் அப்பியாச வசத்தால் உனக்குச் சுப வாசனை உண்டாகில் தனது முயற்சி பலமுடையது என உணர்தி. (5) அவ்வாசனை நிர்ணயப்படா விடினும் நீ நிரந்தரம் அதையே சம்பாதிப்பாய். மைந்த! அவ்வாசனை விருத்தி அடையில் சிறிதும் தோஷமில்லை. அசுபவாசனையோ மிகுதியும் தோஷமேயாம். (6) எது வரையில் வியுத்பன்ன மனமும், பரமபத ஞானமும் உனக்கில்லையோ அது வரையில் குருநூற் பிரமாணத்தால் நிச்சயிக்கப்பட்ட அர்த்தத்தை நீ சிரத்தையோடும் அனுட்டிப்பாய். 7) இவ்வாறு பாவ வடிவமாகிய நிவிருத்தியும் ஆன்ம வஸ்து நிச்சயமும், மனோ நிரோதமும் உண்டாகில் அச்சுப வாசனையையும் நீக்குதி. (8) என்பது முதலிய வாக்கியத்தால் ஸ்ரீ வசிட்ட பகவான், புருடப் பிரயத்தனத்தின் பிரபல தன்மையை கூறி அருளினர் ஆதலின் சாஸ்திரீயப் புருஷப்பிரயத்தனம் எவற்றினும் வலிதாம். அதனால் பிராரப்த கருமத்தை அழித்தலுங்கூடும். இத்துணை கூறியதால் அருச்சுனன் கூறிய சங்கைக்குப் பெறப்பட்ட உத்தரம் இஃதாம். சாக்ஷியிலுள்ள அஞ்ஞானத்தாலாய சம்சார பந்தம் விவேக சாக்ஷாத்காரத்தால் நிவிருத்தியாயினும் பிராரப்த கருமம் நிலைப்படுத்திய சித்தத்தின் சுபாவ விருத்திகளை யோகாப்பியாசத்தால் நிவிருத்தி பண்ணிய ஜீவன் முத்தன் பரமயோகி எனப்படுவன். அஃதிலதோன் தத்துவ ஞானியேயாயினும் பரமயோகி எனப்படான் மற்றோ அபரமயோகி எனப்படுவன் என்க.

ஆண்டு பூர்வ கிரந்தத்தால் தத்துவ ஞானத்தைத அடைந்ததும் ஜீவன் முத்தி அடையாதோன் அபரமயோகி எனப்படுவன். அவ்விரண்டையும் அடைந்தவன் பரமயோகி எனப்படுவன். எனவுங்கூறப்பட்டது ஆண்டு அவ்விருவருக்கும் தத்துவ ஞானத்தால் அஞ்ஞானம் நாசமாயினும் பிராரப்த கருமம் உள்ள வரையில் தேகேந்திரிய சங்காதமும் நிலைத்த இருக்கும். அது நாசமாகவே அவ்விருவர்களின் தேக சங்காதமும் நாசமாகின்றது. ஒருபோது நாசமானது மறித்து ஒருக்காலும் உண்டாகாது. அதை உண்டாக்கும் அவித்தை காம கருமங்கள் அவனுக்கு நாசமாயின ஆதலின் இவ்விருவகை வித்துவான்களும் விதேக முத்தி அடைவதில் சிறிதளவும் வழக்கில்லை. ஆனாலோ முன்னர் செய்த நிஷ்காம கருமத்தால் விவிதிஷாபரியந்த சித்த சுத்தியை அடைந்து பின் விதி பூர்வகம் அக்கருமங்கள் அனைத்தையும் விடுத்துவிவிதிஷாவடிவ பரமஹம்சசந்நியாசத்தினை அடைந்துஅதன்பின் சுரோத்திரிய பிரஹ்மநிஷ்ட ஜீவன் முத்த சந்நியாசியாகிய குருவை அணுகி அவரால் வேதாந்த மஹாவாக்கிய உபதேசத்தைப் பெற்று அதிலுள்ள அசம்பாவனை, விபரீதபாவனை வடிவப் பிரதிபந்த நிவிருத்தியின் பொருட்டு உத்தம்மீமாஞ்சை சாஸ்திரம் முதலானும் சிரவணாதிகளை குருமூலமாய் குருவின் பிரசாதத்தால் பெறவேண்டுமென தொடங்கற்பாலதாம்.

சிவஇராஜயோகம் தோற்றுவாய்.

மங்கலம்.

இந்த இடத்தில் இதுஇரகசியமாம். பரமார்த்த திருஷ்டியால் ஜீவன் பரமாத்மாவினும் பின்னம் அன்று. ஆனால் எந்த ஜனன மரணாதி பந்தங்களின் அத்தியாசம் ஆன்மாவினிடத்துளதோ அதுவே ஜீவனுடைய ஜீவத்தன்மையாம். அந்த ஜன்மாதி பந்தம் கணேசாதி தெய்வங்களுக்கு ஆத்மாவில் பிரதீதியாகின்றதில்லை. ஆகையால் அவர்கள் ஜீவர்களல்லர். இவ்வாற்றால் கணேசாதிகட்கு ஈசுரத் தன்மை உண்டு.

ஆதலின் நூல் ஆரம்பத்தில் அவர்களைச் சிந்தித்தல் யோக்கியமேயாம்.

நூன் முடிவை விரும்புவோன் காப்பியற்றுக.

நாநா ரூபம் ஈசுரனுக்குக் கூறியது. எல்லோருக்கும் ஈசுரத்தன்மையினை விளங்கற் பொருட்டாம்: ஈசுர பத்தியும் குருபத்தியும் வித்தையின் பிராப்திக்கு முக்கிய சாதனங்களாம் என்னும் அர்த்தத்தினையும் விளக்கற் பொருட்டாம்.

மங்கலம்.

நிர்க் குணப்பொருள் இயல்பு உரைத்தல்.

வியாபகமாயும், சத்தியமாயும் இருக்கின்ற எதன் பிரசாதத்தால் சந்திர சூரியர்கள் பிரகாசிக்கின்றார்களோ அந்தப் புத்திக்குச் சாக்ஷியாகிய நான் சுத்த ரூபமாகவும் ஆநந்த ரூபமாகவும் இருக்கின்றேன்.

சகுணப் பொருள் இயல்புரைத்தல்.

ஸ்ரீ கணபதியின் பெயர் விக்கினங்களை மூலத்தோடு நாசம் செய்கின்றது. அவரைச் சிந்திக்காவிடின் தேவதைகளுடைய இச்சைகளும் சித்திக்கிறதில்லை. திரிபுர வதத்தில் இவ்வார்த்தை பிரசித்தமயமாம்.

வணக்கம்.

அசுரர்களை சங்கரிக்கிறவர்களாயும் பக்தர்களை எப்போதும் பரிபாலிப்பவர்களாயும் உள்ள ஸ்ரீ லக்குமி பதியான ஸ்ரீ ராம நாராயண மூர்த்தியையும் ஸ்ரீ பார்வதியாருக்குப் பதியான ஸ்ரீ மஹாதேவனரயும் நான் வணங்குகின்றேன்.

தனது வாஞ்சித பிரார்த்தனை ஆசீர்வாதம்.

எந்தச் சத்தியின் பலத்தால் ஈசுரன் இச்சிருஷ்டி செய்கின்றாரோ அந்தச்சத்தி இந்தநூல் முடிவுறும் பொருட்டு என் வாக்கில் இருக்கப் பிரார்த்திக்கின்றேன்.



சிடன் வாஞ்சித பிரார்த்தனைரூப ஆசீர்வாதம்.

பந்தத்தை நீக்கி சுகத்தை தரும். தீனதயாளுவான ஸ்ரீ தாது குரு இந்நூலைப் படிக்கின்றவர், கேட்கின்றவர்களது ஜன்மாதி துக்கத்தை நிவர்த்திப்பாராக.

அநுபந்த சதுட்டயம்.

வீட்டிற்கு நான்கு பாதங்களும் இல்லாவிடின் வீடு நிலை யாததுபோல் சகல நூல்களுக்கும் நான்கு அனுபந்தங்களும் இல்லாவிடின் நூல்அமையாது அவற்றை அறிந்தால் அல்லது விவேகிகட்கு நூலின் கண்ணே பிரவிர்த்தி உண்டாகமாட்டா வாம். ஆதலின் நூல் ஆரம்பத்தில் நான்கு அனுபந்தங்களும் சொல்லத் தக்கனவேயாம். இந் நூல் வேதாந்தத்தின் பிர கரணமா இருத்தலின் இந்நூலுக்குரிய அநுபந்தங்களை அதி காரிகள் எளிதினில் அறியும்படி நான்கு அநுபந்தங்களையும் சுருக்கமாகக் கூறுகின்றேன். அவ்வநுபந்தங்களை இப்போது பிரயோஜன பூர்வமாய்ச் சொல்லுகின்றேம்.

அதிகாரி, சம்பந்தம், விஷயம், பிரயோஜனம் என்னும் இந்நான்கிற்கும் அநுபந்தம் என்று பெயராம். (அதாவது) தன்னை அறிந்த பின்னர் அதிகாரிகளை நூலோடுபொருத்துவது எதுவோ அதுவே அநுபந்தம் எனப்படும்.) இந்த நான்கு அநு பந்தங்களையும் அறிந்தால் அல்லது அதிகாரிகட்கு நூலிற் பிர விருத்தி உண்டாகிறதில்லை: இந்நான்கு அநுபந்தங்களையும் அறிந்து அதிகாரியானவன் நூலிற் பிரவிர்த்திக்கின்றான். ஆகையால் நூலின் ஆரம்பத்தில் அவசியம் சொல்லத் தக்கனவேயாம்.

அதிகாரியின் இயல்பு.

இத்தூல தேசத்தில் வாதம், பித்தம், கபம் என்னும் மூன்று தோஷங்கள் உள்ளன. அவற்றால் உண்டாம் பிணி நீக்க தன்வந்திரி முதலியோர் ஆயுள் வேதத்தைச் செய்ததே போல.

அந்தக்கரணத்திலும் மலம், விக்ஷேபம் அஞ்ஞானமென்னும் முத்தோஷங்கள் உள்ளன. அவற்றைநீக்குதற் பொருட்டு கர்ம காண்டம். உபாஸனு காண்டம், ஞானகாண்டம்என்னும் மூன்று காண்டங்களோடு கூடிய நான்கு வேதங்களையும் பரமேசுரன் செய்திருக்கின்றூர். மலம் என்பது பாவத்திற்காம் அக்தப்பாவம் ஜன்மாந்தரங்களிற் செய்து வந்த தீவினைப் பயனும் அது சமஸ்கார வடிவமா இருத்தலால்மிகவும்சூட்சமா இருக்கின்றது. ஆதலின் பிரத்தியக்ஷமாயறியப்படுவதில்லை. என்றூலும் அசுபவாசனையின் வாயிலாக அதன் அநுமானம் உண்டாகின்றது.

எந்தப்புருஷன் விலக்கியகர்மங்களிலும் விஷயங்களிலும் இச்சை உண்டாகின்றதோ அவனுடைய சித்தத்தில் அசுபவாசனை இருக்கின்றது. இதனுலேயே அவன்மலதோஷத்தோடு கூடியவன் என அறியப்படுகின்றது ஆகையால் நிட்காம கருமத்தையாவது அல்லது ஈசுர நாமோச்சாரணமாவது ஜீவர்களிடத்து இரக்கத்தையாவது செய்ய வேண்டும் பாவம் விக்ஷேபம் (சஞ்சலத்தன்மையாம்) என்னும் இருவகைத்தோஷங்களும் நாசமாம்.

மற்றக்கர்மம் முதலிய பாப வடிவபான மலத்தை மாத்திரம் நாசம் செய்கின்றன.

சித்தத்தின் சஞ்சலத்தன்மைக்கு விக்ஷேபமென்று பெயர். எவனுடைய சித்தம் வேதாந்த சிரவண முதலியவற்றிலாவது அல்லது மஹாவாக்கியார்த்தின் அர்த்தமாகிய சுவசொரூபத்திலாவது ஸ்திரமாகாமல் அந்நியவிஷயங்களிற்சுழல்கின்றதோ அவனுடைய சித்தமே விக்ஷேபரூப தோஷமுள்ளதாம். இதனுலேயே அந்தப்புருஷன் ஈசுரநாம உச்சாரணம் செய்யற்பாலதாம். அல்லது அஜபா மந்திரம் உச்சரிக்கலாம். சோஹம் என்னும் மந்திரமே அஜபா காயத்திரி என்பர். இதன் ஜபத்தை அஜபா ஜபம் என்பர். இதனை வெகுகாலம் ஜபித்துக்கொண்டிருக்க எப்போது விருத்தி அந்தர் முகம

ஆகின்றதோ அப்போது சுவாசம் வெளிப்படுகின்றபோது ஸோ என்பதையும், சுவாசம் உட்பிரவேசித்தங்கால் ஹம் என்பதையும் தியானிக்கவேண்டும். இது அஜபா காயத்திரியாம். இது சோபாதிகத் தியானமாம். இதினின்றும் ஸ காரம், ஹ காரம் என்னும் இரண்டு எழுத்து எதுவோ அதன் உபாஸனை நிருபாதிகமாம். ஸோகம் ஓம் ஒன்றும் இரண்டு சொற்களுக்கும் பொருள் பிரத்தியக் ஆன்மாவிற்கு அபின்னமான பிரஹ்மம் ஒன்றே அது சுத்தமா இருத்தலால் நிருபாதிகமாம். என்றாலும் ஓம் என்னும்அட்சரத்தில் ஸ் கார ஷகாரம் உபாதிகளின் சேர்க்கையால் ஸோஹம் என்னும்சொல்உண்டாகின்றது இதனையே அருணகிரியாரும் "ஜோதி உணர்கின்ற வாழ்வு சிவம் என்ற ஸோஹம் அது தந்து எனை ஆள்வாய் எனக்கூறிஉள்ளார்" ஆதலின் இவை முதலிய உபாஸனைகளைச் செய்ய வேண்டும். ஏன் எனில் உபாஸனையினால் சித்தத்தின் ஏகாக் கிரத்தன்மையுண்டாகின்றது. விக்ஷேப நிவிருத்தியும் உண்டாகின்றன. அல்லது மனம் வாக்குக்காயம் என்னும் முக்கரணங் களால் செய்யப்பட்ட பற்றின்றிய குருவின் சேவை எதுவோ அதுவே கர்மோபாசனைகள் இல்லாமலே சித்த சுத்தியும் ஏகாக்கிரத் தன்மையும் உண்டாகின்றன.

பிரஹ்ம சொருப ஆத்மாவின்கண் அதன் சொருபப் அறியவில்லை என்னும் வியவகாரத்திற்கு எது, ஏதுவோ அதுவே அஞ்ஞானமாம். எவனுடைய சித்தத்தில் இவ்வாறு தோற்றம் உண்டாகின்றதோ, அவனே அஞ்ஞானியாவன். ஆதலின் அவனுக்குத் தத்துவ ஞானத்தைச் சம்பாதித்கல் தகுதியாம் ஏன் எனில்! தத்துவ ஞானத்தால் அஞ்ஞானம் நிவிருத்தியாகின்றது மற்றையசாதனங்களால் நீங்குகிறதில்லை ஆனல் அந்தத் தத்துவ ஞானம் அதிகாரிக்குக் கிடைக்கும். அவ்வதிகாரி இவனுவன்! எவனுக்கு இச்ஜன்மத்திலாவது பூர்வ ஜன்மாந்திரத்திலோ செய்த நிஷ்காம கர்ம உபாஸனைகளினால் மல விக்ஷேப தோஷங்கள் நாசமாய் மூன்றுவதான அஞ்ஞான

தோஷம் எஞ்சி இருக்கின்றதோ, அதனாலேயே எவன் விவேக முதலிய நான்கு சாதனங்களோடு கூடியவனாய் இருக்கின்றானோ அந்த அதிகாரியே இந்நூலிற்கும் இந்நூலின் விசாரவாயிலாக ஆத்ம ஞானத்திற்கும், ஆத்ம ஞான வாயிலாக மோக்ஷத்திற்கும் உரிய அதிகாரியாவான்.

சாதன சதுட்டயம்.

அவ்வதிகாரிக்குரிய சாதனங்கள் நான்கின்பெயர் அவை முதலாவது விவேகம், இரண்டாவது விராகம். மூன்றாவது ஷட்சம்பத்தி, இதனை ஞான விருப்பமுடையோன் தரித்து நான்காவதாகிய முமூட்சுத்வத்தை விரும்ப வேண்டும். இவை சாதனங்களாம்.

முதலாவது விவேக இயல்பு.

ஆத்மா நித்தியமும் அவிநாசியும் ஆம். கிரியை இல்லாததும் அசலமும் ஆம். ஜகத்து அநித்தியமும் விநாசியும் ஆம். கிரியை உள்ளதும் சலமும் ஆம். ஆதலின் அதிலுள்ள சாரத்தினை நீரினை நீக்கி பாலினைக் கொள்ளும் அன்னப் பக்ஷியானது அதனைப் பிரித்து அறிதல் போல அதிகாரியும் ஆத்மாவிலுள்ள சாரத்தையும் அசாரமாகிய அனாத்மாவையும் திடமாக விசாரித்து வேறு பிரித்து அறிதலே விவேகமாம் இப்படி மனதில் நிச்சயம் செய்ய.

வைராக்கியத்தின் இயல்பு.

பிரமலோக முதல் சர்வ லோகங்களும் போதல், வருதல்களாகிய தன்மையினை உடையது. என ஸ்ரீ கண்ணபிரானது அமிர்தமொழியுள்ளதால் இவ்வுலக முதல்பிரமலோகம் முதலிய எல்லா உலகங்களிலும் உள்ளபோகங்களையெல்லாம் பிரமாணயுக்திகளினால் தனது சித்தத்தில் அநித்தப்பொருள்கள் என ஆராய்ந்து திட நிச்சயம் பண்ணி அவற்றினைக் காக்கை மலம் போலவும் வாந்தி பண்ணிய அசனம் போலவும் நினைந்து அடியோடு விட்டு விடல் வேண்டும்: இப்படித் தோஷ திருஷ்டியால் இகலோக, பரலோகபோகங்களில் இச்சை நீங்குதல் எதுவோ அதுவேவைராக்கியம் எனக் கூறுவர்.

இங்கே இது விசேஷமாம். விடுதலின் இச்சைக்கு அல்லது இ ச் சை இல்லாதிருக்கும் தன்மைக்கு வைராக்கியம் என்று பெயராம். அந்த வைராக்கியம் (1) யதமானம் (2) வியதிரேகம் (3) ஏகேந்திரியம் (4) வசீகாரம் என்னும் பேதத்தால் நான்கு வகைத்தாம்.

(1) மந்த விராகத்திற்கு யதமானம் என்று பெயராம்.

(2) கீரி புரண்டான், பூண்டடின் ஆசிரயத்தால் சர்ப்பத் தோடு யுத்தம் செய்வது போலச் சத்சங்க சகவாசத்தால் துர்க் குணங்களை ஒழித்து நற்குணங்களைக் கொள்ளுவது காரணமாக உண்டாகும் உற்சாகம் எதுவோ அது வியதிரேகமாம்.

(3) இந்திரியங்களை அடக்குதலாகிய தமத்திற்கு ஏகேந் திரியம் என்று பெயர் ஆம்.

(4) மனத்தை நிக்கிரகித்தலாகிய சமத்திற்கு வசீகாரம் என்று பெயர். அவற்றுள் வசீகார வைராக்கியமாவது மந்தம், தீவிரம், தீ விரதரம் என்று மூவகையாம்.

(1) புத்திரன், திரவியம் முதலியவற்றின் நாசத்தால் சீ இஃது என்னசமுசாரம்என்றுண்டாம். க்ஷணிக புத்தி விருத்தியே மந்த் வைராக்கியமாம்.

(2) இவ்வுலகத்து புத்திரன் முதலியவற்றின் சம்பந்தத் தால் உண்டாம் விருப்பம் இன்மை எதுவோ அது தீவிர வைராக் கியம் எனப்படும்.

(3) இவையாவும் போதல், வருதல் முதலிய செயலை உடையன என்று அறிந்து சர்வ உலகங்களிலும் உள்ள போகங் களின் இச்சையை ஒழித்தலே தீ விரதர வைராக்கியமாம்.

ஞானத்திற்குக் காரணமாயுள்ள தீ விரதரத்தை மோக்ஷ இச்சை உடைய அதிகாரியானவன். அ வ சி ய ம் சம்பாதிக்க தக்கதேயாம்.

## சட்சம்பத்திகளின் பெயர்.

சமம், தமம், விடல், சகித்தல், சமாதானம் சிரத்தை என இவை ஆறு சாதனங்களின் அடைவை. அறிஞர் சட் சம்பத்தி என்பர்.

## சமதமாதியின் இயல்பு.

(1) விஷய வாசனையாகிய பலத்தினுல், உன்மத்தமாகிய மனம் என்னும் யானையை. விஷயங்களில் தோஷ திருஷ்டியாகிய அங்குசத்தால் ஜெயித்தல் (சுவாதீனம் செய்தல்) சமமாம்.

(2) சப்த முதலிய ஐந்து விஷய வடிவமான மார்க்கத்தில் பிரீதியுடைய இந்திரியங்கள் என்னும் குதிரைகள் எவைகளோ அவைகளை விஷயங்களில் தோஷ திருஷ்டி வடிவ சாஸ்திர சிந்தனை வடிவ சாட்டையினுல் வெல்லுதலே தமமாம்.

இங்கே இது ரகசியமாம். சரீரம் இரதமாம்அதற்கு இந்திரியங்களே குதிரைகள். மனமே கடிவாளம். புத்தியே சாரதியாம்.

அந்த இரதத்திலிருக்கும் ஆத்மாவே இரதிகனும். எந்த இரதிகனுக்கு புத்தியாகிய சாரதி பிரமாதியா இருக்கின்றுனே அவனுடைய இந்திரியங்களாகிய குதிரைகள் கெட்ட வழியிற் செல்கின்றதோ அவைகள் அந்த இரதிகனை நரக முதலிய துக்க வடிவமாகிய படுகுழியிற் சேர்ப்பிக்கின்றன.எந்த இரதிகனுடைய புத்தியாகிய சாரதிமறதிஅற்றவனு இருக்கின்றுனே அவனுடைய இந்திரியங்களாகிய குதிரைகள் நன்மார்க்கத்திற் செல்லுகின்றன. அந்த இரதிகனைச்சுவர்க்க முதலியவற்றிலோ அல்லது மோக்ஷ வடிவ வீட்டிலோ அவனைச் சேர்ப்பிக்கும் ஆதலினுல் மோக்ஷ இச்சைகளை உடையோன் தனது புத்தி வடிவமாகிய சாரதியின் இஷ்டப்படி நடத்தல், இஷ்டப்படி பேசுதல், இஷ்டபடி சாப்பிடுதல் என்னும் பிரமாதத்தை நீக்கி அதன் வழியாய் இந்திரியங்கள் என்னும் குதிரைகளைச் சன்மார்க்கத்தில் பொருத்துதல் தகுதியாம்.

இங்கே புத்தியாகி சாரதியை வசம்செய்தல், சமமும், இந்திரியங்களாகிய குதிரைகளை வசம்பண்ணுதல் சமமாம்ஆகையால் சாரதியின் அதீனமாய்க் குதிரைகளும் குதிரைகளின் அதீனமாய் சாரதியும் இருத்தல்போல. புத்திக்கும் இந்திரியங்களுக்கும் ஒன்றற் கொன்று அதீனத்தன்மை இருக்கின்றது ஆதலால் முற்கூறிய சமதமங்கள் ஒன்றற்கொன்று அதீனத் தன்மை இருக்கின்றது. ஷட்சம்பத்தி முமுட்சுத்துவம் ஒன்றற்கொன்று அதீனத்தன்மை இருக்கின்றது. ஆதலின் சாதனமாக எண்ணப்பட்டிருக்கின்றது.

## உபரதி திதீட்க்ஷை இயல்பு.

வீடு மனைவி புத்திரன்தனம் முதலியனவாக முன்னரே கிடைத்துள்ள விஷயங்களில் தோஷதிருஷ்டியினுல். மலத்திலோ வாந்தி செய்த அன்னத்திலோ பிரியமில்லாதிருத்தல் போல, விஷயங்களில் இச்சை இல்லாதிருத்தலே வைராக்கியமாம் இந்த வைராக்கியம் உண்டானபின் முன்னுள்ள விஷயங்களிலே விடுதலாகிய சந்நியாசம் உண்டாகின்றது. அந்த சந்நியாசத்திற்கு விலக்ஷணமாய் முன்விடப்பட்டு மறுபடியும் வந்து சேரும் விஷயங்களை நீக்கிய மலத்தை போலவாவது வாந்தி பண்ணிய அன்னத்தைப் போலவாவது, அங்கீகரியாதிருத்தலே வைராக்கியத்தின் பலமாகிய உபரதியென்று சொல்லுவர்,

சிரவணுதிகளைச்சாதிக்கும்போது அவற்றிற்கு விரோதமுள்ள பசி, தாகம், சீதம், உஷ்ணம், சுகம், துக்கம், இலாபம், நஷ்டம் முதலிய துவந்துவ இருமைத்தர்மங்களைச் சகித்தலேயே சாதுக்கள் திதீட்சை என்பர்.

முற்கூறிய திதீட்க்ஷையை விட்டு துவந்துவதர்மங்களை நீக்குதலில்தற்பரனுயுள்ள முமுட்சுவிற்கு வேதாந்த சிரவணமுதலியவற்றில் வியவதானம் (அந்தராயம்-மறைப்பு) உண்டாகும் ஆகையால் திதீட்க்ஷையும் சிரவணத்தில் உபயோகம் இருத்தலால் சிரவணத்திற்குச் சாதனமாம். இவ்வாறு மற்ற விவேசமுதலியனவும் சிரவணத்திற்குச் சாதனம்ஆம்,

## சமாதானம் சிரத்தைகளின் இயல்பு.

பிரஹ்மமாகிய இலக்ஷியத்தில் சித்தத்தின் ஏகாக்கிரமாய் இருத்தலையே சமாதானம் என்பர்.

வேதாந்த வாக்கியங்களிலும் குரு வாக்கியங்களிலும் உண்டாகும். விசுவாசம் (ஆஸ்திகத் தன்மை, நம்பிக்கை) எதுவோ அதுவே சிரத்தையாம். முன் உபாஸனையில் உண்டாகும் சித்த ஏகாக்கிரத் தன்மை எதுவோ அது சகுணப்பிரஹ்மத்திலாவது அல்லது அதனைக் குறிப்பிக்கும். பிரதிமை முதலியவற்றிலாவது உண்டாவதாம். இங்கே கூறிய சித்தத்தின் ஏகாக்கிரத் தன்மையாவது சித்தம் நிர்க்குணப்பிரஹ்மத்தில் தற்பரமாகுந் தன்மத்தாம் இது அவற்றின் பேதம்.

இங்கே ஷட்சம்பத்திகளின் மத்தியில் சிரத்தையினை கடைசியிற் கூறியதின் அபிப்ராயம் இதுவாம். விருக்ஷத்தின் பலம் எதுவோ அது அந்தத்தில் (கடைசியில் தான்) உண்டாகின்றது. ஆதலின் விருக்ஷத்தின் சர்வ அங்கங்களிலும் பலம் விசேடமாம். இதனாலேயே அது முக்கியமாம். அதுபோல ஞானத்தின் சாதனங்களாகிய விவேகம் வைராக்கியம். சமம், தமம் முதலிய இவை எல்லாவற்றுள்ளும் சிரத்தையே மேலானதாம். இதனாலேயே அது முக்கியமாம். அதனால் அது முடிவிற் கூறப்பட்டது.

பலத்தின் உற்பத்திக்குப் பின்னரே தான் பலத்தின் பரிபாக அவஸ்தை உண்டாவதே போல சிரத்தையின் உற்பத்திக்குப்பின் முமுட்சுத்துவம் உண்டாகின்றது. ஆகையால் முமுட்சுத்துவம் சிரத்தையென்னும் பரிபாக அவஸ்தையாம், இதனாலேயே அது சிரத்தைக்குப்பின் சொல்லப்பட்டது.

இங்கே இது ரகசியமாம். சாஸ்திரம் குரு முதலியவற்றின் வாக்கியங்களில் உண்டாகும் சிரத்தையானது ஈசுரன் குரு

முதலியவர்களின் பக்தி இன்றி உண்டாகாது. எவனுடைய சித்தத்தில் முதலில் ஈசுரன் குரு முதலியோர் முனிவர்கள், இருஷிகள், பிரஹ்ம நிஷ்டர்கள் என்னும் இவர்களிடத்தில் பூஜிக்கப்படுவோர் என்னும் பூஜ்ய புத்தி எவனுக்கு உண்டாகிறதோ அவனுக்கே வேதாந்த வாக்கியங்களிலும் குரு முதலியோர் வாக்கியங்களிலும் புக்தி அநுசாரமாக, எப்படிப் பக்தியோ அப்படிச் சிரத்தை உண்டாகின்றது. ஆதலால் பக்தி எதுவோ அதுவே ஞானத்திற்கும், ஞானத்தின் சர்வ சாதனங்களுக்கும் முக்கிய காரணமாம். இதனுலேயே சிரத்தை பக்தி முதலியவற்ருல் உண்டாவதால், சர்வ சாதனங்களிலும் இது முக்கிய சாதனமாம்.

இங்கே இதனை உருவகம் செய்தல்.

மோக்ஷ சாதனங்களின் அடைவு விருக்ஷமாம்.
அதற்கு நிஷ்காம கர்மபல சுத்த சித்தமே நிலமாம்.
ஈசுரன் குரு முதலியோரின் பக்தியே விதையாம்.
மந்த விவேகமே முளையாம்;
திட விராகமே அடிமரமாம்;
விவிதமான வைராக்கியமே கிளைகளாம்;
சம முதலிய ஐந்து சாதனங்களே புஷ்பக் கொத்துக்களாம்.

குரு வாக்கிய சிரவணமே அதனிடத்துண்டாகும் ஆண் விருக்ஷத்தின் சையோகமாம்.

சிரவண மனன நிதித்யாஸனங்கள் என்னும் சாதனங்களே அப்பழத்தின் சம்பந்தியானஅந்நிய பிரயத்தனங்களாம். சிரத்தை பழமாம்.

முமுட்சுவத்துவமே பழத்தின் தசையாம்; ஞானமே அப்பழத்தின் ரசமாம்; அப்பழத்தில் ஞானமென்னும் இரசமெதுவோ அது சிரத்தை என்னும் பழத்தின் அதீனமாம் ஏன் எனின் முற்கூறிய சிரத்தை என்னும் பழம் உலர்ந்து போனுல் அதன் ஞானமாகிய இரசமும் உலர்ந்துபோம். ஆதலால் ஞானமென்னும்

இரசம் சிரத்தையென்னும் பழத்தின் அதீனமாம் பழத்தைப் புசித்தல் வாயிலாக வயிற்றில் ஸ்தாபிக்கவே அதன் இரதமும் வயிற்றில் நிலைபெறும் ஆகையால் ஜீவித்திருக்கும்அளவும் வித்து வான்களது சித்தத்தில் சாஸ்த்திர குருவாக்கியங்களில் நிச்சயிக்கப்பட்ட அர்த்தத்தில் சுபாவமான சிரத்தை இருக்கும் அதுபரியந்தம் ஞான நிஷ்டையும் இருக்கும் என்பர்.

## முமூட்சுத்துவ இயல்,

பசியுள்ள புருஷன் அன்னத்தினை இச்சிப்பதுபோல மோக்ஷத்தின்தீவிர இச்சை எதுவோ அதனையே பண்டிதர் களாகிய முனிசிரேஷ்டர்கள் முமூட்சுத்துவம் என்பர்.

இப்படிச் சொல்லப்பட்ட அதிகாரி எவனோ அவன் சற்குருவின் சாரர விந்தங்களில் தலைவணங்கி சரணமடையக்கடவன். அந்தப்பிரஹ்மத்தை அறியும் பொருட்டு பத்திரபுஷ்பபலாதிகளைக் கையிற்கொண்டு சுருதியை உணர்ந்தவரும் பிரஹ்ம நிஷ்டருமாகிய குருவையே அடைந்து பிரஹ்ம வடிவ ஆத்மாவின் கண் கூடஸ்தவடிவ ஆத்மாவை ஏகருபமாய் பார்க்கக்கடவன்.

பிரஹ்ம நிஷ்ட (வழியின் அநுபவமுள்ளவனே வழியினைக் காட்டும் இயல்பினனுவன் அதுபோல்) பிரஹ்மத்தின் நிலைத்தவர் ஆயும் வழியின் அடையாளங்களை அறிந்து வழிகாட்டும் பதிகன் போல சுருதிகளின் அர்த்தத்தை உணர்ந்தவராயும் தம்மைச் சரண்அடைந்த அதிகாரிகட்கு வழியினை அறிவிக்கும் பதிகனைப் போலவும் அத்வைதப் பிரஹ்மத்தை உபதேசிப்பவர் எவரோ அவரே பிரஹ்ம வித்தையாகிய இலக்குமியை உடையகுருதேவர் ஆவர்.

ஆதலால் சரணடைந்த சீடன் அந்தக் குருவிற்கு எப்போதும் சேவை செய்தல் வேண்டும்.

ஞானத்திற்கு முன் செய்யும் ஈசுர குரு வேதங்களின் சேவையானது ஞானம், சித்தியாகும் பொருட்டாம் ஞானம் சித்

தியான பின் செய்யும் இம்மூன்றின் சேவை செய்நன்றி மறத்தல் என்னும் தோஷம் நீங்கும் பொருட்டாம் அதனுலேயே இங்கு எப்போதும் சேவை செய்யவேண்டும். எனச்சொல்லப்பட்டது.

## சம்பந்த இயல்,

இந்நூல் பிரஹ்மத்தைச் சொல்லுதல் பிரஹ்மம் இந்நூலாற் சொல்லப்படுதலும் ஆம் இவ்விரண்டிற்கும் பிரதிபாதக (சொல்லுதல்) பிரதிபாத்தியம் (சொல்லப்படல்) என்னும் சம்பந்தம் உள்ளதாம் பிரதிபாதனம் செய்வது எதுவோ அது பிரதிபாதகம் ஆம் இந்நூல் பிரஹ்மத்தை பிரதிபாதனம் செய்வதா இருத்தலால் பிரதிபாதகமாம் எது பிரதிபாதனம் செய்யப்படுகின்றதோ அது பிரதிபாத்தியம் என்பர் பிரஹ்மம் இந் நூலாற் பிரதிபாதனம் செய்யப்படுவதா இருத்தலாற் பிரதிபாத்தியமாம்.

இது முதலாக இன்னும் அநேகவித சம்பந்தங்களைக் கூறுவர் அவை விரியும் என்று அஞ்சியே யாம் எழுதவில்லை.

## விஷயத்தின் இயல்·

ஜீவப் பிரஹம ஐக்கியத்தினையே இந் நூலிற்கு விஷயம் என்று புலவோர் கூறுவர் இங்கே ஜீவன் என்னும் பதத்திற்குச் ஜீவ சாக்ஷியாகிய ஆத்மாவையே சொல்லப்படுகிறது,

## பிரயோஜனத்தின் இயல்.

அவித்தையும் அதன் காரியமாகிய தூல சூக்குமப் பிரபஞ்சமும் அதன்தர்மமாகிய ஜனன மரண முதலிய சம்சாரம் எதுவோ அதுயாவுமே துன்பத்திற்கு ஏதுவா இருத்தலால் அனர்த்தமெனப்படும்.

அவற்றின் அத்தியந்த நிவிருத்தியும் பரமானந்தமாகிய பிரஹ்மம் எதுவோ அதன் பிராப்தியுமே இந் நூலிற்கு பரப்பிரயோஜனமாம்.

## குருசேவை நான்கின் இயல்.

இச்சாதனசதுட்டய சம்பன்ன அதிகாரி செய்யும் சற் குரு சேவையாவது ஆப்தம் அங்கம் ஸ்தானம் சத்பாவமென் பவையாம் குருவுக்கு அநுகூல விருத்தியே ஆப்தமாம் குருவின் பாதம் கழுவுதல் முதலியன அங்கமாம் குருவினது கிருகக் க்ஷேத்திராதி ரக்ஷணையே ஸ்தானமாம் ஸ்ரீ குருவினை சாக்ஷாத் பரமசிவன் எனவே பாவிக்கும் பாவனையே சத்பாவமாம்.

## இனி மூன்று அதிகாரிகளின் இயல்.

கர்மகாண்டி, பத்திகாண்டி, ஞானகாண்டி என மூவதிகாரி கள்உளர். அவர்களுள் தேகக் கிருக கிருஷியாதிகளில் கிரம மாக யான் எனதென்னும் அகந்தை மமதை உடையவனே கர்ம காண்டியாம் சகல கர்மங்களையும் ஈசுரார்ப்பணமாகச்செய்பவனே பக்தி காண்டியாம் சகல கர்மங்களுக்கும் தான் சாக்ஷியென்றிருப் பவனே ஞானகாண்டியாம், இன்னும் இப்படியே அதிகாரிகள் பலர் ஆசிரியர் பலர் கூறப்பட்டுள்ளது அறியவிரும்புவோர் வேதாந்த சூடாமணி முதலிய நூல்களில்கண்டுகொள்க.



உ
சிவமயம்.
ஓம் குமாராய நம:

வேதாந்தசார அமிருத

# சிவராஜயோகம்

யாக்ஞவல்கிய முனிவர் ஆதீத்யலோகஞ்
சென்று அங்குள்ள ஆதித்தியரை வணங்கி
ஹே பகவன் ! ஹே ஆதித்ய எனக்கு ஆத்ம
தத்துவத்தையுய் இராஜ்யோகத்தையும்
கூறியருள்வீராக என

## ஞானத்தோடு கூடிய இயமாதி அட்டாங்கயோகம் கூறப்படுகின்றது.

குரு பக்தருள் முதன்மை வாய்ந்த சீடரை நோக்கி சாவதானமாகக் கேட்பாயாக என்று ஆதரவோடு இந்த ராஜயோகத்தைக் கூறுகின்ருர் இராஜாக்களுக்கு உபயோகமான யோகம் இராஜயோகமாம் அல்லது யோகங்களுக்கு எல்லாம் இராஜாவா இருத்தலின் இராஜயோகம் எனப்படுகின்றது, மற்ற யோகங்கள் தேக பிரயாசையைச் செய்வன இந்த இராஜ யோகமோ பிரயாசை இன்றி மோக்ஷரூப புருஷார்த்தத்தையே கொடுக்கும். ஹடயோகம் போன்றே இதற்கும் எட்டு அங்கங்கள் உள்ளன அவ்வங்கங்கள் ஹட யோகத்தில் மிக விரிவாகக் கூறப்படும்.

அதன் சூட்சும அங்கத்தை யாம் சுருக்கமாகக் கூறுவாம் சமாதி இல்லாத புருஷனது மனம் சஞ்சலம் அடையினும் சமாதியால் ஜெயிக்கப்படும் ஞானி சமாதியில் நிலைக்கின்ருன் அதனுல் ஞானிக்குப் பிரவிருத்தி உண்டாகின்றதில்லை, ஆதலின் (அந்தச் சமாதி இந்த எட்டு அங்கங்களாஸ் உண்டாகின்றது.

அவை 1. இயமம், 2. நியமம், 3. ஆசனம், 4. பிராணுயாமம், 5. பிரத்தியாகாரம். 6. தாரணை; 7. தியானம், 8. சமாதி என்பனவாம். இவ்வெண்வகை யோக உறுப்புகளையும் தொல்காப்பியர் கூறிய அறுவகைப்பட்ட என்னும் சூத்திர உரையில் உச்சிமேற் புலவர்கொள் நச்சினர்க்கு இனியர் கூறிய உரைச் சூத்திரம் ஆவது.

இயமம், நியமம் ஆசனம் (இருப்பு) பிராணுயாமம் (வளி நிலை) பிரத்தியாகாரம் (தொகை நிலை) தாரணை (பொறை நிலை) தியானம் (நினைதல்) சமாதி என்னும் எண்வகை உறுப்புக்கள்.

(1) "பொய், கொலை, களவே, காமம் பொருள் நசை
இவ்வகை ஐந்தும் அடங்கியது இயமம்"

(2) "பெறுதற்கு உவத்தல் பிழைப்பு நனி உலர்த்தல்
கற்பன கற்றல் கழிகடும் தூய்மை
பூசனைப் பெறும் பயன் ஆசாற்கு அளித்தலொடு
நயனுடை மரபின் நியமம் ஐந்தே"

(3) "நிற்றல், இருத்தல், கிடத்தல், நடத்தல் என்று
ஒத்த நான்கின் ஒல்கா நிலைமையொடு
இன்பம் பயக்கும் சமய முதலிய
அந்தம் இல் சிறப்பின் ஆசனமாகும்"

(4) "உந்தியொடு புணர்ந்த இருவகை வளியும்
தம் தம் இயக்கம் தடுப்பது வளிநிலை"

(5) "பொறி உணர்வு எல்லாம் புலத்தின் வழாமல்
ஒரு வழிப்படுப்பது தொகை நிலைப்புறனே"

(6) "மனத்தினை ஒருவழி நிறுப்பது பொறையே"

(7) "நிறுத்திய அம்மனம் நிலைதிரியாமற்
குறித்த பொருளொடு கொளுத்தல் நினைவே"

(8) "ஆங்ஙனம் குறித்த அம்முதற் பொருளொடு
தான்பிறனாகாத்தகை அதுசமாதி" என்வுங்கூறியுளார்

சிவஇராஜயோகத்திற் கூறிய உறுப்புக்களின் இயல்.

(1) "அஹிம்சை (கொல்லாமை) சத்தியம், அஸ்தேயம் (திருடாதிருத்தல்) பிரஹ்ம சரியம், க்ஷமை (பொறை) என்னும் இவ்வைந்தும் இயமமாம்

பிரஹ்மசரியம் = 1. பெண்களை ஆசையோடு நினைத்தல் 2. கீர்த்தனம். 3. கேலி விளையாடுதல், 4, பார்த்தல், 5. இரஹசியம் பேசுதல், 6. சங்கற்பம், 7. நிச்சயம் 8. கிரியா நிவிருத்தி என்பன இவற்றினை அஷ்ட வித மைதுனம் என்பர். இவற்றினை நீக்கி இருது காலத்தில் தன் மனைவியைப் புணர்ந்து அந்நிய மாதரை மனம் வாக்குக்காயங்களால் விலக்கி இருத்தலே பிரஹ்ம சரியமாம்.

(2) 1. சௌசம், 2. சந்தோஷம். 3. தவம், 4. சித்தாந்த வாக்கிய சிரவணம். 5. ஈசுரப்பிரணிதானம் இவ்வைந்தும் நியமமாம்.

ஞான சமுத்திரக் கிரந்தத்துள் பத்துவித இயமமும் பத்து வித நியமமும் சொல்லப்பட்டிருக்கிறது. வேதாந்த சம்பிரதாயத்தில் இயம நியமாதிகட்கு ஐந்து ஐந்து பதங்களே உள்ளன.

(3) ஆசனங்களின்பேதம் அநந்தமாம் அவற்றுள் ஸ்வஸ்திகம். கோமுகம், வீரம், கூர்மம், பத்தம். குக்குடம், உத்தாரம், கூர்மகம், தநுஷம், சிம்மம், பத்ரம் சித்தம் மத்யம், பச்சிமதாநம், மயூரம், முதலிய 84 ஆசனங்கள் யோக நூல்களிற் கூறப்பட்டிருக்கின்றது.

அவற்றின் இலக்கணங்களும் கூறப்பட்டுள்ளன. நூல் விரிவடையும் என்ற பயத்தாலும் வேதாந்தத்தில் அத்தியந்தம் உபயோகம் இன்மையினுலும் அவற்றின் இலக்ஷணங்களை இவ்விடத்தில் எழுதவில்லை. அவற்றுள்ளும், சிம்மம், பத்மம் பத்ரம், சித்தம் என்னும் ஆசனங்களும் பிரதானங்கள் என்பர். அந்நான்கன் உள்ளும் சித்தாஸனம் அத்தியந்தம் பிரதானமாம், அதன் இலக்ஷணம் இதுவாம். இடது குதிக்காலைக் குதலிங் கங்களின் மத்தியான யோனிஸ்தானத்தில் அழுத்திக் கொண்டு வலது குதிக்காலை லிங்கத்தின் பேரில் அழுத்திக் கொண்டு புருவங்களின் மத்தியில் திருஷ்டியை வைத்து கட்டைபோல் நிமிர்ந்து ஜலனம் இன்றி சரீரம் இருப்பதுவே சித்தாஸனமாம் சிலர் இதன் இலக்ஷணத்தை வேறு விதமாகவும் கூறுவார்.

இடது குதிக்காலை யோநிஸ்தானத்தில் வைக்காமல் லிங்கத் தின்மீது வைத்து அதன்பேரில் வலது குதிக்காலை வைக்கவேண் டியது ஏனைய இலக்ஷணங்கள் முன்போன்றனவே யாம் இந்தச் சித்தாஸனமே அதிக சிரேஷ்டமானது ஏன் எனில் சில ஆசனங் கள் ரோகநாசத்திற்குயேதுவாம், சில ஆசனங்கள் பிராணுயா மாதி சமாதி அங்கங்கட்குச் சாதனங்களா இருக்கின்றன. சித் தாசனமோ சமாதிகாலத்தில் உண்டாகின்றன ஆதலால் இது அதிக பிரதானமானதாம் இதனையே வஜ்ஜிராஸனம் என்றும் முத்தாஸனம் என்றும் குப்தாஸனம் என்றுங் கூறுவார் ஆசன சித்தியானதின் பின்னர்தான் பிராணுயாமமும் செய்தல் வேண் டும், அந்தப் பிரணுயாமம் அனேக பிரகாரமா இருப்பினும் அதன் இலக்கணம் சுருக்கமாகக் கூறப்படுகிறது.

மூக்கின் இடது துவாரத்தின் வழியாய் இடைஎன்னும் நாடி யால் வாயுவைப் பூரித்தல்வேண்டும் அதனைப் பூரசம் என்றுங் கூறுவர். மூக்கின் வலது துவாரத்தால் வாயுவை விடல்வேண் டும் அதனை ரேசகம் என்றுங்கூறுவார், சுழுமுனையால் வாயுவை நிறுத்தல் வேண்டும் அதனைக் கும்பகம் என்றுங் கூறுவர். இவ் வாற்ருல் பூரக ரேசக கும்பகங்களுக்குப் பிராணுயாமம் என்று பெயராம் அந்தப் பிராணுயாமம் இரண்டு பிரகாரமாம். ஒன்று

அகர்ப்பம், மற்ருென்று ச க ர் ப் ப ம ா ம். பிரணவ உச்சாரணம் இன்றிய பிராணுயாமம் அகர்ப்பம் எனப்படும். பிரணவ உச்சார ணத்தோடு கூடிய பிராணுயாமம் சகர்ப்பம் எனப்படும்.

5. விஷயங்களினின்றும் சகலஇந்திரியங்களேயும் நிரோதம் செய்வது பிரத்தியாகாரம் எனப்படும்.

6. இடை இன்றி அந்தக்கரணம் நிலேத்தலே த ா ர ணே யென்று சொல்லப்படும்.

7. அந்தராயத்தோடு கூடி அத்துவிதீயப் பிரஹ்மத்தில் செல்லும் அந்தக்கரணத்தின் பிரவாகம் தியாநம் எனப்படும்.

8. எழுந்த சமஸ்காரங்களின் திரஸ்காரமும். அ ட ங் கி ய சமஸ்காரங்களின் பிரகடமும்உண்டாய் அந்தக்கரணம் ஏகாக்கிர மாய்ப் பரிணமித்தலே சமாதி எனப்படும்.

அந்தச்சமாதி இ ர ண் டு பிரகாரமாம். ஒன்று சவிகர்ப்ப சமாதியாம். மற்ருென்று நிருவிகர்ப்ப சமாதியாம்.

ஞாதா ஞான ஞேய வடிவ திரிபுடி விளக்கத்தோடு கூடிய அத்துவிதீயப்பிரஹ்மத்தில் உள்ள அந்தக்கரண விருத்தியின் ஸ்திதி. ஸவிகர்ப்ப சமாதி எனப்படும்.

அந்தச்ஸவிகர்ப்பமும் இரண்டு பிரகாரமாயுள்ளன. ஒன்று சப்தானு வித்தமாம் மற்ருென்று சப்தாநநு வித்தமாம். அஹம் பிரஹ்மாஸ்மி என்னும் சப்தத்தோடு அநுவித்தம் அதாவது கூடி யது.சப்த்தானு வித்தம் எனப்படும். சப்தமின்றியதனே சப்தாநநு வித்தம் என்பர்.

திரிபுடியின் விளக்கமின்றிய அகண்டப் பிரஹ்மாகாரமான அந்தக்கரண விருத்தியின் ஸ்திதி நிர்விகர்ப்ப சமாதி எனப்படும் இவ்வாற்ருல் சவிகர்ப்ப, நிர்விகர்ப்ப ரூபத்தால் சமாதி இரு வகையாகின்றது. அவற்றுள் சர்விகர்ப்ப சமாதி சாதனமாம். நிர்விகர்ப்ப சமாதி பலமாம்.

சாதனரூப சவிகர்ப்ப சமாதியில் திரிபுடி ரூபத் துவைதம் பிரதிதீயாம் ஆயினும் அந்தத் துவைதம் இவ்வாற்ருல் பிரஹ்ம ரூபமாகப் பிரதீதியாகின்றது. மண் ரூபத்தை மண் ரூபமா அறித லால் விவேகிக்கு மண் விகாரமாகக் கடாதிகளின் பிரதீதியாகின் றது. ஆயினும் அது மண் ரூபமாகவே பிரதீதியாகின்றது. அது போல் ஸவிகர்ப்ப சமாதியில் திரிபுடி ரூபத்துவைதம் பிரஹ்ம ரூபமாகவே பிரதீதியாகின்றது.

நிருவிகர்ப்ப சமாதியிலும் திரிபுடித் துவைதம் இருப்பினும் அது பிரதீதி ஆகின்றதில்லை அது ஜலத்தில் இட்ட உப்பைப் போல அது நீரிஞேடு கலந்திருத்தல் நேத்திரத்திற்கு புலப்படா ததே போலவாம். இவ்வாற்ருல் சவிகர்ப்ப நிர்விகர்ப்ப சமாதி களுக்கு இப்பேதம் சித்தித்தது. ஸவிகர்ப்ப சமாதியில் பிரஹ்ம ரூபமாகத் துவைதம் பிரதீதியாதலும் நிர்விகர்ப்ப சமாதியில் திரி புடி ரூபத்துவைதம் பிரதீதியாகாமையுமாம்.

### சுழுத்திக்கும், நிர்விகர்ப்ப சமாதிக்கும் உள்ள பேத

அவ்வாறே சுழுத்திக்கும் நி ர் வி க ர் ப் ப சமாதிக்கும் இது பேதமாம். சுழுத்தியில் அந்தக்கரணம்பிரஹ்மாகாரவிருத்திகளின் அபாவம் இருக்கின்றன. நிர்விகர்ப்ப சமாதியிலோ பிரஹ்மாகார விருத்தியின் அந்தக்கரணம் இருக்கின்றது, அவற்றின் அபாவம் இல்லைஇவ்வாற்ருல் சுழுத்தியில் விருத்தி சகித அந்தக்கரணத் தின் அபாவம்உண்டாகின்றது. நிருவிகர்ப்பசமாதியிலோவிருத்தி சகித அந்தக்கரணம் இருக்கின்றது. அது பிரதீதியாகின்றதில்லை நிர்விகர்ப்ப சமாதியில் அந்தக்கரணத்தின் எந்தப் பிரஹ்மாகார விருத்தி உண்டாய் இருக்கிறதோ அதற்கு ஏது ஸவிகர்ப்பசமாதி அப்பியாசமாம். ஆதலால் சா த ந ரூ ப எட்டு அங்கங்களில் ஸ வி க ர் ப் ப சமாதி எண்ணப்பட்டிருக்கின்றன. நிர்விகர்ப்ப சமாதி பலமாம்.

### நிருவி கற்ப சமாதி இருவகையாம் எனல்.

அ ந் த நி ரு வி க ர் ப் ப ஸ ம ா தி யு ம் இருவகைத்தாம்.

ஒன்று அத்வைதபாவனுரூபம். மற்றொன்று அத்வைத அவஸ்தான ரூபமாம்.

அத்வைத பிரஹ்மாகாரமான அந்தக்கரணத்தின் அஞ்ஞாத விருத்தியோடு கூடியது அத்வைத பாவனு ரூப நிருவிகர்ப்ப சமாதி என்பர்.

இந்தச் சமாதியின் அப்பியாச மிகுதியால் பிரஹ்மாகார விருத்தியும் சாந்தமாய் விடுகின்றது. ஆதலால் விருத்தி இன்றி யதனை அத்வைத அவஸ்தான ரூப நிருவி கர்ப்ப சமாதி என்பர்.

எங்ஙனம் காய்ச்சியஇரும்பின் மீது விடப்பட்ட ஜலத்திவலை எப்படி அவ்விரும்பிலேயே பிரவேசிக்கின்றதோ அங்ஙனமே அத்வைத பாவனுருப சமாதியின் திடமான அப்பியாசத்தினுல் அத்தியந்தப் பிரகாசமான பிரஹ்மத்தின் விருத்திலயமாகின்றது. அது அத்வைத அவஸ்தாந ரூப நிவிருகர்ப்ப சமாதி என்பர்.

## அத்வைத அவஸ்தாந ரூபசமாதிக்கும் சுழுத்திக்கும் உள்ள பேதம்.

அத்வைத அவஸ்தாந ரூப சமாதிக்கும் சுழுத்திக்கும் இவ்வளவு பேதமுண்டு.

சுழுத்தியில் அஞ்ஞானத்தில் விருத்திலயம் உண்டாகின்றது. அத்வைத அவஸ்தான ரூப சமாதியில் பிரஹ்மப் பிரகாசத்தில் விருத்தியின் லயமுண்டாகின்றது.

சுழுத்தியின் ஆனந்தம் அஞ்ஞான ஆவிருதமா இருக்கின்றது. சமாதியில்நிராவரணமானபிரமாநந்தத்தின்விளக்கமுண்டாகின்றது. லயம், விக்ஷேபம், கசாயம் ரஸாஸ்வாதம் என நான்கு.

## நிர்விகர்ப்ப சமாதியின் விக்கினங்கள்.

ஆனுல் நிருவிகற்ப சமாதியில் நான்கு விக்கினங்கள் இருக்

கிறனன். அவற்றினை நீக்கற்பொருட்டு அவற்றின் சொரூபத்தை கூறுகின்றேன்.

லயம், விக்ஷேபம், கசாயம், ரஸாஸ்வாதம் என விக்கினங் கள் நான்காம்.

ஆவஸ்யத்தினுலாவது நித்திரையினுலாவது விருத்தி இல் லாமல் இருத்தற்கு லயம் என்று பெயர். அந்த லயத்தால் சுழுத் திக்குச் சமானமான அவஸ்தை உண்டாகின்றது. அதனுல் பிரஹ் மானந்தத்தின் விளக்கம் உண்டாகிறதில்லை. ஆதலால் நித்திரை ஆவஸ்ய முதலிய தோஷங்களால் எப்போது விருத்தி தனது உபாதானமான அந்தக்கரணத்தில் லயமாகின்றதைப் பார்க்கின் ருனே அப்போது யோகியானவன் சாவதானனுய் நித்திரை முதலியவற்றைத் தடுத்து விருத்தியை விழிப்பிக்குக. இவ்வாறு லய ரூப விக்கினத்தின் விரோதியான நித்திரை, ஆவஸ்யம் என்பவற்றின் (நிரோத சகித விருத்தியின் பிரவாக ரூப சாக்ர தையை) (விழி உண்மையை) கௌடபாதர் சித்த சம்போதநம் என்று கூறி இருக்கின்ருர்.

### விக்ஷேபத்தின் அருத்தம் இதுவாம்.

பூனை முதலியவற்றின் பயத்தால் சிட்டுக்குருவிகள் வீட்டுக் குள் பிரவேசிக்கின்றன. அப்போது பய வியாகூலங்களுக்குக்கிர கத்திற்குள் அக்காலத்தில் இடங்காணப்படுகின்றதில்லை. ஆத லால் மீண்டும் அவைவெளியே வந்து பயத்தையோ அல்லது மரண ரூபதுக்கத்தையோஅநுபவிக்கின்றது. அதுபோல் அநாத்ம பதார்த்தங்களைத் துக்கயேதுவென அறிந்து அத்வைத ஆனந்தத் தினை அடையும்படி அந்தர்முகமாகிய விருத்தி ஆண்டு விருத்தி க்குவிஷயமாகிய சேதனம் அதிசூட்சுமாய் இருத்தலால் கிஞ்சித் காலமும் விருத்திநிலைத்தல்இன்றி அக்காலத்திலேயே சேதன ஸ்வரூபாநந்தத்தின் லாபம் உண்டாகிறதில்லை. ஆதலான் விரு த்தி பகிர் முகம் உண்டாய் னடுகின்றது. இவ்வாற்ருல் பகிர் முக விருத்தியே விக்ஷேபம் எனப்படும்.

அந்த விருத்தியின் ஸ்திரத்தன்மைஇன்றிச்சொருபாநந்தத்தின் இலாபம் உண்டாகின்றதில்லே. ஆ த லா ல் அந்தர் முக விருத்தி உண்டாயினும் எவ்வளவு காலம் விருத்தி பிரஹ்மா காரமாகவில்லேயோ அவ்வளவு காலம் பாஹிய பதார்த்தங்களில் தோஷ பாவனேயால் விருத்தியை யோகி பகிர் முகமாக விடுகிற தில்லே, ஆனால் விருத்தியின் அந்தர் முகத்தன்மையினேயே நிலே பெறச் செய்வன்.

விக்ஷேப ரூப விக்நத்தின் விரோதியான யோகியின் பிரயத் தனத்தைக் கௌடபாதர் சமம் என்று கூறி இருக்கின்ருர்.

ராகாதி தோஷத்தினேக் கசாயம்யென்பர். ராகாதி தோஷங் கள் இருவகையாம். ஒன்று பாஹியாம். மற்ருென்று ஆந்தரமாம்

எவற்றிற்குப் புத்திரன் ஸ்திரீ தனுதி விஷயங்கள் இருப்பன வாகின்றனவோ அவை பாஹியமாம். சென்றகாலத்தில் அல்லது வருங்காலத்தில்சிந்தனுரூப மனேராச்சியம்ஆந்தரம் எனப்படும். இவ்விருவகை இராகாதிகளும் சவாதியிற் பிரவிர்த்தித்தயோகி யினிடத்துச்சம்பவியாவாம். ஏன் எனின் சித்தத்திற்கு ஐந்து பூமி கைகள் இருக்கின்றன. க்ஷேபம், மூடத்தன்மை, விக்ஷேபம், ஏகாக்கிரத்தன்மை, நிரோத பூமிகை என்பனவாம். அவற்றுள் உலக வாசனே, தேக வாசனே, சாஸ்திர வாசனே என்ற முதலிய ரஜோகுணத்தின் பரிணுமங்களாகிய திட அநாத்ம வாசனேயைச் க்ஷேபம் என்பர். நித்திரை ஆலஸ்ய முதலிய தமோகுணபரிணு மங்களே மூடத்தன்மை என்பர். தியானத்திற்கு பிரவிர்த்த சித்தம் ஒரு காலத்தில் வெளியே செல்லுவதனே வி க்ஷே ப ம் என்பர். அந்தக்கரணத்தின் அதீத பரிணுமமும், வர்த்தமான பரிணுமமும் சமானுகாரமாதலே ஏகாக்கிரத்தத்தன்மை என்பர்.

இந்த ஏகாக்கிரத்தன்மையின் இலக்கணம். யோகசூத்திரத் தில் பதஞ்சலி பகவானுல் கூறப்பட்டிருக்கின்றது. அதன் தாற் பரியம் இதுவாம். சமாதி காலத்தின் யோகியின் அந்தக்கரணத் தில் ஏகாக்கிரத்தன்மை உண்டாகின்றது. அந்த ஏகாக்கிரத்

தன்மை விருத்தியின் அபாவரூபம் அன்று. ஆனால் சமாதி காலத்தில் உண்டாம். அந்தக்கரணத்தின்பரிணமங்கள் எல்லாம் பிரஹமத்தினையே விஷயம் செய்கின்றன. ஆதலால் அந்தக்கரணத்தின் அதீத பரிணமமும், வர்த்தமான பரிணமமும் கேவல பிரஹ்மாகாரமாதலால் சமாநாகாரம் ஆகின்றன. அந்த ஏகாக்கிரத்தின் விரிவை நிரோதம் என்பர். இவ்வைந்து பூமிகைகளும் அந்தக்கரணத்தினவாம். பூமிகை என்பது அவஸ்தையாம்.

இவ்வைந்து பூமிகைகளோடு கூடிய அந்தக்கரணத்திற்கு முறையே 1. க்ஷிப்தம், 2. மூடம், 3. விக்ஷிப்தம், 4. ஏகாக்கிரம், 5. நிருத்தம் என்று பெயராம்.

அவற்றுள் க்ஷிப்தமூட அந்தக்கரணங்களுக்கோ சமாதியில் அதிகாரமில்லை. விக்ஷிப்தஅந்தக்கரணத்திற்கு அதிகாரம்உண்டு ஏகாக்கிர நிருத்த அந்தக்கரணங்கள் சமாதி காலத்தில் உண்டாகின்றன. இது யோக சாஸ்திரங்களிற் கூறப்பட்டிருக்கின்றது.

ராகாதி தோஷத்தோடு கூடிய அந்தக்கரணம் க்ஷிப்தமாகவே இருக்கின்றது. அந்த க்ஷிப்த அந்தக்கரணத்திற்கு யோகத்தில் அதிகாரம் இல்லை. ஆகையால் ராகாதி தோஷ கசாயம் சமாதிக்கு விக்நம் என்று கூறுதல் பொருந்தாது. அங்ஙனமாயினும் இது சமாதானமாம். பாஹியமாகவாவது ஆந்தரமாகவாவது இருக்கும் ராகாதிகள் க்ஷிப்தஅந்தக்கரணத்திலேயே உண்டாகின்றன. அந்தஅந்தக்கரணத்திற்கு அதிகாரமும்இல்லை. ஆயினும் அனேக ஜென்மங்களில் முன் அநுபவிக்கப்பட்ட பாஹிய ஆந்தர ராகத்துவேஷங்களின் சூட்சும சமஸ்காரம் விக்ஷிப்தாதியை உடைய அந்தக்கரணத்திலும் சம்பவிக்கும். ஆதலால் ராகத்துவேஷங்களுக்கு கசாயம் என்று பெயர் இல்லை, ஆனால் ராகத்துவேஷங்களின் சமஸ்காரத்திற்குக் கசாயம் என்று பெயராம். அந்தச் சமஸ்காரம் அந்தக்கரணம் இருக்கும் வரையில் நீங்குகின்றதில்லை. ஆனதால் சமாதி காலத்திலும் அந்தக்கரணத்தில் இருக்கின்றது, ஆனால் ராகத்துவேஷாதிகளின் உற்பூத சமஸ்காரம்சமாதிக்கு விரோதமாம். அநுற்பூதம் விரோதி

அன்று வெளிப்பட்டதனை உற்பூதம் என்பர். வெளிப்படாததனை அநுற்பூதம் என்பர்.

சமாதியில் பிரவிர்த்தித்த யோகிக்குராகத்துவேஷங்களினது சமஸ்காரத்தின் பிரகடத்தன்மை உண்டாமாயின் அதனை விஷயத்தில் தோஷ திருஷ்டியால் அமிழ்த்தல் வேண்டும். விக்ஷேபத்திற்கும், கசாயத்துக்கும் இவ்வளவு பேதமுள்ளது. பாஹிய விஷயாகார விருத்திக்கு விக்ஷேபம் என்று பெயர்.

யோகியின் பிரயத்தனத்தினல் யாண்டு விருத்தி அந்தர் முகமாயினும் அடக்கப்பட்டு பிரஹ்மத்தை விஷயஞ் செய்வதில்லையோ அவ்விருத்தியினைக் கசாயம் என்பர். விஷயத்தில் தோஷ தரிசனத்தோடு கூடிய யோகியின் பிரயத்தனத்தினல் கசாயமாகிய விக்நம் நிவிருத்தி ஆகின்றது.

## ரஸாஸ்வாதத்தின் பொருள் இதுவாம்.

யோகிக்குப் பிரஹ்மாநந்தத்தின் அநுபவமுண்டாகின்றது. விக்ஷேப ருப துக்கத்தின் நிவிருத்தி உண்டாகின்றது. அநுபவமுண்டாகின்றது. சிலவிடத்துத் துக்க நிவிருத்தியினலும் ஆனந்தம் உண்டாகின்றது. எங்ஙனம் சுமையைத்தூக்கும் புருஷனுக்குச் சுமையை இறக்குவதனல் ஆனந்தமுண்டாகின்றது. ஆண்டு ஆனந்தத்தில் வேறு விஷயம் காரணம் அன்று சுமையாலுண்டான துக்கத்தின் நிவிருத்தியே எனக்கு ஆனந்தம் உண்ணாயிற்று என்று கூறுகின்ருன். ஆதலால் துக்க நிவிருத்தியும் ஆனந்தத்திற்கு ஏதுவாம்.

அங்ஙனமே யோகிக்குச் சமாதியில் விக்ஷேபத்தால் உண்டான துக்க நிவிருத்தியினல் எந்தஆனந்தம் உண்டாகின்றதோ அதன் அநுபவத்திற்கு ரஸாஸ்வாதம் எனப்படுகின்றது.

துக்க நிவிருத்தியினல் உண்டாகிய ஆநந்தத்தின் அநுபவத்தினலேயே யோகி சாந்தி அடைந்து விடில் சகல உபாதிகளும் இன்றிய பிரஹ்மாநந்தாகார விருத்தியின் அபாவத்தினல்

அதன் அநுபவம் சமாதியில் உண்டாகாது. ஆதலால் துக்க நிவிருத்தியாலுண்டாகும் ஆனந்தத்தின் அநுபவ ரூப ரஸாஸ்வாதமும் சமாதியில் விக்னமாகும்.

இச்சித்த பதார்த்தத்தின் பிராப்தி இன்றியும் விரோதியின் நிவிருத்தியால் ஆனந்தமுண்டாகின்றதென்பதில் வேறு திருஷ்டாந்தம். பூமியிற் புதையல் இருக்கின்றது. அந்த நிதியாண்டு கொடிய விஷமுள்ள சர்ப்பத்தினால் காக்கப்பட்டிருக்கின்றது. ஆண்டு நிதியை அடைவதன் முன்னும் அதனை அடைதற்கு விரோதியாக இருந்த சர்ப்பத்தின் நிவிருத்தியினாலும் ஆனந்த முண்டாகின்றது. ஆண்டு சர்ப்ப நிவிருத்தியாலுண்டான ஆநந்தத்தில் ஒருவன் திருப்தி அடைந்து புதையல் எடுக்கும் யத்தனத்தை விட்டு விடில் புதையலை அடைதலால் உண்டாகும் பரமானந்தத்தின் அடைவுண்டாகாது. அதுபோல் அத்வைதபிரஹ்மரூபம் புதையலாம். தேகாதி அநாத்ம பதார்த்தங்களின் பிரதீதி ரூப விக்ஷேபம் சர்ப்பமாம். விக்ஷேப ரூப சர்ப்பத்தின் நிவிருத்தியால் உண்டாகும் அவாந்தர ஆனந்த ரூப ரஸத்தின் அநுபவம். ஆஸ்வாதநமாம் அது புதையல்வடிவ அத்வைதப் பிரஹ்மத்தினை அடைவதாலுண்டாகும் மஹானந்தத்தின் அடைவிற்குப் பிரதிபந்தகமா இருத்தலால் விக்நம் எனப்படுகின்றது.

## அல்லது ரஸாஸ்வாதத்திற்கு இது வேறு பொருளாம்.

சவிகர்ப்ப ஸமாதியின் பின் நிருவிகர்ப்ப ஸமாதி உண்டாகின்றது. ஸவிகர்ப்ப ஸமாதியின் திரிபுடி பிரதீதியாகின்றது ஆதலால் ஸவிகர்ப்ப ஸமாதியின் ஆனந்தம் திரிபுடி ரூப உபாதி சகிதமா இருத்தலால்ஸோபாதிகம்எனப்படுகின்றது. நிர்விகர்ப்ப ஸமாதியில் நிருபாதிக ஆனந்தமுண்டாகின்றது. இவ்வாற்றால் சவிகர்ப்ப ஸமாதியின் பின்னரும், நிருவிகர்ப்ப சமாதியின் ஆரம்பத்திலும் சவிகர்ப்பசமாதியின் ஸோபாதிகானந்தம் விட முடியாததாய் அநுபவிக்கப்படுகின்றது. ஆதலால்விக்ஷேபநிவிருத்தியால்

உண்டாகும் ஆனந்தத்தின் அநுபவம் ரஸாஸ்வாதம் எனப்படும் அவ்விருவித ரஸாஸ் வாதங்களும் நிருவிகர்ப்ப சமாதியின் பரமானந்த அனுபவத்திற்கு விரோதிகளாதலால் விக்கினங்களாகின்றன. ஆதலால் ரஸாஸ் வாதத்தினையும் தியாகம் செய்க.

இவ்வாறு நிருவிகர்ப்பசமாதியில் நான்கு விக்கினங்களிருக்கின்றன. அந்நான்கு விக்கினங்களும் சமாதியின் ஆரம்பத்தில் உண்டாகின்றன.

ஆனதால் சாவதானமாய் நான்கு விக்கினங்களையும் தடுத்து சமாதியில் பரமானந்தத்தினை வித்துவான் அனுபவிக்கின்றான். அவனையே ஜீவன் முத்தன் என்பர்.

## சர்வ அநாத்ம பதார்த்தங்கட்கும் கிரமமாக நிர்க்குணப் பிரஹ்மத்தில் லய சிந்தனம்.

இவவாறு ஆசிரியர் சிஷ்யனுக்கு இரகசியமான தத்துவத்தை உபதேசம் செய்தும் சிஷ்யன் முகத்தில் அத்தியந்தம் பிரசன்னத்துவம் இல்லை என்பதறிந்து இவ்வாறு உணர்ந்தனர் சிஷ்யன் கிருதார்த்தன் ஆகவில்லை, கிருதார்த்தனு இருந்தால் அவன் முகம் பிரஜன்னமாயிருக்கும் ஆதலால் மீண்டும் தூலக் கிரமமாக உபதேசம் செய்தற் பொருட்டு லய சிந்தனத்தைக் கூறுகின்றார்.

எங்ஙனம் மண்ணின் காரியம் ஆனகடம் உள்ளும் புறமும் மண்ணாகவே இருக்கின்றது. ஆதலின் மண்ணின் காரியங்கள் எல்லாம் மண்ணின் வடிவமாகவே இருக்கின்றன. நுரை முதலியன நீரின் சொருபமாகவே இருக்கின்றன. இவ்வாறு எது எதன் காரியமோ அது அந்தக்காரண வடிவத்தினும் பின்னம் அன்று ஆனால் காரியம் காரண வடிவமாகவே உள்ளன. சர்வப் பிரபஞ்சத்திற்கும் மூலகாரணம் ஈசுரனுவன் ஆதலின் காரியப் பிரபஞ்சம் யாவுமே ஈசுர சொருபத்தினும் பின்னமன்று. ஆனால் சர்வப்பிரபஞ்ச சொருபமும் ஈசுரனேயாவன் அந்த ஈசுரன் நான் என்றிவ்வாறு லய சிந்தனத்தைச் செய்ய வேண்டும்.

## லய சிந்தனையின் சுருக்கமான கிரமம் இதுவாம்.

ஸ்தூலப்பிரஹ்மாண்டம் முற்றும் பஞ்சீகிருத பஞ்ச மஹா பூதங்களின் காரியமாம். அதன்கண் எதுபிருதிவியின் காரியமோ அது பிருவியின் சொருபமாம். ஜலத்தின் காரியம் ஜலத்தின் சொருபமே ஆம். இவ்வாறு-எது எதன் காரியமோ, அது அதன் சொருபமேயாம் இவ்வாறே எல்லாத்தூலப்பிராஹ்மாண்டங்களும் பஞ்சீகிருத பஞ்சமஹா பூதங்களின் சொருபமேயாம்.

பஞ்சீகிருத பஞ்சமஹாபூதங்கள் அபஞ்சீகிருத பூதங்களின் காரியமாம் ஆகலின் அபஞ்சீகிருத பூதங்களின் சொருபமேயாம் பிந்நம்அன்றும் அந்தக்கரணமுதலிய சூட்சும சிருஷ்டியும்,அபஞ்சீகிருத பூதங்களின்காரியமா இருத்தலால் அபஞ்சீகிருத பூதங்களின் சொருபமேயாம். அதில் அந்தக்கரணம் சகலபூதங்களின் சத்துவகுண காரியமா இருத்தலால் சத்துவகுண சொருபமேயாம். பூதங்களின் இரசோகுண காரியமான பிராணாதி வாயுக்கள் இரசோகுண சொருபமேயாம், குத இந்திரியம் பிருதிவியின் இரசோகுண காரியமா இருத்தலால் அது பிருதிவியின் இரசோகுண சொருபமேயாம். கிராண இந்திரியம் பிருதிவியின் சத்துவகுண காரியமாம் ஆதலின் அது சத்துவகுண சொருபமேயாம் இங்ஙனமே ரஸனஇந்திரியமும் உபஸ்த இந்திரியமும் ஜலத்தின் சத்துவகுணரஸோகுண சொருபங்களாம், நேத்திரமும் பாதமும் தேயுவின் சத்துவகுண ரஸோகுண ஸ்சொருபங்களாம், சுரோத்திரமும் வாக்கும் ஆகாசத்தின் சத்துவகுண இரஸோகுண சொருபமேயாம். இவ்வாறு சூட்சும சிருஷ்டி முற்றும் அபஞ்சிகிருத பூதங்களின் சொருபமேயாம்.

## சர்வ அநாத்ம பதார்த்தங்களுக்கும் பிரஹ்மத்தின் கண் லயசிந்தனம்

இந்தப்பிரகாரம் சிந்தனைசெய்து அபஞ்சீகிருத பூதங்களின் லயசிந்தனத்தையும் செய்தல் வேண்டும் பிருதிவிஜலத்

தின் காரியமா இருத்தலின் ஜலஸ்சொருபமேயாம். ஜலம் தேயு வின் காரியமா இருத்தலின் தேயுவின் ஸ்சொருபமேயாம். தேயு வாயுவின் காரியமா இருத்தலின் அது வாயுவின் ஸ்சொருபமே யாம். வாயு ஆகாயத்தின் காரியமா இருத்தலின் அது ஆகாச ஸ்வரூபமேயாம் ஆகாசம் தமோகுணப்பிரதான பிரகிருதியின் காரியமா இருத்தலின் அது பிரகிருதியின் ஸ்வரூபமேயாம் மாயையின் அவஸ்தா விசேஷமே பிரகிருதியாம் ஆ த லி ன் பி ர கி ரு தி மாயா ஸ்வரூபமேயாம்.

ஒரே வ ஸ் து வி ற் கு ப் பிரகிருதி, பிரதானம், மாயை அவித்தை, அஞ்ஞானம் என்பன அதன் நாமங்களாம்.

சர்வ காரியங்களேயும் தன்னில் லயப்படுத்திப் பிரளயகாலத் தில் இருக்கிற உதாசீனஸ்வரூபம் பிரதானமாம்.

சிருஷ்டியின் உபாதான யோக்கியமான தமோகுணப் பிர தான ஸ்வரூபம் பிரகிருதியாம், எங்ஙனம் தேசகாலாதி சாமக்கிரி கள் இன்றியே இந்திர ஜாலத்தால் துர்க்கட பதார்த்தங்கள் உண்டாகுமிடத்து, இந்திர ஜாலத்தினே மாயை என்பர். அங்ங னமே அசங்க அத்விதீயப் பிரஹ்மத்தின் கண்ணே இச்சையாதி கள் துர்க்கடமாம் அவற்றைச் செய்தலின் மாயையெனப்படும். ஸ்ருபத்தை மறைத்தலின், அஞ்ஞானம் எனப்படும்.

பிரஹ்மவித்தையினுல் நாசமடைதலின் அவித்தை எனப் படும். சுவதந்திரமாய் ஒரு காலத்திலும் இருப்பது இல்லை, பின் னரோ சேதனத்தை ஆசிரயத்தே இருக்கின்றது அதனுல் சத்தி யென்றுசொல்லப்படும். இவ்விதத்தால் பிரகிருதி முதலியன பிரதானத்தின் ஸ்வரூபங்களேயாம் அந்தப்பிரதானம் பிரஹ்ம சேதனத்தின் சக்தியாம், எங்ஙனம், புருஷனிடத்துள்ள சாமர்த் திய ரூபசக்தி புருஷனனின்றும் பின்னமன்றே அங்ஙனமே சேத னத்திலுள்ள பிரதானருப சக்தி பிரஹ்ம சேதனத்தின்றும் பின்ன மன்ரும்.

இவ்வாற்ருல் பிரஹ்மத்தின் சகல அநான்ம பதார்த்தங்களின் லயசிந்தனத்தைச் செய்து, அந்த அத்வைதப் பிரஹ்மமே நான் என்று சிந்தனை செய்தல் வேண்டும்.

## தியான ஞானங்களின் பேதம்

## அஹங்கிரகத்தியானம்

எவனுக்கு மகாவாக்கிய விசாரஞ் செய்யினும் புத்தியின் மந்தத்தன்மை முதலிய பிரதிபந்தத்தால் அபரோக்ஷ ஞானம் உண்டாகின்றதில்லையோ அவனுக்கு இந்த லய சிந்தனருபத்தியானம் கூறப்பட்டது ஞானத்திற்கும், தியானத்திற்கும், இவ்வளவு பேதமுண்டு, ஞானமே பிரமாணப்பிரமேயம் என்பவற்றின் அதீனம் ஆம், விதி புருஷனுடைய இச்சை என்பவற்றின் அதீனம் அன்று தியானமோ, விதி புருஷனுடைய இச்சை விசுவாசம் ஹடம் என்பவற்றின் அதீனமா இருக்கின்றது. பிரத்தியக்ஷ ஞானத்தில் பிரமாணம். நேத்திரமும், பிரமேயம், கடாதிகளுமாம் ஆண்டு நேத்திரத்திற்கும் கடத்திற்கும் சம்பந்தம் உண்டாகப் புருஷனுடைய இச்சை இன்றியும் கடத்தின் பிரத்தியக்ஷ ஞானமுண்டாகின்றது, ஆவணி மாசம் விநாயக சதுர்த்தி அன்று சந்திரனைப்பார்த்தல் கூடாது என்னும் நிஷேதம் உண்டு விதி இல்லை. இன்றையத் தினம் எனக்குச்சந்திர தரிசனம் கூடாதெனப் புருஷனுக்கு இச்சை உண்டாலும் எவ்விதத்திலாவது நேத்திரப் பிரமாணத்திற்குப் பிரமேயமாகி சந்திரனோடு சம்பந்தமுண்டாய் விடுமாயின் சந்திரனுடைய பிரத்தியக்ஷ ஞானம் அவசியமாகவே உண்டாகும் இவ்வாற்ருல் ஞானம் பிரமாணப் பிரமேயங்களின் அதீனமா இருக்கின்றது. இச்சை விதிகளின் அதீனம் அன்று.

ஜாலிக்கிராமம் விஷ்ணு ரூபமா இருக்கின்றதென்று தியானம் செய்கின்றவனுக்கு உத்தமலோகப் பிராப்தி உண்டாகின்றது. அங்கு சாஸ்திரப் பிரமாணத்திருல் விஷ்ணுவை சதுர்ப்புஜ மூர்த்தியாகவும் சங்கு, சக்ர, கதா, பத்ம இலக்குமி சகிதமாகவும்

அறிகின்றுன் நேத்திரப் பிரமாணத்தால் சாலிக்கிராமத்தைச் சிலேயாக அறிகின்றுன். அங்ஙனமாயினும், விதி விசுவாச இச்சைகளால் சாலிக்கிராமம் விஷ்ணுவாமென்னும் தியானம் உண்டாகின்றது ஆனுல் இந்தத்தியானம் அனேக பிரகாரமாம்.

சாலிக்கிராமத்தை விஷ்ணு ரூபமாகத் தியானிப்பதுபோல அந்நிய வஸ்துவினே அந்நிய ரூபமாகத் தியானிப்பது, அது பிரதீகத்தியானமாம் வைகுண்டலோகத்தில் வசிக்கும் விஷ்ணுவைச் சங்கு, சக்கராதி சகித சதுர்ப்புஜ மூர்த்திவடிவமாகத் தியானிப்பதில் அந்நிய வஸ்துவின் அந்நிய ரூபமான தீயானமில்லே. ஆனுல் தியேய வடிவத்தின் அநுசாரமான தியானம் இதுவாம், வைகுண்டவாசி விஷ்ணுவின் சொருபம் பிரத்தியக்ஷமாகவோ இல்லே கேவலம் சாத்திரத்திஞல் அறியப்படுகிறது, சாஸ்திரத்தில் சங்கு, சக்கராதி சகிதமாகவே விஷ்ணுவின் ஸ்வருபம் சொல்லப்பட்டிருக்கின்றது. ஆகையால் தீயேய ஸ்வருபத்தின் அநுசாரமாகவே இந்த தியானமாம், விதி விசுவாச இச்சைகள் இன்றித் தியானமுண்டாகின்றதில்லே. இந்த உபாஸனேயைச் செய்க என்று புருஷனேப் பிரவிருத்திக்குமாறு செய்கின்றவசனம் விதியாம், அந்த வனசத்திலுள்ள சிரத்தையே விசுவாசமாம், அந்தக்கரணத்தின் காமனே வடிவ இரஜோகுணத்தின் விருத்தியே இச்சையாம். தியானத்திற்கு இம் மூன்றும் ஏதுவாம் ஞானத்திற்கின்றும் தியானம் ஹடத்திஞல் உண்டாகும், ஞானத்திற்கு ஹடத்தின் அபேக்ஷை இல்லே. ஏனெனின் நிரந்தரத்தியேயநுசாமான சித்தவிருத்திதியாநமாம் ஆண்டு விருத்தியில் விக்ஷேப முண்டாஞல் ஹடத்தால் விருத்தியை ஸ்திரப்படுத்துக ஞானருப அந்தக்கரண விருத்தியால் தற்கால ஆவரண பங்கம் உண்டாவதால் விருத்தியைத் ஸ்திரப்படுத்துவதன் உபயோகமில்லே. ஆதலால் ஹடத்தின் அபேக்ஷ இல்லே.

வைகுண்ட வாசியான சதுர்ப்புஜ விஷ்ணுவை தியானிப்பதுபோல் நான் பிரஹ்மம் என்னும் நியாநமும் தியேயநுசாரமா இருக்கின்றது பிரதீகமன்று ஆனுல் இது அஹங்கிரகத்தியா

நமாம். தியேய சொருபத்தைத் தன்னேடு அபேதமாகச் சிந்தித்தல் அகங்கிரகத்தியாநமாம் எவனுக்கு அபரோக்ஷ ஞானமுண்டாகின்றதில்லையோ வேதத்தின் ஆஞ்ஞாருப விதியில்விசுவாசம் வைத்து ஹடத்தால் இடைவிடாமல் நான்பிரஹ்மம் என்னும் விருத்தியின் ஸ்திதிருப அகங்கிரகத்தியானம் செய்கின்ருனே அவனுக்கும் ஞானமுண்டாகி மோக்ஷம் கிடைக்கும்.

## பிரணவ உபாஸனை

## பிரணவத்தின் அகங்கிரகத் தியானம்.

வேறுபிரகாரத்தால் அகங்கிரக உபாஸனையைக் கூறுகின்றேன் நீ சாவதானனுய்க் கேளுமின்! பிரண்வ ஸ்வருபமாகிய ஓங்கார ஸ்வருபத்தின் அகங்கிரகத்தியானம் மாண்டுக்கிய முதலிய உப நிடதங்களிற் கூறியதை அநுசரித்து சுரேசுராசாரியர் கூறிஇருக்கிருர்அதனை செவ்வையாக அநுஷ்டிக்கும் முறையைச் சொல்லுகின்றேன் அதன் சுருக்கமானகிரமம் இதுவாம் பிரணவ அட்சரம், பிரஹ்ம ஸ்வருபமேயாம் அந்தப் பிரணஸ்வருபப் பிரஹ்மம் நான் என்று ஒருக்ஷணமும் இடையின்றித் தன் புத்தி விருத்தியை நிறுத்துக, இதற்குச் சமானமான தியானம்வேறு இல்லை, இந்த தியானத்தின் விசேஷக்கிரமம் இதுவாம் சுரேசுர ஆசாரியர் பஞ்சீகரண கிரந்தத்தில் கூறப்பட்டிருக்கின்றது. இந்த உபாஸனையைச் செய்பவன் அபார சம்சாரத்தினைக் கடக்கின்ருன்,

## நிர்க்குணமும் சகுணமுமான

## பிரணவ உபாஸனையைப் பலத்தோடுகூறுதல்.

பிரணவ உபாஸனை அநேக உபநிஷத்துக்களிற் கூறப்பட்டிருப்பினும் மாண்டுக்கிய உப நிஷத்தில் விசேஷமாய்க் கூறப்பட்டிருக்கின்றது, அதன் வியாக்கியாநத்தில் பாஷியகாரரும் ஆநந்தகிரியும் அதன் கிரமத்தினை தெளிவா எழுதி இருக்கின்ருர்கள். அந்தக்கிரமமே வார்த்தியகாரர் பஞ்சீகரண கிரந்தத்தில்

எழுதப்பட்டிருக்கின்றது. ஆயினும் அந்தக் கிரந்தங்களை விசாரித்தலில் எவன் புத்தி சாமர்த்தியம் உடைய தன்றோ அவனுக்காகப் பிரணவ உபாஸனையின் கிரமத்தினையாம் எழுதுவாம்!

உப நிஷத்துக்களில் பிரணவத்தின் சிந்தனம் இருவகையாகக் கூறப்பட்டிருக்கின்றது. ஒன்று பரப்பிரஹ்ம ரூபமாகப் பிரணவத்தினைச் சிந்தித்தல், மற்றொன்று அபரப் பிரஹ்மரூபமாகச் சிந்தித்தல்.

நிர்க்குணப் பிரஹ்மத்தினையே பரப்பிரஹ்மம் என்பர். ஸகுணப் பிரஹ்மத்தினையே அபரப்பிரஹ்மம் என்பர். பரப்பிரஹ்மரூபமாகப் பிரவணத்தினைச் சிந்திக்கின்றவன் மோக்ஷத்தினை அடைகின்றான். அபரப்பிரஹ்மரூபமாகச் சிந்தனம் செய்பவனுக்கு பிரஹ்மலோகப்பிராப்தியை அடைகின்றான். இவ்வாறுல் நிர்க்குண. சகுண்பேதங்களால் பிரணவ உபாஸனை இரு விதமாம்.

## நிர்குணரூபப் பிரஹ்மத்தின் உபாசனையின் ஆரம்பம்.

அவற்றுள் நிர்க்குண உபாஸனையின் கிரமத்தினை யாம் யெழுதுகின்றோம். சகுணத்தினதன்று ஏன் எனின் பிரஹ்ம லோக இச்சை உள்ளவனுக்கு நிர்க்குண உபாஸனையினாலும் இச்சையாகிய பிரதிபந்தத்தால் ஞானவாயிலாக்த் தற்காலம் மோக்ஷம் உண்டாகின்றதில்லை, ஆனால் பிரஹ்மலோகமே அடையப்படுகிறது. ஆண்டு இரணிய கர்ப்பனுக்குச் சமானமாகப் போகங்களை அநுபவித்து ஞானம் உண்டாகும் பொழுது மோக்ஷத்தினை அடைகின்றான் பிரஹ்மலோக இச்சை இல்லாதவனுக்கு இவ்வுலகத்திலேயே ஞான முண்டாய் மோக்ஷத்தினை அடைகின்றான். இவ்விதத்தால் சகுண உபாஸனையின் பலனும் நிர்க்குண உபாஸனையில் அடங்கியிருக்கின்றது, ஆகையால் நிர்க்குண உபாஸனைக்கிரமத்தினைக் கூறுகின்றோம்.

காரண காரிய வஸ்துயாவும் ஓங்கார ஸ்வரூபமே யாதலால்

சகல ஸ்வருபங்களும் ஓங்காரமேயாம் சகல பதார்த்தங்களிலும் நாமம் ரூபம் என இரண்டு பாகங்கள் உள்ளன. அவற்றின் ரூபபாகம் தன்தன் நாமபாகத்தினும் வேறன்று பின்னேயோ, நாம ஸ்வருபமே, ரூப பாகமாம் ஏன் எனின்! பதார்த்தத்தின் ரூபத்தின் பெயரால் நிருபிக்கப்பட்டுக் கிரகிக்கப்படுகின்றது அல்லது தள்ளப்படுகின்றது. பெயர் அறியப்பட்டாலன்றி கேவலம் ஆகாரத்தால் வியவகாரம் சித்திக்கிறதில்லை, ஆதலால் பெயரே சாரமாம். ஆகார மழிந்தாலும் பெயர் எஞ்சிநிற்கின்றது, கடம் நாசமடைந்தாலும் மண் மிஞ்சுகின்றது. அங்கு கடம் மண்ணின் ஸ்வருபமேயாம். அதுபோன்று, ஆகாரம் நாசமடைய மண் போன்று மிஞ்சி நிற்கும் நாமத்தினும் ஆகாரம் வேறு அன்று நாமஸ்வருபமே ஆகாரமாம்.

அல்லது குடம் சட்டி முதலியவற்றில் மண் அநுகதமா இருந்து குடம் சட்டி முதலியன பரஸ்பரம் வியபிசாரியாம் ஆதலின் குடம், சட்டி முதலியன பெயராம் அவற்றின் அநுகதமான மண்சத்தியமாம் அது போன்று கடத்தின் ஆகாரம் அநேகமாம் அவற்றிற்கெல்லாம் "கட" என்னும் இரண்டு எழுத்துக்களுடன் கூடிய பெயர் ஒன்றும் அந்த ஆகாரங்கள் பரஸ்பரம் வியபிசாரியாம் எல்லாக்கடங்களின் ஆகாரத்திலும் பெயர் ஒன்றே அநுகதமா இருக்கின்றது ஆதலால் பொய்யான ஆகாரம் சத்தியமான பெயரினும் வேறன்றும் இவ்வாற்ருல் சகலமான பதார்த்தங்களின் ஆகாரமும் தத்தம்பெயரினும் வேறன்றும் நாம ஸ்வருபமே ஆகாரமாம் அவ்வெல்லா நாமங்களும் ஓங்காரத்தினை விடவேறன்று பின்னரோ ஓங்காரத்தின் ஸ்வருபமே நாமமாம், ஏனெனின் ! வாச்க சப்தத்தினை நாமம் என்பர் உலகத்திலும் வேதத்திலும் வழங்கும் சப்தங்கள் எல்லாம் ஓங்காரத்தினின்றும் உண்டாயின வென்பதே சுருதியின் பிரசித்தமாம் காரியம் யாவும் காரண சொருபமேயாம் ஆதலால் ஓங்காரத்தின் காரியமான வாசக சப்தஸ்வருபநாமம் ஓங்கார ஸ்வருபமேயாம் இவ்வாற்ருல் ரூப பாகமான பதார்த்தத்தின் ஆகாரம் நாமஸ்வருபமேயாம் எல்லாநாமங்களுக்கும் ஓங்கார ஸ்வருபமேயாம், ஆதலால் எல்லாச்சொருபமும் ஓங்காரமேயாம்.

## ஓங்காரப் பிரஹ்மங்களின் அபேதம்.

எங்ஙனம் எல்லாச்சொருபமும் ஓங்காரமோ அங்ஙனமே எல்லாச் சொருபமும் பிரஹ்மமேயாம் ஆதலால் ஓங்காரம் பிரஹ்மருபமேயாம் அல்லது ஓங்காரம் பிரஹ்மத்தின் வாசகமாம் பிரஹ்மம் வாச்சியமாம் வாச்சியத்திற்கும் வாசகத்திற்கும் அபேதம் உண்டாகின்றது. இதனுலும் ஓங்காரம் பிரஹ்ம ஸ்வருபமேயாம் விசார திருஷ்டியினுலோ, பிரஹ்மத்தில் எந்த அட்சரம் அத்தியஸ்தமாய் இருக்கின்றதோ அதற்குப் பிரஹ்மம் அதிஷ்டானமாய் இருக்கின்றது. அத்தியஸ்தத்தின் ஸ்வருபம் அதிஷ்டானத்தினும் வேறன்று இதனுலும் ஓங்காரம் பிரஹ்மசொருபமேயாம் ஆதலால் ஓங்காரத்தைப் பிரஹ்மஸ்வருபமாகவே சிந்தனே செய்க.

## நான்குபாதங்களேயும் சொல்லுதலோடு ஆத்மாவிற்குப் பிரஹ்மத்தோடும் விசுவனுக்கு விராட்டினேடும் அபேதமும் விராட் விசுவர்களின் ஏழு அங்கங்களும் பத்தொன்பது முகமும் கூறுதல்.

பிரஹ்மஸ்வருப ஓங்காரத்தை ஆத்மாவினும் வேறு அன்று எனச்சிந்தனே செய்க. ஏன் எனின் ஆத்மாவிற்குப் பிரஹ்மத்தோடு முக்கிய அபேதம் இருக்கின்றது.

பிரஹ்மத்திற்கு நான்கு பாதங்கள் உண்டு. அங்ஙனமே ஆத்மாவிற்கும் நான்கு பாதங்கள் உண்டு. பாதம் என்பது பாகத்திற்காம் அதனுடைய அம்சம் என்றும் கூறப்படுகின்றது. விராட். ஹிரண்ய கர்ப்பன். ஈசுரன். தற்பதலக்ஷியார்த்தமாகிய ஈசுரசாக்ஷி, ஆகிய இவை நான்கும் பிரஹ்மத்தின்பாதங்களாம். விசுவன், தைஜஸன், பிராஞ்ஞன் தும்பதலக்ஷியார்த்தமாகிய ஜீவ சாக்ஷி ஆகிய நான்கும் ஆத்மாவின் பாதங்களாம். ஜீவ சாக்ஷிக்கே, துரியம் என்றும் பெயராம் சமஷ்டி ஸ்தூலப்பிர

பஞ்ச சகித சேதனத்திற்கு விராட்டென்று பெயர் வியஸ்டி தூல அபிமானிக்கு விசுவன் என்று பெயர், விராட்டிற்கும் விசுவனுக்கும் உபாதிஸ்தூலமா இருத்தலால் விராட்டு ரூபமே விசுவன் ஆவன், விராட்டினும் அவன்வேறு அல்லன்.

## விராட்ரூப விசுவனுக்கு ஏழு அங்கங்கள் உண்டு

சுவர்க்கமே சிரசாம் சூரியன் நேத்திரமாம், வாயுவே பிராணன், ஆகாசமே மார்பு. சமுத்திராதிருப ஜலமே மூத்திரஸ்தானம். பிருதிவியே பாதமாம். ஹோமம் பண்ணப்படும் அக்கினியே முகமாம் ஆதலின் இந்த ஏழுமே விசுவனுடைய அங்கங்கள் எனக் கூறப்பட்டிருக்கின்றன. மாண்டுக்கிய உபநிடதம் சுவர்க்கம் முதலியன விசுவனுடைய அங்கமாகச் சொல்லாதிருப்பினும் அவை விராட்டினது அங்கங்களாம். அந்த விராட்டினோடு விசுவனுக்கு அபேதம் இருத்தலின் விசுவனுடைய அங்கங்களாகச் சொல்லப்படுகின்றன.

அவ்வாறே விராட்விசுவர்களுக்கு 19 முகங்கள் இருக்கின்றது. பிராணன்கள் 5. கர்மேந்திரியங்கள் 5. ஞானேந்திரியங்கள் 5. அந்தக்கரணம் 4. இந்தப் பத்தொன்பது முகங்களாலும் ஸ்தூல சப்தாதிகள் பாஹிய விருத்தியால் அநுபவிக்கப்படுகின்றன, ஆதலால் விராட்டுருப விசுவன் ஸ்தூலத்தின், போக்த்தா வென்றும் பாஹிய விருத்தி (பஹிர் பிராஞ்ஞன்) என்றும், சாக்கிரா வஸ்தையை உடையவன் என்றும் கூறப்பட்டிருக்கின்றன.

## பதினான்கு திரிபுடிகள்,

போகசாதனங்களான பிராணாதி பத்தொன்பது முகங்களில் சுரோத்திராதி பத்து இந்திரியங்களும் அந்தக்கரணம் நான்கும் ஆகிய பதிநான்கும் தத்தம் விஷயங்களின் சகாயத்தையும், தத்தம் தேவதைகளின் சகாயத்தையும் விரும்புகின்றன தேவதை விஷயம் என்பவற்றின் சகாயம் இன்றிக் கேவலம் இவற்றால்

போகம் உண்டாவதில்லை. ஆகையால் பஞ்சப்பிராணன்களும் 14 திரிபுடிகளும் விராட்ரூப விசுவனுடைய முகங்கள் எனப்படுகின்றன. முகம், தேவதை விஷயம் என்னும், மூன்றன் சமுதாயத்திற்குத் திரிபுடி என்று பெயர் ஆம்.

அத்திரிபுடி இவ்வாறு சொல்லப்படுகின்றது.

(1) சுரோத்தி ரேந்திரியம் அத்தியாத்மம்,
அதன் விஷயமாகிய சப்தம் அதிபூதம்,
திசையின் அபிமானி தேவதை அதிதைவமாம்.

இப்பிரகரணத்தில் கிரியா சத்தி உடையனவும் ஞான சக்தியுடையனவுமாகிய இந்திரியமும் அந்தக்கரணமும் அத்தியாத்மம் எனப்படும் அவற்றின் விஷயம் அதிபூதம் எனப்படும் அவற்றின் சகாயமான அதிதேவதை அதிதைவம் எனப்படும்.

(2) துவக்கிந்திரியம் அத்தியாத்மாம் அதன் விஷயமான ஸ்பரிசம் அதி பூதம், வாயுதத்துவ அபிமானி, அதி தேவதை, அதிதை வமாம்.

(3) நேத்திரேந்திரியம், அத்தியாத்மம், ரூபம் அதிபூதம், சூரியன் அதிதைவமாம்.

(4) ரஸனேந்திரியம், அத்தியாத்மம், இரசம் அதிபூதம் வருணன் அதிதைவமாம்.

(5) கிராணேந்திரியம் அத்தியாத்மம் கந்தம் அதிபூதம் அசுவினிகுமாரர் அதிதைவமாம்.

வார்த்திககாரர் ஆகிய சுரேசுர ஆச்சாரியர் பிருதிவியின் அதிதேவதை கிராணத்தின் அதிதெய்வமாகக்கூறியுள்ளார் கள், அதுவும்பொருந்தும், எதனால் எனின், பிருதிவியினின் றும் கிராணன் உற்பத்தியாகின்றது. ஆகையால் பிருதிவி

அதிதைவமாகக் கூறப்பட்டுள்ளது. அன்றியும் சூரியனுடைய குதிரையின் மூக்கினின்று அசுவினி குமாரர்களின் உற்பத்தி சொல்லப்பட்டிருக்கின்றது ஆதலால் மூக்கின் அதி தேவதை அசுவினி குமாரர் என்று சிலவிடத்துக் கூறப்பட்டிருக்கின்றது.

(6) வாக்கிந்திரியம், அத்தியாத்மம், வசனித்தல், அதிபூதம், அக்கினியே, அதிதைவமாம்,

(7) பாத இந்திரியம், அத்தியாத்மம். போதல், வருதல். அதிபூதம், விஷ்ணு அதிதைவமாம்.

(8) பாணி இந்திரியம், அத்தியாத்மம், கொடுத்தல், வாங்கல், அதிபூதம், இந்திரன் அதிதைவமாம்.

(9) குத இந்திரியம், அத்தியாத்மம் மலவிஸர்ச்சனம், அதிபூதம், யமன் அதிதைவமாம்.

(10) உபஸ்த இந்திரியம், அத்தியாத்மம், சுகத்தின் உற்பத்தி, அதிபூதம், பிரஜாபதி அதிதைவமாம்.

(11) மனம், அத்தியாத்மம், மனனித்தல், அதிபூதம், சந்திரன், அதிதைவமாம்.

(12) புத்தி, அத்தியாத்மம், நிச்சயம் பண்ணுதல் அதிபூதம் பிரகஸ்பதி, அதிதைவமாம்,

(13) சித்தம், அத்தியாத்மம், சிந்தித்தல், அதிபூதம், க்ஷேத்திரக்ஞனுகிய சாக்ஷியே அதிதைவமாம்.

(14) அகங்காரம், அத்தியாத்மம், யான் என்னும் அபிமானம்—அதிபூதம், உருத்திரனே அதிதைவமாம்,

இப்பதினுன்கு திரிபுடிகளும், ஐந்துபிராணன்களும் சேர்ந்து பத்தொன்பதும் விராட்ருப விசுவனுடைய முகங்களாம்.

## விசுவன் விராட்டு அகாரம் என்பவற்றின் அபேத சிந்தனை.

எங்ஙனம் விராட்டுடன் விசுவனுக்கு அபேதம் இருக்கின்றதோ அங்ஙனமே ஓங்காரத்தின் முதன் மாத்திரையாகிய அகாரத்திற்கு விராட்ரூப, விசுவனோடு அபேதம் இருக்கின்றது.

பிரஹ்மத்தின் நான்கு பாதங்களில் முதற்பாதம் விராட்டாம், ஆத்மாவின் நான்கு பாதங்களில் முதற்பாதம் விசுவனும். அங்ஙனமே ஓங்காரத்தின் நான்கு மாத்திரைகளின் ரூப பாதங்களின் முதற்பாதம் அகாரமாம். ஆதலால் பிரதமத்தன்மை மூன்றினும், சமானத்தன்மை இருத்தலால், விசுவன் விராட்டு அகாரங்களின் அபேத சிந்தனையே செய்க.

## விசுவ தைஜசர்களின் விலக்ஷணத் தன்மை.

விசுவனுக்கு கூறப்பட்ட ஏழு அங்கங்களும், பத்தொன்பது முகங்களும் தைஜசனுக்கும் இருக்கத்தக்கனவாம். என்று அறிக ஆனால் இவ்வளவு பேதம் உண்டு. விசுவனது அங்கங்களும் முகங்களும் ஈசுரனால் செய்யப்பட்டன.

தைஜஸனது இந்திரிய தேவதாரூப விஷயரூப திரிபுடிகளும் சிரசு முதலிய அங்கங்களும் மனோமயமாஇருக்கின்றன தைஜஸனது போகம், சூட்சுமமாம் போகமென்பது சுகதுக்கங்களின் ஞானமாம் அதன்கண் தூல சூட்சுமத் தன்மைகள் சொல்லுதல் பொருந்தா வாயினும், பாஹிய சப்தாதி விஷயங்களின் சம்பந்தத்தால் உண்டாகின்ற சுகதுக்கங்களின் சாக்ஷாத்காரம் தூலம் எனப்படும் மானஸமான சப்தாதிகளின் சம்பந்தத்தால் உண்டாகும் போகம் சூட்சுமம் எனப்படும்.

இக்காரணத்தால் விசுவன் ஸ்தூலத்தின் போக்தா வென்று சுருதிகளிற் கூறப்பட்டிருக்கின்றது. தைஜஸன் சூட்சுமத்தின் போக்தாவென்று கூறப்பட்டிருக்கின்றது எதனால் எனின் தைஜஸனது போக யோக்கியமான சப்தாதிகள் மானஸமா இருத்தலால் சூட்சும்மாம் அவற்றை அபேட்சித்து விசுவனது போக்கியம் பாகிய சப்தாதிகளாம் அவை தூலமாம்.

விசுவன் பஹிர்ப் பிரஞ்ஞுவன் தைஜஸன் அந்தர்ப் பிரஞ்ஞுவன் ஏன் எனின் அந்தக்கரணத்தின் விருத்திருப்பிரஞ்ஞை வெளியேபோகா நின்றது தைஜஸனது பிரக்ஞைபோகின்றதில்லை

## தைஜஸ இரண்ய கர்ப்ப உகாரங்களின் அபேத சிந்தனை.

எங்ஙனம் விசுவனுக்கும் விராட்டிற்கும் அபேதமிருக்கின்றதோ அங்ஙனமே தைஜசனையும் ஹிரண்ய கர்ப்பரூபமாயறிதல் வேண்டும் ஏனெனின்! தைஜஸனது உபாதி சூட்சுமமாம். ஹிரண்ய கர்ப்பனது உபாதியும் சூட்சுமமேயாம் ஆதலால் இவ்விரண்டையும் ஒன்றெனவே அறியவும்.

தைஜஸ இரண்ய கர்ப்பர்களின் ஏகத்துவத்தை அறிந்து ஓங்காரத்தின் இரண்டாவது மாத்திரையான உகாரத்தோடு அவற்றின் அபேதத்தைச் சிந்தனை செய்க ஏன் எனின் ஆத்மாவின் நான்கு பாகங்களில் இரண்டாவது பாதம் தைஜஸனுவன் பிரஹமத்தின் இரண்டாவது பாதம் ஹிரண்ய கர்ப்பனுவன் ஓங்காரததின் மாத்திரைகளின் இரண்டாவது மாத்திரை உகாரமாம்.

இரண்டாவதாம் தன்மை, மூன்றினும் சமானதர்ம்மாய் உள்ளன ஆகையால் மூன்றன் ஒன்றும் தன்மையினைச் சிந்தனை செய்க,

## பிராஞ்ஞன் ஈசுரன் மகாரம் என்பவற்றின் அபேதமும் பிராஞ்ஞனது விசேடமும்

பிராஞ்ஞனை ஈசுர சொரூபமாக அறிக. ஏன் எனின்! சாக்கிர சொப்பனங்களின் எல்லா ஞானங்களும் சுழுத்தியில் கனம் எனப்படும் ஒரே அவித்தியா ரூபமாய் விடுகின்றது. ஆதலால் பிரஞ்ஞான கனம் எனப்படுகின்றது இந்தப் பிராஞ்ஞன் ஆநந்த புக் என்றும் சுருதியாற் கூறப்பட்டிருக்கின்றுன். ஏன் எனின் அவித்தையினுல் மறைபட்ட ஆனந்தத்தினை இந்தப்பிராஞ்ஞன் புசிக்கின்றுன். ஆகையால் ஆநந்த புக் என்று கூறப்பட்டிருக்கின்றுன்.

எங்ஙனம் தைஜஸ விசுவர்களின் போகம் திரிபுடியாலுண்டாகின்றதோ அங்ஙனமே பிராஞ்ஞனது போகத்திற்கும், திரிபுடி கூறப்பட்டிருக்கின்றது. சேதனத்தின் பிரதிபிம்ப சகிதமான அவித்தையின் விருத்தி அத்தியாத்மம் ஆம். அஞ்ஞானத்தினுல் மறைக்கப்பட்ட ஆநந்தமே அதிபூதம், ஈசுரன் அதிதைவமாவன்.

இவ்வாற்ருல் விசுவன் பகிர்ப்பிராஞ்ஞு இருக்கின்ருன். தைஜஸன் அந்தர்ப் பிராஞ்ஞு இருக்கின்ருன். பிராஞ்ஞன் பிரக்ஞான கனனு இருக்கின்ருன்.

## வாஸ்தவ விசுவன் முதலிய மூன்றன் ஏகத்துவம் துரியத்திற்கு ஈசுவர சாக்ஷியோடு அபேதம்

இவ்வாறு விசுவாதி மூன்றற்கும் உள்ள பேதம் உபாதியினுல் இருக்கின்றது. விசுவனுக்குத்தூலம் சூட்சுமம், அஞ்ஞானம் என்னும் மூன்றும் உபாதிகளாம் தைஜஸனுக்கு சூட்சுமம் அஞ்ஞானம் என்னும் இரண்டும் உபாதிகளாம் பிராஞ்ஞனுக்கு அஞ்ஞானம் ஒன்றே உபாதியாம்.

இவ்வாறு உபாதிகளின் ஏற்றத் தாழ்வால் மூன்றற்கும் பேதமுண்டு உணமையில் ஸ்வருபமாகப் பேதமில்லை.

விசுவன் தைஜஸன் பிராஞ்ஞன் என்னும் மூன்றினும் அனுகதமான சேதனம் பரமார்த்தமாக மூன்று உபாதிகளின் சம்பந்தம் இல்லாமல் இருக்கின்றது. மூன்று உபாதிகளின் அதிஷ்டானம் துரிய வடிவ ஆன்மாவேயாம். அது பஹிர்ப் பிராஞ்ஞன் அன்று அந்தர்ப் பிரஞ்ஞனும் அன்று பிரஞ்ஞான கனனும் அன்று ஞானேந்திரிய கர்மேந்திரியங்களுக்கும் விஷயமன்று. புத்திக்கும் விஷயமன்று எந்தச்சப்தத்திற்கும் விஷயமன்று இத்தன்மையான துரியத்தை பரமாத்மாவின் நான்காவது பாதமான ஈசுர சாக்ஷியாகிய சுத்தப்பிரஹ்மம் என்று அறிக.



# இரண்டு சொரூபமுடைய ஓங்கார ஆத்மாக்களின் அபேதத்தினை மாத்திராரூபமாகவும் பாதரூபமாகவும் சிந்தித்தல்.

இவ்வாற்ருல் ஆத்மாவுக்கு இரண்டுவித ஸ்வரூபங்கள் கூறப்பட்டன ஒன்று பரமார்த்த ஸ்வரூபம் மற்ருென்று அபர மார்த்தஸ்வரூபம் மூன்று பாதங்களோ அபரமார்த்த ஸ்வரூபம் ஒருபாதமாகிய துரிய வடிவ ஆன்மாவே பரமார்த்த ஸ்வரூபமாம்.

ஆத்மாவிற்கு இரண்டு பாதங்கள் இருப்பதுபோல், ஓங்கா ரத்திற்கும் இரண்டு வித ஸ்வரூபங்கள் உண்டு அகார உகார மகாரங்கள் ஆகியமூன்று மாத்திராரூப அக்ஷரங்கள் அபரமார்த்த ஸ்வரூபமாம். அம் மூன்று மாத்திரைகளினும் அனு சூதமாய் வியாபித்திருக்கின்ற அஸ்திபாதிப் பிரிய அதிஷ்டான சேதனம் பரமார்த்த ரூபமாம், ஓங்காரத்தினது பரமார்த்த ஸ்வரூபம் சுருதி யில் அமாத்திரை எனச்சொல்லப்பட்டிருக்கின்றது, ஏன் எனின்! அந்தப் பரமார்த்த ஸ்வரூபத்தின் கண் மாத்திரைகளின் விபாக மில்லை, ஆதலால் அமாத்திரை எனக் கூறப்பட்டுளது. இவ் விதத்தில் இரண்டு ஸ்வரூபங்களுடன் கூடிய ஓங்காரத்திற்கு இரண்டு ஸ்வரூபங்களுடன் கூடிய ஆத்மாவோடு அபேதத்தை அறிந்து கொள்ளவும்,

வியஷ்டி சமஷ்டி ஸ்தூலப் பிரபஞ்சத்துடன் கூடிய விசுவ விராட்டாதிகளுக்கும் அகாரத்தோடு அபேதத்தினை அறிக. ஆத்மாவின் பாதங்களில் விசுவன் முதலாவதாவன்.

ஓங்காரத்தின் மாத்திரைகளில் அகாரம் முதலாவதாம் ஆத லால் இரண்டையும் ஒன்ருக அறிந்து கொள்ளவும்.

சூட்சுமப்பிரபஞ்ச சகிதமான ஹிரண்ய கர்ப்பரூப தைஜஸனை உகாரரூபமாக அறிக.

தைஜஸனும் ஆத்மாவின் பாதங்களில் இரண்டாவதான ஓங் காராதிகளின் மாத்திரைகளில் உகாரமும் இரண்டாவதாம் ஆத லால் இரண்டையும் ஒன்றென்று அறிக.

காரண உபாதியோடு கூடியஈசுரரூப பிராஞ்ஞனை மகாரரூப மாகவே அறியவும்,

எங்ஙனம் ஈசுரரூபப் பிராஞ்ஞன் மூன்ருவது ஆவன், அங்ஙனமே மகாரமும் மூன்ருவதாம் ஆதலால் ஈசுரரூபப் பிராஞ்ஞனையும் மகாரத்தினையும் ஒன்ருக அறிக.

மூன்றிலும் அநுகதமான பரமார்த்த வடிவ துரியத்தினை ஓங்கார அக்ஷரத்தின் மூன்று மாத்திரைகளிலும் அநுகதமான ஓங்காரத்தின் பரமார்த்த ரூபமான அமாத்திரையோடு அபேதமென்று அறியவும்,

எங்ஙனம் விசுவாதிகளில் துரியம் அநுகதமா இருக்கின்றது, அங்ஙனமே அகாராதி மூன்று மாத்திரைகளிலும் அமாத்திரை அநுகதமா இருக்கின்றது ஆதலால் ஓங்காரத்தின் அமாத்திரை ரூபத்தினையும் துரியத்தினையும் ஒன்றென்றே உணரவும் இவ்வாற்ருல் ஆத்மாவின் பாதத்தினையும் ஓங்காரத்தின் மாத்திரையினையும் ஒன்றென்றே உணர்ந்து லயசிந்தனை செய்யவும்.

### லய சிந்தனத்தின் அநுவாதம்
### ஒவ்வொரு மாத்திரை வடிவ விசுவன் முதலியன அந்நியமாத்திரை வடிவமாதல், அந்த லய சிந்தனத்தைக் கூறுவாம்.

விசுவரூப அகாரம், தைஜஸரூப உகாரத்திற்கு வேருகாமல் உகாரரூபமாகவே இருக்கின்றது, இவ்வாறு சிந்தனை செய்தலே இங்குலயம் எனப்படுகின்றது இவ்வாறே ஏனைய மாத்திரைகளிலும் அறிந்துகொள்க,

எந்த உகாரத்தில் அகாரம் லயமாகின்றதோ அந்தத்தைஜஸரூப உகாரத்தினை பிராக்ஞரூப மகாரத்தில் லயம் செய்க.

பிராஞ்ஞரூப மகாரத்தினைத் துரியரூபமான ஓங்காரத்தின் பரமார்த்த ரூபமாகிய அமாத்திரையில் லயஞ்செய்யவும் ஏன்

எனின் ஸ்தூலத்தின் உற்பத்தியும் லயமும் சூட்சுமத்தில் உண்டாகின்றன.

ஆதலால், விசுவரூப அகாரத்திற்கு தைஜஸரூப உகாரத்தில் லயமாதல் பொருந்தும்.

சூட்சுமத்தின் உற்பத்தியும் லயமும் காரணத்தில் உண்டாகின்றன. ஆதலால் தைஜஸரூப உகாரத்திற்கு அதின் காரணமாகின்ற பிராஞ்ஞரூப மகாரத்தில் லயமாதல் பொருந்தும்.

இந்த இடத்தில் விசுவாதிகளைக் கொள்வதினால் சமஷ்டி விராட்டாதிகளும் தத்தம் திரிபுடிகளும் ஆகியஎல்லாவற்றையுமே கொள்ள வேண்டும் என்பதனை அறிக, எந்தப் பிராஞ்ஞ ரூபமகாராத்திக்கண் உகாரம் லயம் செய்யப்பட்டதோ அந்த மகாரத்திற்குத் துரிய வடிவ ஓங்காரத்தின் பரமார்த்தரூப, அமாத்திரையில் லயம் செய்க. ஏன் எனில் ஓங்காரத்தின் பரமார்த்த ரூபத்திற்குத் துரியத்தோடு அபேதமிருக்கின்றது. அந்தந் துரியம் பிரஹ்மஸ்வரூபமேயாம் சுத்தப்பிரஹ்மத்தில் ஈசுரன் பிராஞ்ஞன் என்னும் இருவரும் கற்பிக்கப்பட்டிருக்கின்றார்கள் எது எதண் கண் கற்பிக்கப்படிகின்றதோ அது அதன் ஸ்வரூபமாகின்றது ஆதலால் ஈசுரரூபப் பிராஞ்ஞரூப மகாரத்திற்கு லயமாதலால் பொருந்துகின்றது,

இவ்விதத்தால் எந்த ஓங்காரத்தின் பரமார்த்த ஸ்வரூபமாகின்ற அமாத்திரையில் எல்லாம் லயம் செய்யப்படுகின்றனவோ, அது நான் என்று ஏகாக்கிரசித்தத்துடன் சிந்தனை செய்யவும்.

ஸ்தாவர கங்கம ரூபமாயும் அசங்கமாயும் உள்ளது அத்வைதமாயும் அசம்சாரியாயும் நித்தியமுக்தமாயும் நிர்ப்பயமாயும் இருக்கின்ற பிரஹ்ம ஸ்வரூப ஓங்காரத்தின் பரமார்த்த ஸ்வரூபத்தினை அது நான் என்று சிந்தனை செய்வதனால் ஞானமுண்டாகின்றது. ஆதலால் ஞானவாயிலாக முத்திரூப பலத்தினைக் கொடுப்பதேயாம். இந்த ஓங்காரத்தின் நிற்குண உபாஸனையின் வரும்பயன் இதுவேயாகலின் இதுவே உத்தமமாம்.

## ஓங்கார சிந்தனத்தில் பரமஹம்ஸனுக்கே அதிகாரம் உளதெனல்.

முன் சொன்ன பிரகாரம் ஓங்காரஸ்வருபத்தை அறிகின்றவன் முனியாவன். அறியாதவன் முனியாகான் ஏன் எனின் முனி என்னும் பெயர். மனனம் செய்பவனுக்காம் இந்த ஓங்காரத்தின் சிந்தனம் மனனருபமாம் எவனுக்கு ஓங்காரத்தின் சிந்தனை வடிவ மனனம் இல்லையோ அவன் முனியல்லன். ஈண்டு மாண்டுகிய உப நிடதத்தின் ரீதியாய் ஓங்காரத்தின் சிந்தனருபம் சுருக்கமாகச் சொல்லப்பட்டது. வேறு சில சுருதிகளிலும் இவ்வாறேதான் கூறியுள்ளது. இந்த ஓங்கார சிந்தனம் பரமஹம்ஸர்களின் கோப்பியமாம் அதாவது இரகஸ்யமாம்.

அத்தியந்தம் அந்தர்முகனுக்கே அதிகாரம் இருக்கின்றது பஹிர்முகபுருஷனுக்கு அதிகாரமில்லையாம். கிருஹஸ்தனுக்கோ இதில் அதிகாரமில்லை. தனம் புத்திரன் ஸ்திரிசங்கமுடையோனும் அல்லாத பரமஅம்சனே அதிகாரியாவன்.

## ஓங்காரத் தியானமுடையவர்களுக்குப் பலம்.

முன்புகன்ற பிரகாரமாக ஓங்காரத்தினைப் பிரஹ்ம ருபமாக தியானம் செய்வதனுல் ஞானவாயிலாக மோக்ஷமுண்டாகின்றது.

ஆனுல் எவனுக்கு இந்தலோகபோகத்திலாவது, பிரஹ்மலோக போகத்திலாவது இச்சை இருக்கின்றதோ எவன் தீவிர வைராக்கியம் இல்லாமல் ஹடத்திளுல் இச்சையைத் தகைந்து தனபுத்திராதிகளைக் தியாகம் செய்து பரமஹம்ஸ குருவின் உபதேசத்தால் ஓங்காரருப பிரஹமத்தினை தியானஞ்செய்கிருனே அவனுக்கு போக இச்சை ஞானத்திற் பிரதி பந்தகமாயிருக்கின்றது அதனுல் (அவனுக்கு) ஞாநமுண்டாகின்றதில்லை. பின்னரோ தியாநஞ்செய்து கொண்டே (இந்தச்) சரீரம் விட்டபின் வேறு சரீரம் அடையப்படுகின்றது.

இந்தலோகபோகங்களின் இச்சையைத் தகைந்து தியானத்தில் (மனதினை) செலுத்தினுல் இந்த லோகத்தில் வெகு செல்வமுடைய பரிசுத்தமான சற்சங்க குலத்திற் ஜன்மமுண்டாகின்றது ஆண்டுமுன் (ஜன்மத்தின்) இச்சைக்கு விஷயமான எல்லாப் போகங்களும் பிராப்தமாகின்றது. முன் ஜன்மத்தின் தியாக சமஸ்காரத்தினுல் மீண்டும் விசாரத்திலாவது தியானத்திலாவது பிரவிருத்தியுண்டாகின்றது. அதனுல் ஞானமுண்டாய் மோக்ஷம் உண்டாகின்றது.

பிரஹ்ம லோகத்தின் போகங்களின் இச்சையைத் தகைந்து ஓங்கார ரூபப்பிரஹ்மத்தின் தியாநத்தில் பிரவிருத்திக்கின்றவன் சரீரத்தை விட்டு பிரஹ்ம லோகத்திற்குச் செல்லுகின்ருன். அவ்விடத்தில் மனிதர்களுக்கும், பிதிர்களுக்கும், தேவைதைகளுக்கும் துர்லபமான சுதந்திரத் தன்மையின் ஆனந்தத்தையநுபவிக்கின்ருன் ஹிரண்ய கர்ப்பனுடைய சத்திய சங்கற்பாதி சகல ஐசுவரியங்களும் இவனுக்குக் கிடைக்கின்றன.

## சாயுஜ்ய மோக்ஷத்தின் வர்ணநம்

முற்கூறியபடி ஓங்கார உபாசனை சுத்தப்பிரஹ்ம ரூபமாகக் கூறப்பட்டிருக்கின்றது. சுத்தப்பிரஹ்மத்தின் உபாசகனுக்குச் சுத்தப் பிரஹ்மத்தின் பிராப்தி வேண்டுமாயினும் சுத்தப்பிரஹ்மத்தின் பிராப்திஞாநத்தினுலேயே யுண்டாகின்றது. இச்சொருபப் பிரதிபந்தத்தினுல் எவனுக்கு ஞானமுண்டாகவில்லையோ அவனுக்கு காரியப்பிரஹ்மத்தின் பிராப்தீயாகிய சாயுஜ்ய ரூப மோக்ஷமுண்டாகின்றது.

பிரஹ்மலோகத்தையடைந்த உபாஸகனுக்கு ஹிரண்ய கர்ப்பனுக்கு சமாநமான விபூதி கிடைக்கின்றது. அவன் சத்திய சங்கபனுகின்ருன் இச்சித்தபடி அவனுக்குச் சரீரம் உண்டாகின்றது. இச்சிக்கும் போகங்களெல்லாம் அவனுக்குச் சங்கற்பத்தினுலேயே கிடைக்கின்றன ஒரு சமயத்தில் ஆயிரம் சரீரங்களால் அவ்வவற்றின் போகங்களைத் தனித்தனியே புசிக்க

வேண்டுமென்று இச்சையுண்டாயின் அதே சமயம் ஆயிரம் சரீரங்களும் அவற்றை அநுபவித்தற்கு வெவ்வேறு சாமக்கிரிகளுமுண்டாகின்றன.

அதிகமாய் சொல்வதென்னே! எதனைச் சங்கற்பிக்கின்றாரோ அதுவே சித்திக்கின்றது. ஆனால் ஜகத்தின் சிருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களை விட்டு மற்றெல்லா விபூதிகளும் ஈசுவரனுக்குச் சமானமாகவுண்டாகின்றன இதனையே சாயுஜ்ய மோக்ஷமென்பர் இவ்வாறு ஹிரண்ய கர்ப்பனுக்குச் சமானமாய் வெகுகாலம் சங்கற்பத்தாற் சிந்தித்த திவ்விய பதார்த்தங்களைப் புசித்து பிரளய காலத்தில் ஹிரண்யகர்ப்ப லோகத்திற்கு நாசம் வரும் போது ஞானமுண்டாக உபாசகனானவன் விதேக மோக்ஷத்தை அடைகின்றான்.

## நிதித்யாசன பஞ்சகம்.

மந்திரயோகம், ஸ்பரிசயோகம், பாவயோகம், அபாவ யோகம், மகாயோகம் என ஐந்து யோகம் ஆம் அவற்றுள்.

(1) பிரணவ முதலிய மந்திரஉச்சாரணத்தோடு பரமாத்மாவினிடத்தில் மனோலயம் ஆவதே மந்திரயோகம் என்பர்.

(2) அந்த மந்திரத்தோடு மனதும் வாயுவும் ஒன்றாய் மூலதாரத்தினின்றும் சுழுமுனை நாடி மார்க்கத்தில் ஏறி சிரசின் நடுவிலுள்ள பரமாத்மாவின் கண் உள்ள ஒளியில் மனோலயமாவதே பரிசயோகமென்பர்.

(3) சுவர்க்கமேசிரமும் திக்குகளே சுரோத்திரமும் சந்திர சூரியரே இரு கண்களும் அக்கினியே முகமும் ஆகாசமே நாபியும் பூமியேபாதமும் ஆன ஈசுரனுடைய விராட் புருஷ வடிவத்தை அல்லது அபயாஸ்த ஆபரணாதி சகிதமான ஈசுரனுடைய திவ்விய மங்கல சொருபத்தையேனும் தியானம் செய்து பின் அந்த அவயவங்களை ஒவ்வொன்றாய் விட்டு எஞ்சி நிற்கும் அவயவி மாத்திரமான சுத்தப்பிரஹ்மத்தில் மனோலயமாவதே பாவயோகம் என்பர்.

(4) வாக்கு மன முதலிய கரணங்களுக்கும் பிரமாணங்களுக்கும் அப்பாற்பட்டதான நிருபாதிகப் பிரஹ்மத்தில் மனோலயமாவதே அபாவயோகமென்பர்.

(5) உற்பத்தி லயங்களிலும், அறிவேன் அறியேன் என்பதிலும் தனக்கொரு ஆனியுமில்லாமல் என்றும் ஒரு தன்மையாய் இருக்கும் பிரத்யக்க பின்ன பரமான்மாவின்கண் மனோலயமாவதே மகாயோகமென்பர்.

## அஹச்சமாதி 3 புறச்சமாதி 3 அவற்றின் பெயர்கள்.

உபரதிக்கனுசாரிகளான 1, திருசியாநுவித்தம், 2. சத்தாநுவித்தம், 3. நிருவிகர்ப்பம் என அகச்சமாதி. 3. புறச்சமாதியில் 3 என்று ஆறுவிதசமாதிகள் உண்டு. அவ்வியல்பு

(1) கடாதிவிஷய சமுகத்துள் ஒன்றினைக்குறித்து அதன் நாமரூபமான மாயாம்சங்கள் இரண்டினையும் நீக்கி அதிலுள்ள இருப்பு விளக்கம் பிரியமென்னும் சச்சிதாநந்தத் திரயங்களை ஆன்ம வடிவமாகத் தியானம் செய்தலையே பாகியதிருசியாநு வித்த சவிகர்ப்ப சமாதி என்பர்.

(2) அகண்ட சச்சிதாநந்த அத்விதீய பிரஹ்மம் என்று தியானிப்பதே பாகிய சத்தாநுவித்த சவிகர்ப்ப சமாதி என்பர்.

(3) இவ்விருவித சமாதி அப்பியாசத்தால் பிரமாநந்த அநுபவத்தில் மக்கினமாய் அலையின்றிய சமுத்திரம்போல நிச்சலவடிவமா இருத்தலே, பாகிய நிருவிகர்ப்ப சமாதி என்பர்.

(4) மனத்தின்கண் உள்ள காமாதி சங்கர்ப்பாதிகளே திருசியானுவித்தம் இத்திருசியத்திற்கு நான் சாக்ஷி என்றும்

அநுசந்தானமே ஆந்தர திருசியாநுவித்த சவிகர்ப்ப சமாதி என்பர்.

(5) அசங்கசச்சிதானந்த ஸ்வயம் பிரகாச அத்வைத பிரஹ்ம சொருபமே நான் என்று சிந்தனை செய்வதே ஆந்தர சப்தாநுவித்த சவிகர்ப்ப சமாதி என்பர்.

அசங்க வடிவமான ஸ்வருபத்தில் அவ்வநுபூதியின் சுக ஆவேசத்தால் திருசியம் சத்தம் என்னும் இரண்டையும் விட்டு நிவாததீபம்போல் நிர்ச்சிந்தையாய் இருத்தலே ஆந்தர நிருவிகர்ப்ப சமாதியாம் என்பர்.

இந்த ஆறுவித. சமாதிகளினின்றும் பழகிய யோகீஸ்வரன் மனமானது எங்கெங்கே சஞ்சரிப்பினும் அங்கங்கெல்லாம் சமாதியேயாம் என்பர்.

## எப்பொழுதினும் தான் அநுசந்தானம் செய்யும் கிரமம் நான்காவது அத்தியாயம் 15 சுலோகம் ஸ்ரீ பகவானது அமுத மொழிகள் ஸ்ரீ பகவான்கூறி அருளுகின்றார்.

ஹே அர்ச்சுன ? இங்ஙனம் மற்றையரும் அகர்த்தா அபோக்தாவாய்எம்மைத்தமதுஆன்மவடிவமாய்அறியின் அவரும் எம்மைப்போலவே அக்கருமத்திற்கட்டுப்படார் அதாவது ஆன்மா அகர்த்தா என்னும் ஞானத்தால் அவரும் அக் கருமத்தினின்றும் விடுதலை அடைவார்.

ஹே அருச்சுன ! ஓடத்துள்ள ஓர் புருஷனுக்குத் தீரத்தில் இருக்கும் போதல் வருதல்இன்றிய விருக்ஷத்தின் கண் போதலாகிய தன்மையை மயக்கத்தால் காண்கின்றான். போதலாகிய செயலையுடையவனிடம் தூரத்தால் போதலாகிய செயலின்மையை காண்கின்றான். ஆகையால் உண்மையாய், அக்கருமம் என்னவஸ்து அகருமம் என்னவஸ்துஎன்னும் பொருளின் கண்

மதிமான்களும் மோகத்தை அடைகின்றனர். அவற்றின் வடிவ நிர்ணயத்தே சமர்த்தரே யாவர். ஒருரையின்கண் இப்பொருள் கூறியுள்ளது அதாவது சுருதிஸ்மிருதி ரூப சாஸ்திரத்தால் விதித்த அருத்தம் கருமமாம். விதியாதது அகர்மமாம். என இவ்வாறு சில பண்டிதர் அவற்றின் வடிவத்தைக் கூறுகின்றனர் சில பண்டிதரோ, விதித்ததைக் கருமம் எனவும் விடுத்ததை அகருமம் எனவும் கூறுவர், சில அறிஞரோ் போதல் வருவதலாகிய செயல் கருமம் எனவும் தூஷ்ணீம்ஸ்திதி (பாவத்தையே) அகர்மம் எனவும் அன்றயா நிர்ப்பர் இவ்வாறு அக்கரும, அகர்ம, சொருபத்தே அநேகம் வகையாய் விவாதம்காண வருகின்றதாதலின் கருமசப்தார்த்த வாச்சியார்த்தம் யாது. அகரும சப்த வாச்சியார்த்தம் யாது என்னும் பொருளின் கண்ணே நூலுணர்ந்தோரும் மோகத்தை அடைகின்றனர் அதாவது அவற்றின் வாஸ்தவ வடிவ நிர்ணயத்தின் கண்ணே அசமர்த்தராயினர் அதனுல் யாம் நினக்கு அவற்றின் சொருபத்தைச் சம்சய நிவிருத்திபூர்வகமாய்க் கூறினேம்.

ஹே பகவன் அவற்றினை அறிதலால் எப்பலம் பிராப்தியுண்டாம்,

## அதன் பலத்தை ஸ்ரீ பகவான் அருளுகின்றார்

ஹே அருச்சுன ! அவற்றின் உண்மையாய வடிவத்தை உணர்தியேல் இச் சம்சாரம் அற்றவனுவாய் அதாவது இச்சமுசாரமுத்தியே அவற்றின் ஞானபலமாம். என்னும் வசனத்தே கேவலம் கருமபதமே உளதாயினும் என்னும் இப்பதத்தின் முன் அகாரத்தை கிளப்பி அகர்மத்தின் வளர்ச்சியுமாதல் கூடும்.

ஹே அர்ச்சுன ! சுருதி ஸ்மிருதிகளில் விதித்த அருத்தம் கருமமாம். அதன் உண்மை வடிவமும் உன்னுல் அறியத்தக்கதாம் அதை அறியாமல் அதன் அநுஷ்டானமும் உண்டாக மாட்டாது. அதை விளக்கிய அருத்தம் விகர்மமாம், அதன் உண்மை வடிவமும் உன்னுல் அவசியம் அறியத் தகுதியதேயாம். அதை

அறியாமல் அதனினின்றும் நீக்கமுண்டாகாதாம். சர்வ வியாபார மும் அற்றுச் சும்மா இருத்தல் அகருமமாம். அதன் உண்மை வடிவமும் உன்னுல் அறியத் தக்கதேயாம். எதனுல் கருமம் விகருமம், அகருமம் மூன்றின் உண்மை வடிவம் அத்தியந்தம், துர்விஞ்ஞேயமோ அதனைக் கூறுவாம்.

ஹே அர்ச்சுன! யாவன் கருமத்தின் கண்ணே அகருமத்தை காண்பனே யாவன் அகருமத்தின் கண்ணே கருமத்தை காண் பனே அவனே எல்லா மனிதருள்ளும் மதிமானுவன், அவனே யோகத்தோடு கூடினவனுவான், சர்வ கருமங்களையும் செய் பவன் ஆவன்.

ஹே அர்ச்சுன! சுருதி ஸ்மிருதி விகித நிஷித்த தேக இந்திரியபுத்தி முதலியவற்றின் வியாபாரம் கருமமாம். அஃதுண் மையாயோ தேகேந்திரியாதிகளினிடத்தே இருக்கும். அசங்க மாகிய ஆத்மாவின்கண் அக்கருமம் இராதாயினும் யான் செய் கின்றேன் என்னும் தரும அத்தியாச ரூபப்பிரதீதியின் பலத்தால் ஆன்மாவின் கண்ணே ஆரோபிதம் செய்யப்படும். நதிக்கரையில் இருக்கும் விருக்ஷத்தின் கண் உண்மையாக போதலாகிய கிரியை இல்லாதிருக்கினும் ஓடத்திருப்பவன் ஓடம் ஓடலால் விருக்ஷத்தின் கண் போதலை யாரோபித்தல் போல சாஸ்திரத் தின் விசாரம் அற்ற மூடன் அக்கிரிய ஆன்மாவின் கண்ணே ஆரோபிப்பன். ஆன்மாவின் கண் ஆரோபித்த கருமத்தே யாவன் ஆன்மாவின் அகர்த்தா வடிவத்தை விசாரித்து உண்மையாய்க் கர்ம அபாவத்தைக் காண்பனே கருத்து இதுவாம். ஓடத்திருப் பவன் கரையினிடத்திருக்கும் விருக்ஷத்தில் போதலாகிய கிரியையை ஆரோபிக்கினும் உண்மையாய் அதன் கண்ணே போதலாகிய கிரியை இல்லாததேபோல மூடன் அக்கிரிய ஆன் மாவில் கருமத்தை ஆரோபிக்கினும் அதன் கண் உண்மையாய்க் கருமத்தின் அபாவமே உள்ளது. இவ்வாறு யாவன் கருமத்தின் கண்ணே அகர்மத்தை காண்பனே என்பதாம் முக்குண ஆன்மக மான மாயா பரிணுமம் ஆதலின் எக்காலத்தும் கருமத்தையுடைய

தேகேந்திரியாதிகளிடத்தே உண்மையாய் கரும அபாவ மிரா தாம். மற்ருே அவற்றின்பால் அதன் அபாவ ஆரோபணமாம். சக்ஷு சம்பந்தமுற்ற தூர தேசத்திலிருக்கும் கமனமுடையவனிடத்தே உண்மையாய்க் கமன அபாவமின்றேனும் தூர தோச வயத்தால் அவன் பால் அதன் ஆரோபணமாம். ககனத்துள்ள மதியுடுக் கணத்தே உண்மையாய்க் கமன அபாவ மின்ரும் மற்ருே எப்போதும் கமனமேயுளது எனினும் தூரதோஷ வயத்தால் அவன் பால் அதன் ஆரோபணமாம் ககனத்துள்ள மதியுடுக் கணத்தே உண்மையாய்க் கமனுபாவமின்ரும் மற்ருே எப்போதும் கமனமே உளது: எனினும்தூர தோஷ வயத்தால் அவற்றின் கண்ணே கமன அபாவ ஆரோபண மாம். அதுபோலஎப்போதும்கருமத்தோடுகூடிய தேகேந்திரியாதிகளிடத்தே உண்மையாய்க் கர்மா பாவமின்ரும் மற்ருே சும்மா இருக்கின்றேன் சிறிது மாத்திரையும் கருமம் செய்திலன் என்னும் அத்தியாசப் பிரதீதியின் பலத்தால் அவற்றின் கண்ணே அதன் ஆரோபணம் செய்யப்படும், இத்தகைய தேகேந்திரியாதிகளிடத்தே ஆரோபிக்கப்பட்ட வியாபார உபரமத் தன்மை வடிவ அகர்மத்தின் கண்ணே யாவன் அவற்றின் சந்தத வியாபார முடமை வடிவ வாஸ்தவ ருபத்தை ஆராய்ந்து உண்மையாய்க் கர்மத்தை காண்பனே அதாவதுஆரோபித அகருமத்தே கரும நிவர்த்தியெனப் பெரிய நிக்கிரகமென்னும் முயற்சி வடிவ வியாபாரமாகிய கருமத்தை யாவன் காண்பனே கருத்து இதுவாம். நேத்திர சம்பந்தமுற்ற தூர தேசத்திருக்கும் கமன முடையவனிடத்தும் ககனத்தின் கண்ணிருக்கும் கமனமுடைய உடுக்கணத்தும் தூர தோஷத்தால் கமன அபாவப்பிரதீதி உண்டாமாயினும் புருஷனும், உடுவும் உண்மையாய்க் கமனம் பற்றல் திண்ணமாம். அது போலச் சும்மா இருக்கும் யான் சிறிது மாத்திரையும் ஒன்றையும் செய்வதில்லை என்னும் அப்பியாச ருபப் பிரதீதி பலத்தால் தேகேந்திரியாதிகளிடத்தே கரும அபாவம் பிரதீதியாயினும் அவை உண்மையாய்க் கருமமுடையவனேயாம். உதாசீன அவஸ்தையின் கண்ணும் யான் உதாசீனனுயிருந்தேன் என்னும் அபிமானமே ஒரு கருமமாம். இவ்வாறு கருமத்தே அகருமத்தையும் அகர்மத்தே கருமத்தையும் காணும் பரமார்த்த

தரிசியானேனே சர்வ மனுஷ்யருள்ளும் மதிமானவன் யோகத்தோடு கூடியவனுவன் சர்வ கருமங்களையும் செய்பவனுவன் ஈண்டுக் கூறியருளிய முத்தருமங்களால் ஸ்ரீ பகவானனவர் பரமார்த்த தரிசியின்ஸ் துதி கூறியருளினர் ஆண்டு ஸ்ரீ பகவான் ஆனவர் பிரதம பாதத்தால் கரும விகருமங்களின் வாஸ்தவ வடிவத்தை தரிசிப்பித்தருளினர் எதனுல் கரும சப்தம் விகித கருமம், நிஷித்த கருமம் இரண்டினுக்குமே வாசகமாமோ அகர்மத்தின் வாஸ்தவ வடிவத்தைக் காண்பித்தருளினர் ஆதலால் ஹே அர்ச்சுனு! எல்லாக் கருமங்களும் பந்த ஏதுவாம் ஆதலின் இவை எனக்குச்செய்ய யோக்கிய மன்றும் மற்றே தூஷிணீம் பாவமாயே சுக பூர்வமாய் இருத்தல் யோக்கியமாம் என நினைத்தல் மித்தையேயாம் ஏன் எனின் யான் கரும கருத்தா என்னும் கருத்துருத்துவ அபிமானம் எது வரை உள்ளதாமோ அதுவரையுமே அவிகிருத நிஷித்த கருமங்கள் பந்தத்தை உண்டாக்கும் அவ்வபிமானம் அற்று கேவலம் தேக இந்திரியாதிகளின் தருமம் என எண்ணிச் செய்த அவை பந்தத்தை உண்டாக்கா இப்பொருளைப் பூர்வம் கூறி வந்தேம்.

ஹே அர்ச்சுன! அகர்த்துருத்துவ அபிமானம் இருப்பநான் சும்மாயிருக்கிறேன் என்னும் உதாசீனத் தன்மையின் அபிமான மாத்திர ரூப கருமமும் பந்தத்தின் ஏதுவேயாகும். எதனுற் கருத்திருத்துவ வாஸ்தவ அபிமானியானவன் வஸ்துவின் வடிவத்தை அறிந்திலனேஆகையால் ஹேஅருச்சுன! கருமம்,விகர்மம்,அகர்மமென்னும் மூன் மொழிந்த மூன்றன் வடிவத்தை அறிந்து விகர்ம அகர்மங்களை பரித்தியாகம் செய்து கருத்துருத்துவ அபிமானம் விடுத்து பலேச்சை அற்று நீ சாஸ்த்திர விகித சுபகருமத்தையே செய்தி அல்லது பிரமாண சன்னிய ஞான விஷயம் கருமமாம். அத்தகையது இத்திருசிய ஜடரூபப் பிரபஞ்சமாம். கூறிய ஞான விஷயமன்றும் அது அகருமமாம். அத்தகையது ஸ்வப்பிரகாச சர்வ பிரஹ்மாதிஷ்டானமான ரூப சைதன்யமாம்.

ஆண்டு யாவன் ஜகத்துருவ கருமத்தே தனது சத்தாஸ்புரண ரூபத்தால் அநுஸ்யூத ஸ்வப்பிரகாச சைதன்ய ரூப அகரு

மத்தைப் பரமார்த்த திருஷ்டியாற் காண்பனே யாவன் அவ்அகரு மத்தே அம்மாயமய திருசியப் பிரபஞ்ச ரூப கருமத்தைக் கற்பித மெனக் காண்பனே, அதாவது காண்பானுக்கும், காண்பவற்றிற் கும் யாதொரு சம்பந்தமும் சம்பவிப்பது இன்ருமாதலின் இத் திருசியப் பிரபஞ்சம் அத்திருஷ்டாவின் கண்ணே உண்மையாய் இன்ரும் என இவ்வாறு யாவன் காண்பனே.

யாவன் சர்வ பூதங்களேயும் அதிஷ்டான ஆன்மாவின் கண்ணே கற்பிதம் எனக்காண்பனே அச்சர்வபூதங்களிடத்தும் சத்தாஸ் புரண ரூபத்தால் ஆன்மாவை அநுஸ்யூதமெனக் காண்பனே அப்பரமார்த்த தரிசியாகிய அவனே யாவரினும் மேன்மையனுவன் இவ்வாறு சைதன்ய ஆன்மாவிற்கும் திருஸ்ய ஜகத்திற்கும் பரஸ்பரம் அத்தியாசம் இருப்பினும் யாவன் உண் மையாய்ச் சுத்த சைதன்யத்தையே காண்பனே அவ்வித்துவானே சர்வ மனுஷர் மத்தியில் அத்தியந்தம் புத்திமானுவன் அவனினும் வேருய எவனும் புத்திமானல்லன். ஏன் எனின் இவ்வுலகத்தும் உண்மையாய் வஸ்துவின் வடிவத்தை அறிபவனே புத்திமான் எனப்படுவன். மற்றையன் அல்லன். கயிற்றினைக் கயிராகவே அறிபவன் மதிமானுவன். அதனைச் சர்ப்பமென உணர்பவன் மதி மான் அல்லன் அதுபோலச் சர்வ அதிஷ்டான ரூப சுத்த சைதன் யத்தைக் காண்பவனே பரமார்த்த தரிசியாதலின் மதிமானுவன். அனுன்ம பிரபஞ்சத்தைக் காணும் அஞ்ஞானியோ மித்தையாதரி சியாதலின் மதிமானுகான் அப்பரமார்த்த தரிசியே அப்புத்தியின் சாதனரூப யோகத்தோடு கூடியவனுவன், அதாவது அந்தக் கரண சுத்தியால் ஏகாக்கிர மனமுடையவன் ஆவன். இக்கார ணத்தால் அவனே மனத்தூய்மைக்குச் சாதனரூப சர்வ கர்மங் கட்கும் கருத்தாவாவன் இவ்வாறு மதியுடமை, யோகமுடமை, சருவ கருமச் செயலுடமை என்னும் முத்தருமங்களால் அப்பர மார்த்த தரிசி இவ்வாறு மகத் தன்மையை அடைந்திருத்தலின் நீயும் பரமார்த்த தரிசியாதி! அத்தன்மையினுனே நின்பாற் சர்வ கருத்திருத் தன்மை சித்தமாம். ஆகையால் எக்கரும அகர்ம ஸ்வ ரூபத்தை அறிந்து நீ இச்சம்சாரத்தினின்றும் முத்தனுவாய் எனப்

பூர்வம் யாது அருளினேமோ கருமாதி முன்றன் வாஸ்தவ ரூபம் நீ அறிதல் தகுதியாம் எனப் பூர்வம் யாது அருளினேமோ அவனே மதிமான் என்பது முதலிய ஸ்துதி யாது அருளினேமோ அவை யாவும் பரமார்த்த வஸ்துவின் தரிசனம் உண்டான பின்னரே சம்பவிக்கும். அன்னிய வஸ்துவின் தரிசனத்தாற் சம்பவியாவாம். ஏன் எனின்! அச்சைதன்யமாகிய பரமார்த்த வஸ்துவினும் வேருயுள்ள அனுன்ம பதார்த்தங்களின் ஞானத்தால் அசுப சம்சாரத்தினின்றும் முத்தி சம்பவியாதாம். மாருய்ப் பந்தத்தின் அடைவே உண்டாம். அப்பரமார்த்த வஸ்துவினும் வேருய யாவும் அதத்துவ ரூபமாதலின் அது அறியத்தகுதியும் ஆகாதாம். அவ்வனுன்ம ஞானத்தால்புருஷன்பால்மதிமானும் தன்மையும் சம்பவியாதாம் ஆகையால் பரமார்த்த தரிசிகட்கு இம்முன்மொழிந்த பொருள் பொருத்தமேயாம்.

இன்னும் ஓர் உரையில் இவவாறு கூறி உள்ளது. அதாவது பரமேஸ்வரர் அது மகிழ்வின் பொருட்டுச் செய்யப்பட்ட அக்கினி ஹோத்திர சந்தியா உபாசனுதி நித்திய கருமங்கள் பந்த ஹேதுவாக மாட்டாவாதலின் அவற்றில் யாவன் இவை பந்த அஹேதுவாதலின் அகர்ம ரூபமேயாம். எனக் காண்கின்றனே நித்திய கர்மங்களைச் செய்யாது ஒழிதல் அகருமமாம். அது பிரத்தியவாயஹேதுவாம். ஆதலின்அதன் கண்யாவன் இது பிரத்தியவாயஹேதுவாதலின்கருமரு பமேயாம். எனக்காண்கின்றனே அவனே யாவருள்ளும் மதிமானுவான். யோகத்தோடு கூடியவனுவன். சர்வ கருமங்களுக்கும் சுருத்தாவாவன் என்பதாம். இப்பொருள் அசங்கதமாம், ஏன் எனின் அந்நித்திய கருமத்தே இது அகருமம் என்னும் ஞானம். தாம்பின் கண்ணே பாம்பின் ஞானம் போல மயல் வடிவமேயாம். ஆதலின் அம்மயக்க உணர்வின் கண்ணே அசுப சம்சாரத்தினின்றும் மோக்ஷ ஏதுத் தன்மை சம்பவியாவாம். மற்ருே அது மித்தையேயாம் ஆதலின் தானே அசுபருபமாய் அறியத் தகுந்த தத்துவ ருபமும் அன்ரும் அம்மயக்க உணர்வை அடையின் மதியுடமை, யோகமுடமை முதலிய ஸ்துதியும் சம்பவியாதாம் மாருய் அம்மயக்க உணர்வை உடையவன் மித்தியா தரிசி எனக் கூறப் பெறுவன் அந்நித்திய

கருமத்தின் அனுஷ்டானமோ சொருபமாயே மனத்தூய்மை வாயிலாய் ஆன்ம ஞானத்தின் கண்ணே உபயோகியாம். அந்நித்திய கருமத்தின் கண்ணே அகரும புத்தியோ எதன் கண்ணும் உபயோகி அன்ரும் ஏன் எனின் எப்பொருள் சாஸ்திரத்தால் விகிதமாமோ அப்பொருளே மனத்தூய்மையின் கண்ணும், ஞானத்தின் கண்ணும் உபயோகியாம். காயம் வாக்கு மனம் முதலியவற்றே சாஸ்திரம் பிரஹ்ம திருஷ்டியை விதித்துளது ஆதலின் அத்திருஷ்டிக்கு அந்தக்கரண சுத்தி வாயிலாய் ஞானத்தின் கண்ணே உபயோகமாவதே போல நித்திய கருமம் அகருமம் என்னும் திருஷ்டியை எந்நூலும் விதிக்கவில்லை ஆதலின் அத்திருஷ்டிக்கு எவ்வர்த்தத்தின் கண்ணும் உபயோகம் சம்பவியாது.

அக்கருமத்தின் கண்ணே அகர்ம திருஷ்டியை விதிக்கின்றது. என்க்கூறிற்சம்பவியாதாம். ஏன் எனின்! உபக்கிரமாதி வசனங்களின் விரோதம் கூறப்பெற்றுள்ளது. இவ்வாறு நித்தியங்களைச் செய்யாமை வடிவ அகருமமும் ஸ்வருபமாயே அந்நித்திய கருமத்தினும் விகித கருமத்தினும் இலக்ஷிகத் தன்மையினுலே உபயோகியாம் அவ் வகருமத்தே கரும திருஷ்டி எப்பொருளின் கண்ணும் உபயோகியாக மாட்டாது. அந்நித்திய கருமத்தைச் செய்யாமையால் பிரத்திய வாயமும் உண்டாகாதாம். ஏன் எனின் அதனைச் செய்யாமை அபாவ வடிவமாம். பிரத்தியவாயம் பாவ வடிவமாம் அவ்வபாவத்தினின்றும் பாவஉற்பத்தி சம்பவியாதாம் அங்ஙனம் ஆகுமாயின் அபாவமோ சர்வ தேச காலத்தும் இருக்கின்றதாகலின் சர்வதேச காலங்களில் சர்வ காரிய உற்பத்தி உண்டாதல் வேண்டும். ஆனுல் அவ்வாறு காணேம் ஆதலின் அவ்வாறு உடன்படல் முற்றிலும் முறணும் அல்லது பாவ ரூப அர்த்தமே தர்ம அதர்மரூப அபூர்வத்தின் உற்பத்தியாம். அபாவ ரூப அர்த்தம் அபூர்வரூப உற்பத்தி ஆகாதாம். ஆதலின் நித்திய கரும அபாவம் பிரத்தியவாய உற்பத்தி இன்ரும் மற்ரே அந்நித்திய கரும அநுஷ்டான காலத்தே அதன் விரோதியாய சயன உபாசனதி நித்திய கரும அகரணேப லக்ஷித பாவ ரூப கர்மமே அப்பிரத்திவாயஹேதுவாம். இதுசர்வ வைதிக புருடரின்

சித்தாந்தமாம். ஆதலின் மித்தியா ஞான நிவிருத்திப்பிரசங் கத்தே அதன் வியாக்கியனேமே செய்தல் முற்றினும் முரணும். ஸ்ரீ பகவத் வசனம் நித்திய கரும அனுஷ்டான பரமென எவனே னும் கூறின் அது சம்பவியாது. ஏன் எனின்! இவன் நித்திய கரு மத்தைச்செய்க என்பதனை ஓர் உரையின் கண்ணே இப்பொருள் கூறப்பெற்றுள்ளது. கருமம், விகருமம், அகருமம் என்னும் மூன் றன் பரியவசான ரூப கதி. அத்தியந்தம் ககனமாம். ஆதலின் அதிகாரியானவன் கருமங்களின் கதியை அவசியம் அறிய வேண் டும் என்னும் இப்பொருள் ஸ்ரீ பகவானுற் கூறப்பெற்றுள்ளது. ஆண்டு யாவன் கருமத்தின் கண்ணே அகருமத்தை காண்பனே அதாவது கருமத்தினும் விபரீத பாவத்தைக்காண்பனே. ஆண்டு அம்மூன்றன் கண்ணும் அக்கர்மாதிகளினும் விபரீத ரூபத்தன்மை சாஸ்திரப் பிரமாணத்தாற் காண வரும். கருமத்தின் கண்ணே சிரத்தை அற்றவன் செய்த யாகம் பல காரணம் அன்ரும் ஆத லின் செய்யினும் செய்யாததற்கொப்பேயாம். ஆதலின் சிரத்தை அற்றவன் செய்த யாக கருமம். அகருமத்தின் கண்ணே பரியவ சானத்தை அடையும் இடாம்பிகள் செய்த யாக கருமம், விகருமத் தின் கண்ணே பரியவ சானத்தை அடையும்,

இவ்வாறு சர்வ வியாபாரமற்ற உதாசீனத்தன்மை அகரு மமே ஆயினும் துக்கிகளைக்காப்பாற்றுவதில்லை. ஆயின் அவனது உதாசீனத் தன்மை ரூப அகருமம் விகருமத்தின் கண்ணே பரிய வசனத்தைஅடையும்பிதிர்யாகாதி ஐந்தனையும் குறித்த காலத்தே செய்யாமை அகருமருபமே ஆயினும்அக்கால் ஈசுர ஆராதனத்தே ஆ சக்தி உடையவனுக்கு அவ்வைந்தினையும் செய்யாமை வடிவ அகருமமும் கருமத்தின் கண்ணே பரியவ சானத்தை அடையும்.

நித்திய கரும பரித்தி யாகத்தால் பாவப் பிராப்தி கூறப் பெற்றது. அது செய்யுங்காலத்தே சாஸ்திர நிஷித்த லௌகிக வியவகாரம் செய்வதனுனே பாவ அடைவு கூறப்பெற்றுள்ளது. ஆனல் அக்கால் ஈசுர ஆராதனத்தில் பற்றுதல் உற்றவன் பிரத்

திய வாயத்தை அடையான் இக்காரணத்தானே பூர்வம் நீர் முத லியவற்றின் உள்ளிருந்து தவஞ் செய்யும் இருஷிகள் அக்கால் நித்திய கருமத்தைச்செய்யாமையாற் பிரத்திய வாயத்தை அடைந் திலர். இவ்வாறு ஒரு மிருகத்தைக் கொல்லல் விகரும ரூபம் எனினும் யாகத்தை செய்யும் ஹிம்சை கருமத்தின் கண்ணே பரி யவ சானத்தைஅடையும் வாளா அம்மிருகம் நஷ்டமாயின் அதன் இம்சையினின்றும் தரும ரூப அபூர்வம் உற்பன்னம் ஆகாதாம் ஆதலின் அது கரும ரூபமும் அன்ரும் இச்சை உடையோன் அப் பசு இம்சையைச் செய்யான் ஆதலின் அது விகரும ரூபமும் அன் ரும் மற்ருே எஞ்சியதாய்ச் செய்யப் படினும் இம்சை செய்யா மைக்கு ஒப்பேயாம் ஆகையினுல் அவ்வியர்த்தமாய ஹிம்சை அக ருமத்தின் கண்ணே பரியவ சானத்தை அடையும் இவ்வாறுகள் வனே விட்டு விடுதல் அவனோடு கூடியார்க்குக் கரும ரூபமே ஆயினும் அரசனுக்கே விகருமரூபமேயாம். கள்வனே விடுதல் அரசனுக்கு பாவஅடைவின் ஏதுவெனக் கூறப்பெற்றுள்ளது. அதே கள்வன் விடுபாடு நிஷ்காம சன்னியா சிக்கு உபேக்ஷை விஷயமாதலின் அகருமமேயாம். இவ்வாறு மெய் பேசுதல் கரும ரூபமாயினும் அதனுல் ஒரு பிராணிக்கு இம்சை உண்டாயின் அதுவும் விகருமத்தே பரியவ சானத்தை அடையும். இவ்வாறு பொய் மொழி புகலல் விகரும ரூபமேயாயி னும் அதனுல் ஒரு பிராணியின் காப்பு உண்டாயின் அதற்கு கருமத்தின் கண்ணே பரியவசானமுண்டாம். இவ்வாறு யாவன் சாஸ்திரபிரமாணத்தால்கருமத்தின்கண்ணே அகருமத்தன்மையை யும்விகருத்தன்மையையும்காண்பனோ அகருமத்தின் கண்ணே கரு மத் தன்மையையும், விகருமத்தன்மையையும் காண்பனோ விகரு மத்தின் கண்ணே கருமத்தன்மையையும் அகர்மத்தன்மையையும் காண்பனோ காரியஅகாரிய விபாகத்தை உணர்ந்தவன் கருமாதி களின் வாஸ்தவ ரூபம் உணர்ந்தவன் ஆதலின் மதிமான் எனப் படுவன் என்பதாம்.

யாவன் மதிமானோ யுக்தனோ அவனே முழுக்கருமஞ் செய்த வனுவன் யாவன் கேவலம்மதிமானே ஆவனோ யுக்தன் அல்லனோ

அவனும் முழுக்கருமம் செய்தவன் ஆகான் இப்பொருளை இப் போது வெளிப்படையாய்க் காண்பிப்பாம்.

யாவன் அகருமத்தே கருமத்தைக் காண்பனோ அவன் யுக் தன் எனப்படுவன். அசைவற்ற கூடஸ்த ஆத்மா அகருமமாம். அசைவற்ற ஆகாசாதிப்பாகியப் பிரபஞ்சமும் மனோ புத்தியாதி ஆந்தரப்பிர பஞ்சமும் கருமம் எனப்படும். அந்த அகருமத்தே அக்கருமத்தை ஆதார ஆதேயபாவத்தாலேனும் உபாதான உபா தேய பாவத்தாலேனும் அதிஷ்டான அத்தியஸ்த பாவத்தாலே னும் கண்டு கொண்டு நூலுணர்ந்தோன் கருமத்தைச் செய்வன் ஆண்டு முதலிற் சாங்கிய சாஸ்திரமுடையரோ ஜபா குசுமத்தின் செம்மை வெண்மணியின் கண்ணே தோற்றுதலே போலச் சங்கா தத்தின் கர்த்திருத்வாதி தர்மம் அஜங்க கூடஸ்த என்னிடத்தே அவிவேகத்தாற்றோன்றுகின்றது எனப்பாவித்துக் கருமத்தைச் செய்வர் மற்றைய உபநிஷத்துணர்ந்தவரோ பொன்னில்விளைந்த குண்டலம் போல் காரியங்கள் யாவும் பொன் வடிவமே போல பிரஹ்மத்தினின்றும் உற்பன்னமாயஇச்சர்வஜகத்தும்பிரஹ்ம ரூப மேயாமாதலின் யாகாதி கருமங்களும் திரவிய தேவதை முதலிய சாதனங்களும் கர்த்தாவாய யாமும் பிரஹ்ம ரூபமேயாம் எனப் பாவித்துக் கருமத்தைச் செய்பவர். இவ்விருவரும் யுக்தர் எனப்படுவர். ஆண்டு முற்கூறிய முறையே யாவன் மதிமான் ஆயினும் இவ்வகை யுக்தனல்லனோ அம்மதிமான் ஆய அயுக்தன் செய்யுங் கருமம் எல்லாம் அசத்தேயாகும். ஆதலின் அவை அவனை அசுப சம்சாரத்தினின்றும் விடுபடுத்தமாட்டா.

ஹே கார்க்கியே! யாவன் இந்த அக்ஷர ஆன்மாவை அறி யாது. இம் மனுட உலகத்தே எந்த எந்த ஹோமத்தையும் எந்த எந்த யாகத்தினையும் செய்வனோ அனேக ஆயிர வருஷ பரியந் தம் எந்த எந்தத் தவத்தை இயற்றுவனோ அவை யாவும் இவ னுக்கு அழிவுடைய பலத்தையே அடைவிக்கும். யாவன் யுக்தனாய் மதிமான் அல்லனோ அவன் செய்யத் தகாத தொழிலையும் செய்ப

வன். அதனால் அவன் பிரத்தியவாயத்தையே அடைவன் ஏன் எனின்! பாவந் தீண்டாக் காரணமாய அபரோக்ஷஞானம் அந் நிர்ப்புத்தி யுக்தனுக்கின்றும் மற்றே அவனுக்குக் கேவலம் பரோக்ஷஞானமே உளது. இக்கருமத்தையும் பரோக்ஷஞானத்தையும் சுருதி, அவித்தை, வித்தை என்னும் இரண்டு சப்தத்தால் கூறி அவ்விரண்டன் சமுச்சயத்தைக் கூறி இருக்கின்றது. அல்லது அகருமத்தின் கண்ணே கரும தரிசனம் பரோக்ஷ அபரோக்ஷ தரிசனம் என இரு வகையாம் அவற்றுள் பரோக்ஷ தரிசனமுடைய ஞான கரும சமுச்சய அநுஷ்டான கர்த்தாவாதலின் புத்திமான் எனப்படுவன். அபரோக்ஷ தரிசனமும் உபாஸ்ய சாக்ஷாத்காரமும் என இருவகைப்படும். உபாஸனை செய்யப்படுவது உபாஸ்யம் ஆம். அதுவும் வியாகிருதம், அவ்வியாகிருதமென இரு வகைத்தாம். அப்பேதத்தால் அச்சாக்ஷாத்காரமும் இரு வகைத்தாம் காரிய ரூப சூத்திர ஆன்மா வியாகிருதமாம். சர்வ ஜகத்தின் காரணம் அவ்வியாகிருதமாம். அந்த வியாகிருத சாக்ஷாத்காரமுடையவன் தேகாபிமானம் அற்றவனாதலின் யோக சாஸ்திரத்தில் விதேகன் எனப்படுவன். அவ்வியாகிருத சாக்ஷாத்காரமுடையவன் பிரகிருதிலயன் எனப்படுவன்.

இவ்விரண்டு உபாஸனைகட்கும் சுருதி, சம்பவம், அசம்பவம் என்னும் இரண்டு சப்தங்களாற் கூறிச்சமுச்சய விவரணம் செய்துளது. அவ்வுபாஸகன் யுக்தன் எனப்படுவன் இவனுக்கும் மேல் எஞ்சிய கர்த்தவ்வியம் இருக்கின்றதாதலின் இவனும் முமுக்கருமம் செய்வானாகான் மற்றே யாவன் பிரபஞ்ச ரூப கருமத்தைப் பாதித்துக் கூடஸ்த ஆத்ம ரூப அகருமத்தின் முக்கிய தரிசனத்தை அடைந்துளனே அத் தத்துவ சாக்ஷாத்காரம் உடையவனே கிருதகிருத்தியன் ஆதலின் முக்கிய முமுக்கருமம் செய்தவனவன் இவர் யாவருள்ளும் முதலில் ஞான கரும சமுச்சய அனுஷ்டானஞ் செய்யும் புருஷனே தேகாபிமானி மனுஷருள்ளே மதிமான் ஆவன். ஆகையால் அக்கிராந்த தரிசியாதலின் அவன் அகவியே ஆவன் வியாகிருத சாக்ஷாத்காரமுடையவனும் அவ்வியாகிருத சாக்ஷாத்காரம் உடையவனும் ஆகிய மத்திய இரு

வரும் க்ராந்த தரிசிகளாதலின் கவிகளாவார். ஆயினும் தத்துவ வஸ்துவின் கண்ணே மூடராதலின் இவ்விருவரும் வியவதான மாய் அசுப சம்சாரத்தினின்றும் முத்தி உண்டாம். தத்துவ சாக்ஷாத்கார உத்தமனே ஜீவிக்கும் காலத்தே அசுப சம்சாரத் தினின்றும் முத்தனுவன் ஈண்டு சூட்சும தரிசிக்கு க்ராந்த தரிசி எனப் பெயராம்.

திரவிய தேவாதி சாதன சகித யாகாதிகள் கருமமாம். அசைவற்ற கூடஸ்தப்பிரஹ்மம் அகர்மமாம் ஆண்டுயாவன் சாதனசகித யாகாதி கருமத்தே கூடஸ்தப்பிரஹ்மரூப அகருமத் தைக்காண்பனே அதாவது கூறியமுறையே அந்தயாகாதி கரு மத்தே அதன் திரவிய தேவாதி அங்கங்களில் யாவன் பிரஹ் மதிருஷ்டி செய்வனே அத்திருஷ்டியினுன் அன்றிஎக்கருமம் செய் யப்படுமோ அது வியர்த்த சேட்டைவடிவமேயாம். இக்காரணத் தால் கருமத்தின்கதி அத்தியந்தம் ஆழ்ந்ததே ஆம்.

(சங்கை) ஹே பகவன்! எந்த அகருமத்தின் கண்ணே கர்மம் ஆரோபிக்கப்படுகின்றது அஃது என்ன வஸ்துவாம் சமாதானம்! ஹே அர்ச்சுன! எந்தவஸ்துவின் கண்ணே புண் ணிய பாவரூப கருமம் பிரதீதியாமோ எந்த வஸ்துவின் கண் ணே. அக்கருமத்தின் சுகதுக்க ரூபபலம் யான் சுகி துக்கி என் னும் பிரதீதியின் பலத்தால் பிரதீதியாமோ அந்த பிரத்தியக் சேத னமே அகரும ரூபமாம் சர்ப்பபாவமற்ற கயிற்றின் கண்ணே சர்ப்பம் அத்தியஸ்தம் ஆவதே போல! அசைவற்ற சேதனரூப அகருமத்தே இவ்வசைவுறுதற் கருமம் அத்தியஸ்தமாம் இவ் வாறு யாவன் அகருமத்தே, கருமத்தைக் காண்பானே! கயிற்றின் கண்ணே அத்தியஸ்தமாய சர்ப்பத்தைக் காண்பவனுக்கு, இது சர்ப்பம் அன்று மற்றே இது கயிரேயாம் என்னும் ஆப்தவக்தா வின் வசனத்தால் விக்ஷேபப் பிரபலத்தால் கயிற்றின் ஞானம் உண்டாகாதாயின் அவ்வாப்தன் பிராந்தகனுக்கு இச்சர்ப்பத்தை நீ கயிற்றின் திருஷ்டியால் உபாஸனை செய்தியென உபதேசித்த போது அவன் அவ்வுபாஸனையின் திடத்தால் அச்சர்ப்பத்தை

மறந்து கயிற்றின் தன்மையையே சாக்ஷாத்காரம் செய்வனே! யாவன் இது சர்ப்பம் அன்று மற்றே இது கயிரேயாம் என்னும் வசனத்தினனே. கயிற்றின் வாஸ்தவ வடிவத்தை உணர்வனே அவனுக்கு இச் சர்ப்பம் கயிரேயாம் என்னும் விருத்தியின் நிரந்தரப் பிரவாக ரூப உபாஸனை செய்வதற்குச் சிறிது மாத்திரையும் பிரயோஜனம் இன்றாம் இவ்வாறு கூட ஸ்தப்பிரஹ்ம ரூப அகருமத்தின் கண்ணே அத்தியஸ்த கர்த்தா கிரியாதி பிரபஞ்ச ரூப கருமத்தைத் தத்துவமசி யென்னும் வசனத்தாற் பாதித்துத் தூய மனம் உடையோனுக்கு கூடஸ்த பிரஹ்ம ரூப அகருமத்தின் பிரதீதியாதல் கூடும் மனத்தூய்மை பெறுதவன்! கருமத்தை அகரும திருஷ்டியால் உபாஸனை செய்யின் அதன் திடத்தால் அவனும் அக்கரும மறைப்பால் அகரும வாஸ்தவ ஸ்வரூபத்தைச் சாக்ஷாத்கரிப்பன்.

இவ்வகையாய விலக்ஷண உரை செய்துள்ள எமக்கு பகவான் பாஷியக்காரர் துல்லியத்தன்மை உண்டாக மாட்டாது. குகையின் கண்ணே பிரகாசிக்கும் தீபத்திற்குச் சூரியனது துல்லியத்தன்மை உண்டாகாததே போலாம்.

கரும, விகரும, அகருமங்களின் விசாரம் முற்றிற்று.

## மவுன வடிவ இலக்கணம் ஆராய்வாம்

## சுழுத்தி மவுனம் அறிவிக்க அதன் முன் மூன்று மவுனங்களை எடுத்துக் காட்டல்.

அவை ஏ பகவன்! வாக்காதிகளின் மவுனம், அக்ஷமவுனம் காஷ்ட மவுனம் என்னும் மூன்றினையும் அடியேன் அறிவேன்! ஹே சமஸ்த மவுனங்களிலும் ஆற்றல் உடையவராகிய மவுனே சரே பிரஹ்ம வித் சிரேஸ்டரே சுழுப்த மவுனம் என் என்பதை விளக்கமாக அனுக்கிரஹம் செய்ய வேண்டுமென்று இராகவர் கேட்க!

ஸ்ரீவசிஷ்ட்ட பகவான் ஈண்டு முனிவர்களானே ஹே இராக வனே!

முனிவர் இருவகையினர் என இயம்பப் பெறுவர்! ஒருவன் காட்ட தவத்தினன் எனப்பெறுவன்! மற்றவன் அங்ஙனமே ஜீவன் முத்தன் எனப்பெறுவன்! நீ உணர்ந்த மூன்று காஷ்ட தவத்தினரது ஏற்றத் தாழ்வு வேற்றுமை. உடையவர்களுக்கும் அனுன்மாவை உணர்ந்திருக்கும் தன்மையானே. ஏக கோடித்தன் மையே என்பது கருத்து ஆம் அதனையே வெளிப்படுத்தல் ஆன்ம தத்துவ பரியாலோசன சூன்னியமான அவவநுபவ ரஸ சூனிய மான கிருச்சிர சாந்திராயணுதிகிரியையின் கண்ணே கட்டுப்பட்ட முக்கிய நிச்சயம் உடையவனுகி அடமாக இந்திரியக்கூட்டத்தை வெற்றி கொண்ட முனிவன் காஷ்டதவசி எனப்பெறுவன்! இவை யாவற்றையும் உள்ளவாறுணர்ந்து பிரத்யக் ஆன்மாவின் கண்ணே தன்னுலேயே தன்னைத் தியானித்துக்கொண்டிருப்பவன் உலகத்தார் போல நடித்த போதினும் உள்ளே மகிழ்ந்தவனுகி விவகாரத்தில் இதர தாபச லோகர்க்கு ஒப்பான் எனினும் அந்தர் நிரதிசய ஆனந்த ஆசுவத திருப்தனுகி இருப்பன்! அவனேமுக்த முனிவன் எனப்பெறுவன்.

ஆண்டு மவுனத்தை உணர்ந்த பெரியவர் ஆதியதை மூன் ருகப் பகுத்து நான்கு வகையாக் கூறுவர். வாக்மவுனமும் அக்ஷ மவுனமும், காஷ்ட மவுனமும் சுழுத்த மவுனமும் என நான் காம்.

## அவற்றிற்கு தனித்தனியே இலக்கணம் கூறுவாம்.

வாக்குகளின் தடையே வாக்கு மவுனமாம்! வலிதில் இந்திரி யங்களை அடக்கலே! அக்ஷ மவுனம் ஆம்.

சேஷ்டைகளின் பரித்தியாகம் காஷ்டமெனப் பெயரிய மவு னமாம். ஐந்தாவதாகவோ மனே மவுனம் என்பதும் ஒன்றுண்டு. அது காஷ்ட தாபசனிடத்தே மிருதமேயாம்! அதாவது இங்ஙனம்

விபாக பரியாலோசனத்தில் மஞே மவுனமும் ஐந்தாவதாக எங்ஙனமேனும் சம்பவிக்கும்! அஃது அங்ஙனம் ஆயினும் காஷ்ட தாபசனிடத்தில் மூர்ச்சை சுழுத்திகளிலேயே சம்பவிக்கும். பிரிது போதிலதாம் என அது அவற்றேடு சேர்த்துக் கணக்கிடப்பட இல்லையாம். ஆன்ம தத்துவ அநுபவத்தில் சுழுப்த மவுனமெனப் பெயரியது. ஜீவன் முத்தனைப்பின்ருெடர்ந்து ஜீவிக்கும். சுழுப்த மவுன அவஸ்தயின் கண்ணே அது துரியமாம் சதுர்த்தமாகிய அதுவே ஜீவன் முக்தர்களிடத்தில் உணரப்பெறுவதாம். எழுந்திருந்த காலத்திலோ இம்மூன்று மவுனங்களும் விளங்கா நின்ற சித்த சலனத்தோடு கூடினவேயாம்.

இம்மூன்று மவுனவிசேடங்களிலும் அதிகாரியா இருப்பவன் காஷ்ட தபஸியே ஆவன். விபாகம் அற்றது=அதாவது பகுக்கும் விகற்பக்ஷயத்தானும், தார தம்மிய விபாகம் இன்மையிஞனும் அவிபாகமாம். இதஞனே அது அப்பியாசம் அற்றதாம். அபரிச்சின்ன ஆன்ம ரூபத் தன்மையிஞனே ஆதியும், அந்தமும் அற்றதாம். இங்ஙன் யாதுளதாமோ அவ்விதுவே. தியானிப்பவனுக்கேனும்தியானியாதவனுக்கேனும்சுழுப்தமவுன சம்பந்தியாம் என்பர்.

நாநாத்துவ பிரமம் அமைந்த ஜகத்தையும் இவ்வான்ம தத்துவத்தையும் உள்ளபடியே காரணத்தைத் தவிரக்காரியம் இல்லையென்றும் தனது வடிவமென்றும் ஆராய்ந்து அறிந்து ஐயம் திரிபு அற அமர்ந்து வாழ்வதாகிய அதுவே சுழுத்தி மவுனம் ஆம். அநேக வகை சம்வித் ரூபங்களின் ஆன்மாவாக எச்சிவம் உளதோ அதஞனேயே இவை யாவும் வியாபிக்கப் பெற்றுளதோ அவ்வனைத்துமாய் அநந்தமுமாய் எந்நிலைமை உளதோ அதுவே சுழுத்தி மவுனம் எனச் சொல்லப்பெறும் எங்கும் நிறைந்திருத்தலின் ஆகாயமுமாம். அறிவாய்இருத்தலின்ஆகாயமும்ஆகாதாம் சூனிய ரூபத்துவம் இன்மையின் ஆகாயமும் ஆகாதாம். ஆகாயம் சூனியம் அன்மையின் இல்லாததுமல்ல. உருவமின்மையின் இருப்பனவுமல்ல. யாவும் விவர்த்த ரூபத்தானே உளதும் ஆம். சைதன்ய ரூபத்தானே இலவுமாம் எனச் சித்தம். சமமாய்ச் சாந்

தமா இருப்பதே சுழுத்தி மவுனம் எனச் சொல்லப்பெறும். இரு வகை யோகீசர்களானே சுழுத்தி மவுனம் ஆனது திண்ணமாக அடையப்பெறும்.

சாங்கிய யோகியர் சிலராம். மற்றையரோ யோக யோகியர் களாவர். இச்சுழுத்தி மவுனமே. அவித்தியைப் பாதிப்பதாற்றுரி யமாம், அதன் பாதக விருத்திகளுக்கும் பாதம் உண்மையாற்றுரி யாதீதமும் ஆம் என்பர்.

நல்ல விசார ஜன்னிய ஞானத்தினுலேயோ தூய பரோக்ஷ அபரோக்ஷ ஞானங்களினுலேயோ நல்ல நிதித்யாசன சவிகர்ப்ப சமாதிகளினுலேயோ நித்தியம் ஏக சமாதியால் விவேக விசாரத் தினுலேயோ இராஜ யோகத்தினுலேயோ ஆன்ம தத்துவம் உணர்ந்தவர்கள் சாங்கிய யோகியே ஆவர்கள் கரும யோகி களைக் கணக்கிடல் பிராணன் என்பதாதி பிராணுதி காற்றுக் களின் நல் அடக்கத்தின் கண் முன் வருணித்த அடயோகத்தி னுலே எவர்கள் நோய் அற்றதும் ஆதி அந்தம் அற்றதும் ஆகிய பதத்தை அடைவுற்ருர்களோ அவர்களே யோகயோகியர்களாவார் என்பர்.

பலி பூதத்துவ சாக்ஷாத்காரத்தினுலே அடையத்தக்கதாகி யதோ இருவகை யோகியர் யாவருக்குமே இயற்கையதேயாய பரமார்த்த பதமாம். அதனைச் சிலர் சாங்கிய யோகத்தானே அடைகின்றனர் மற்றுஞ்சிலர் இத்தேகத்தனேயே யோகத்தானே அடைந்து மகிழ்வர். பலத்தினுல் இதனையே வெளிப்படுத்துவாம் ஏ பிரஹ்ம சொருபரே சாங்கிய யோகம் கரும யோகமென்றும் இரண்டில் ஒன்றை அனுஷ்டிப்பதால் அதிகாரியானவன் உத்தே சித்த உயர் பதத்தை எவ்வாறு அடைதல் கூடும். பல பேதம் உளதா மேல் சாங்கிய யோகியர் அடையும் இடத்தையே யோக யோகியரும் அடைகின்ருர். ஆகையினுல் சாங்கியத்தையும் யோகத்தையும் ஒன்ருகக் காண்பவனே நன்ருகக் காண்பவனு வன்! ஞான நிட்டையோடு கூடிய எவ்வதிகாரி இப்பிறப்பிற் கர்மானுஷ்டானம் இல்லாதவனுயினும் பூர்வ ஜன்ம கருமத்தாற்

சுத்த அந்தக்கரணம் உடையவனுவனே அவ்வதிகாரியால் சிர வண மனனுதி பூர்வமாக ஞான நிஷ்டையால் எம்மோக்ஷ ரூப ஸ்தானம் அடையப்படுகின்றதோ ஈண்டு எதில்ஸ்திதி அடைந்து வித்துவான் ஒருகாலும் மீண்டு வருதல் சம்பவியாதோ அதுவே ஸ்தானமாம். அத்துவித ஸ்தான வடிவ அவித்யா நிவிருத்தி பூர் வக அத்விதீய நிர்க்குணப் பிரஹ்மத் தன்மையின் பிராப்தியாம் இவ்வடிவ மோக்ஷத்தினின்றும் பின்னமாகிய பிரமாதி லோக முதலியவற்றை அடைந்தும் மீண்டும் இவன் பிறப்பு இறப்பு வடிவச் சுழலையே அடைகின்ருன்.

ஈண்டு ஸ்தான சப்தத்தால் பிரமலோகாதிகொள்ளல் கூடா தாம்! அத்தன்மைத்தாய பிரஹ்ம ரூப மோக்ஷம் அதிகாரிக்கு நித்தியப்பிராப்தமேயாயினும் அஞ்ஞானத்தின் ஆவரண சக்தி யால் பிராப்தம் ஆகாததே போல உளதாம். அத்தன்மையதாய மோக்ஷம் மகாவாக்கியத்தாலுண்டாம் தத்துவசாக்ஷாத்காரத்தால் எப்போது அந்த ஆவரணம் நிவிருத்தியாமோ அப்போது அம் மோக்ஷம் பிராப்தியானது போல் சொல்லப்பெறுகின்றது. கண் டத்தில் உள்ள ஆவரணத்தின் ஞானத்தால் மீண்டும் அடையப் பெற்றதாய் கூறப்படுகின்றதே போலும் பலத்தில் இச்சை இல தாயபகவத் அர்ப்பண புத்தியால் செய்யப்பட்ட சாஸ்திர விகித நித்தியநைமித்திககர்மங்கள்யோகமாம். அந்நிஷ்காம யோகத்தை உடையவன் யோகியாவான். அவனும்இப்பிறப்பிலாவது முப்பி றப்பிலாவது அந்தக்கரண சுத்தியால் சந்நியாச பூர்வகம் சிரவ ணுதிகள் செய்தடைந்த ஞான நிஷ்டையால் அம்மோக்ஷ வடிவ ஸ்தரனத்தை அடைகின்ருன். இவ்வாறு சர்வ கருமத்தியாக வடிவ சந்நியாசத்திற்கும் நிஷ்காம கரும யோகத்திற்கும் மோக்ஷ வடிவப் பிரயோஜனம் ஒன்றே ஆதலின் சாங்கிய சந்நியாசத்தை யும் நிஷ்காம கருமயோகத்தையும் ஒரு வடிவமாகக் காண்பவனே உண்மையாகக்காண்பவனுவான். அவ்விரண்டையும் வேறுவேரு கக் காண்பவன். உண்மையாய்க்காண்பவனெனக் கூறப்பெருன் மற்ருே அவன் விபரீத தரிசியே ஆவான். எவ்விதிகாரியிடத்து இப்போது சந்நியாச பூர்வக ஞான நிஷ்டைகாணப்படுகின்றதோ

கரும நிஷ்டை காணப்படவில்லையோ அவ்வதிகாரியின்பால் அக் குறியால் முன் அனந்த ஜன்மங்களில் பகவதர்ப்பித கருமநிஷ்டை அநுமானிக்கப்படும். ஏனெனில் காரணமின்றி காரியோற் பத்தி இன்றுமன்றே, அக்காரணம் ஒரு போது காட்சியாய்த் தோற்றப் படவில்லையேல் காரிய வடிவ குறியால்அதன் அநுமானம் பண்ண படும். மழைக்காலத்தில் காரிய வடிவமாகியஆற்று நீரின் பெருக் கால் வேறிடத்தில் மழையாங் காரணத்தின் அநுமானம் செய்யப் படுவதே போலும் இச்சன்மத்தில் சந்நியாசபூர்வக ஞானநிஷ்டை வடிவக்காரியத்தால் முன் ஜன்மத்தில் அக்கரும நிஷ்டை அநுமானிக்கப்படும். எவ்வதிகாரியிடத்தில் இப்போது பகவதர்ப் பித கரும நிஷ்டை காணப்படுகின்றதோ சந்நியாச கரும சந்நி யாச பூர்வகமான ஞான நஷ்டை காணப்படுவதில்லையோ அவ்வ திகாரியிடத்தில் அக்கரும நிஷ்டை வடிவ இலிங்கத்தால் வருங் காலத்தாம். சந்நியாச பூர்வக ஞான நிஷ்டை அநுமானிக்கப் படும். ஏனென்றால் யாண்டு காரண சாமக்கிரியை உண்டோ ஆண்டு காரியம் அவசியம் தோன்றற் பாலதாதலின் அக்காரண சாமக்கிரியையால் இனிமேலாம். காரியத்தின்அநுமானம் பண்ண படும் மேகங்களின் உற்பத்தி விசேஷத்தால் வருங்காலத்துண் டாம் மழையின் அநுமானம் ஆகின்றதே போல பகவதர்ப்பித கர்ம நிஷ்டையால் வருங்காலத்துண்டாம் ஞான நிஷ்டை அநு மானிக்கப்படும். ஆதலின்அஞ்ஞானிகளாகிய முமூட்சு ஜனங்கள் அந்தக்கரண சுத்தியின் பொருட்டு முதலில் நிஷ்காம கருமமே செய்யத் தக்கதாம். சந்நியாசம் முதலில் செய்யத் தகாதாம். அச்சந்நியாசமே தீவிர வைராக்கியத்தை அடைய இயல்பாகவே பெறப்படும். என்னும் இது ஸ்ரீ பகவற் கீதையை அநுசரித்த படியாயவியாக்கியானமாம். அற்றேல் வேறு வேறு ரூபம் அமைந்த அவற்றிற்கு எங்ஙனம் ஒரு பலம் எனில் பிராண மனோ விருத்தி இரண்டிற்கும் யாண்டு முற்றிலும் பிரதீதி இல்லையோ வாசனை வலை எடுக்கப்பெற்றதோ அதுபரம பதமென அறிதி அதாவது இரண்டிற்கும் ஆத்தி அந்திக விலய உபலக்ஷித தன்மை உண்மையின் உபய வாசனை வலை யெடுபட்டதிதியே அந்த மேலான பதம் என்பதாம்.

உற்றுப் பாராமையினலே இல்லாததே ஆய மனமானது வீணகவே முதிர்ந்து எழுந்து விளையாடுகின்றது. சொப்பனத்தில்

நன்கு காணப்பெறுவதாய தனது மரணகாரம் இல்லாததேயாம். ஞானத்தினால் மனம் பாதமாகவே அதன் காரியமாய அகந்தை மமதையாதி பந்த மோக்ஷாந்த சகல கற்பனைகளும் பாதிக்கப்படு கின்றனவாம் என்று கூறல் மனோபாவமேயாய இச்சம்சாரந்தான் யாண்டையது எங்ஙன் வந்ததோ மமதை அகந்தை ரூபச் சந்ததி தான் யாண்டையது எங்ஙனுற்றது உபதேசிய உபதேசிகள் தாம் பந்த மோக்ஷங்கடாம் யாண்டையன எங்ஙன் உற்றனவோ இப் போது உத்தம மத்திம அதம அதிகாரி முறையானே மோக்ஷ சாதனத்திரயத்தைச் சர்வ சாஸ்திரார்த்த தாற்பரிய சங்கிரஹத் தானே தெரிவித்தல் ஏக தத்துவனுகாப்பியாசம் பிராணன்களின் லயம் அவ்வாறே மனோ நிக்கிரஹமும் என மோக்ஷ சப்தார்த்த சங்கிரஹமாம்.

ஒரு பொருளாகிய அத்வய தத்துவத்தின் அப்பியாசமாகிய சிரவணாதி ஆவர்த்தனம் பிராணலயம் சித்தக்ஷயம் என்னும் மூன்றனுள் ஒன்று நன்று சித்தியாகவே பரஸ்பரம் நன்கு சித்தி யாகின்றன. ஜந்துக்களுடைய பிராண சித்தங்கள் நித்தம் ஒன்று விட்டு ஒன்று இராதனவாம் எள்ளும் எண்ணெயும் போலவும் மலரும் மணமும் போலவும் ஒன்றோடொன்று கலந்து நிற்பன வாம். மனத்தின் அசைவு பிராணனும் பிராணன் தன்அசைவு மன மாம். இவ்விரண்டும் அந்நியோந்யம் ரத சாரதிகள் போல நித்தி யம் அசைவைச் சம்பாதிப்பனவாம். ஆதார ஆதேயம் போலவும் தீயும் வெப்பமும் போலவும் இவைகள் ஒன்றிலதேல் நசிக்கும். தம் அழிவானே மோக்ஷமெனப் பெயரிய காரியத்தை உண்டாக் கும் எவ்வளவுகாலம் ஏகத்துவபாவனை தரிக்கத்தக்கது அதிதிட மான ஏக தத்துவத்தில் அத்துணையும் அதனுகாரவிருத்தி தாரை யை நன்கு பாவித்து விருத்தி செய்க எத்துணையும் அவ்விருத்தி தாரையும் அந்திய சாக்ஷாத்காரகதமாய் அபாவத்தன்மையை அடையா நிற்குமோ தன்பயிற்சியால் வித்தாரமாகப்பின் ஒன்றும் வேண்டாம் என்பதாம்.

சுருதி தாற்பரிய நிரணய ஆறுலிங்கங்கள் 1. உபக்கிரமம் உபசம்மாரம். 2. அப்பியாசம், 3. அபூர்வதை, 4. பலம்,

5. அர்த்தவாதம், 6. உற்பத்தி என்னும் ஆறு லிங்கங்களினுலும். சிரவணத்தில் தார்ப்பரியம் நிச்சயிக்கப்படும், அவற்றுள்.

1. சாந்தோக்யாதி சுருதிகளில் பிரகரண ஆரம்பத்தில் சிருஷ்டிக்குமுன் சகத்து ஒரே அத்விதீய சத்தாகவே இருந்தது என்று அந்தப் பிரஹ்மத்துக்கு சுவகதாதி பேதத்திரயத்தை நீக்கி அகண்டாகாரத்தைச் சொல்லுவதே உபக்கிரமம். பிரகரண முடிவில் நாம ருபாத் மக சகத்தை அந்தப் பிரஹ்மத் தோடுள்ள ஏகத்துவத்தைப் போதித்து அந்தப் பிரஹ்மம் அத்வைதமென்று சொல்வதே உபசங்காரமாம். உபக்கிரமம், உபசங்காரம் இரண்டும் கூடி ஒரு லிங்கமாகும்.

2. பிரகரணத்தினிடையில் தத்துவமஸியாதி வாக்கியங்களால் பிரத்தியக் ஆன்மாவே பிரஹ்மம் என்று அடிக்கடி சொல்லுவதே அப்பியாசமாம்.

3 அம்பிரத்திகாத்மா பிரமாணங்களுக்கு அப்பாற்பட்ட என்று சொல்லுவதே அபூர்வதையாம்.

4. அப்பிரத்தியகாத்மா ஒருவனை அறியவே சகலமும் அறியப்பட்டனவாமென்று சொல்லுவதே பலமாம்.

5. பிரத்தியக் ஆத்ம ருபப் பிரஹ்மத்தை அதை நிலைத்துள்ளதின் கதி சிந்தனை செய்யத்தக்கதாம் என்னும் நியாயமிருத்தலின் ஜகத்தின்சிருஷ்டியாதி அநுக்கிரஹார்த்தமான பஞ்ச கிருத்தியங்களையும் காத்திருத்துவமாக சொல்லுவதே அர்த்த வாதமாம்.

6. கடற்திற்கு மண்ணும், தந்துவிற்கு ஊர்ண நாபியும் காரணமாதல் போலச் சகத்திற்குக் காரணம் பிரஹ்மம் என்று சொல்லுவதே உபபத்தியாம். (திருஷ்டாந்தம்)

வியஷ்டி, சமஷ்டிப் பிரபஞ்சத்தினின்றும் பிரஹ்மத்தையும், ஆத்மாவையும் விசாரம் செய்வதனையே பதார்த்த சோதனம் என்பர்.

பிரஹ்மாத்மாவின் ஏகத்துவத்தை அறிவிக்கும் வாக்கியத்தினையே மகா வாக்கியம் என்பர்.

(தத் துவம்) (துவம் தத்) (அது நீ நீ அது)

என்னும் பரஸ்பர வாக்கியத்தில் பரஸ்பர ஐக்கியம் சொல்லுவதை அவ்வயயம் என்பர். அதனையே ஒதப்புரோத பாவம் என்பர் வியதிகார மென்றும் கூறுவர்.

வேதாந்த சாரா மிருத
சிவராஜ யோகம் முற்றிற்று.

ஓம் தத் ஸத்.

உன்னை ஒழிய ஒருவரையும் நம்புகிலேன்
பின்னை ஒருவரை யான் பின் செல்லேன்--பன்னிருகைக்
கோல் அப்பா வானோர் கொடிய வினை தீர்த்தருளும்
வேல் அப்பா செந்தில் வாழ்வே.

அன்பே சிவம்.





5. அர்த்தவாதம், 6. உற்பத்தி என்னும் ஆறு லிங்கங்களினுலும். சிரவணத்தில் தாற்பரியம் நிச்சயிக்கப்படும், அவற்றுள்.

1. சாந்தோக்யாதி சுருதிகளில் பிரகரண ஆரம்பத்தில் சிருஷ்டிக்குமுன் சகத்து ஒரே அத்விதீய சத்தாகவே இருந்தது என்று அந்தப் பிரஹ்மத்துக்கு சுவகதாதி பேதத்திரயத்தை நீக்கி அகண்டாகாரத்தைச் சொல்லுவதே உபக்கிரமம். பிரகரண முடிவில் நாம ருபாத் மக சகத்தை அந்தப் பிரஹ்மத் தோடுள்ள ஏகத்துவத்தைப் போதித்து அந்தப் பிரஹ்மம் அத்வைதமென்று சொல்வதே உபசங்காரமாம். உபக்கிரமம், உபசங்காரம் இரண்டும் கூடி ஒரு லிங்கமாகும்.

2. பிரகரணத்தினிடையில் தத்துவ மஸியாதி வாக்கியங்களால் பிரத்தியக் ஆன்மாவே பிரஹ்மம் என்று அடிக்கடி சொல்லுவதே அப்பியாசமாம்.

3 அம்பிரத்திகாத்மா பிரமாணங்களுக்கு அப்பாற்பட்ட என்று சொல்லுவதே அபூர்வதையாம்.

4. அப்பிரத்தியகாத்மா ஒருவனை அறியவே சகலமும் அறியப்பட்டனவாமென்று சொல்லுவதே பலமாம்.

5. பிரத்தியக் ஆத்ம ருபப் பிரஹ்மத்தை அதை நிலைத்துள்ளதின் கதி சிந்தனை செய்யத்தக்கதாம் என்னும் நியாயமிருத்தலின் ஜகத்தின்சிருஷ்டியாதி அநுக்கிரஹார்த்தமான பஞ்ச கிருத்தியங்களையும் காத்திருத்துவமாக சொல்லுவதே அர்த்த வாதமாம்.

6. கடற்திற்கு மண்ணும், தந்துவிற்கு ஊர்ண நாபியும் காரணமாதல் போலச் சகத்திற்குக் காரணம் பிரஹ்மம் என்று சொல்லுவதே உபபத்தியாம். (திருஷ்டாந்தம்)

வியஷ்டி, சமஷ்டிப் பிரபஞ்சத்தினின்றும் பிரஹ்மத்தையும், ஆத்மாவையும் விசாரம் செய்வதனையே பதார்த்த சோதனம் என்பர்.

பிரஹ்மாத்மாவின் ஏகத்துவத்தை அறிவிக்கும் வாக்கியத்தினையே மகா வாக்கியம் என்பர்.

(தத் துவம்) (துவம் தத்) (அது நீ நீ அது)

என்னும் பரஸ்பர வாக்கியத்தில் பரஸ்பர ஐக்கியம் சொல்லுவதை அவ்வயயம் என்பர். அ த னை யே ஒ தப்புரோத பாவம் என்பர் வியதிகார மென்றும் கூறுவர்.

வேதாந்த சாரா மிருத
சிவராஜ யோகம் முற்றிற்று.

ஓம் தத் ஸத்.

உன்னை ஒழிய ஒருவரையும் நம்புகிலேன்
பின்னை ஒருவரை யான் பின் செல்லேன்--பன்னிருகைக்
கோல் அப்பா வானோர் கொடிய வினை தீர்த்தருளும்
வேல் அப்பா செந்தில் வாழ்வே.

அன்பே சிவம்.







5. அர்த்தவாதம், 6. உற்பத்தி என்னும் ஆறு லிங்கங்களினுலும். சிரவணத்தில் தாற்பரியம் நிச்சயிக்கப்படும், அவற்றுள்.

1. சாந்தோக்யாதி சுருதிகளில் பிரகரண ஆரம்பத்தில் சிருஷ்டிக்குமுன் சகத்து ஒரே அத்விதீய சத்தாகவே இருந்தது என்று அந்தப் பிரஹ்மத்துக்கு சுவகதாதி பேதத்திரயத்தை நீக்கி அகண்டாகாரத்தைச் சொல்லுவதே உபக்கிரமம். பிரகரண முடிவில் நாம ரூபாத் மக சகத்தை அந்தப் பிரஹ்மத் தோடுள்ள ஏகத்துவத்தைப் போதித்து அந்தப் பிரஹ்மம் அத்வைதமென்று சொல்வதே உபசங்காரமாம். உபக்கிரமம், உபசங்காரம் இரண்டும் கூடி ஒரு லிங்கமாகும்.

2. பிரகரணத்தினிடையில் தத்துவ மஸியாதி வாக்கியங்களால் பிரத்தியக் ஆன்மாவே பிரஹ்மம் என்று அடிக்கடி சொல்லுவதே அப்பியாசமாம்.

3 அம்பிரத்திகாத்மா பிரமாணங்களுக்கு அப்பாற்பட்ட என்று சொல்லுவதே அபூர்வதையாம்.

4. அப்பிரத்தியகாத்மா ஒருவனை அறியவே சகலமும் அறியப்பட்டனவாமென்று சொல்லுவதே பலமாம்.

5. பிரத்தியக் ஆத்ம ரூபப் பிரஹ்மத்தை அதை நிலைத்துள்ளதின் கதி சிந்தனை செய்யத்தக்கதாம் என்னும் நியாய மிருத்தலின் ஜகத்தின்சிருஷ்டியாதி அநுக்கிரஹார்த்தமான பஞ்ச கிருத்தியங்களையும் காத்திருத்துவமாக சொல்லுவதே அர்த்த வாதமாம்.

6. கடற்திற்கு மண்ணும், தந்துவிற்கு ஊர்ண நாபியும் காரணமாதல் போலச் சகத்திற்குக் காரணம் பிரஹ்மம் என்று சொல்லுவதே உபபத்தியாம். (திருஷ்டாந்தம்)

வியஷ்டி, சமஷ்டிப் பிரபஞ்சத்தினின்றும் பிரஹ்மத்தையும், ஆத்மாவையும் விசாரம் செய்வதனையே பதார்த்த சோதனம் என்பர்.

பிரஹ்மாத்மாவின் ஏகத்துவத்தை அறிவிக்கும் வாக்கியத்தினையே மகா வாக்கியம் என்பர்.

(தத் துவம்) (துவம் தத்) (அது நீ நீ அது)

என்னும் பரஸ்பர வாக்கியத்தில் பரஸ்பர ஐக்கியம் சொல்லுவதை அவ்வயயம் என்பர். அதனையே ஓதப்புரோத பாவம் என்பர் வியதிகார மென்றும் கூறுவர்.

வேதாந்த சாரா மிருத
சிவராஜ யோகம் முற்றிற்று.

ஓம் தத் ஸத்.

உன்னை ஒழிய ஒருவரையும் நம்புகிலேன்
பின்னை ஒருவரை யான் பின் செல்லேன்--பன்னிருகைக்
கோல் அப்பா வானோர் கொடிய வினை தீர்த்தருளும்
வேல் அப்பா செந்தில் வாழ்வே.

அன்பே சிவம்.





## ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி வணக்கம்.

கல்லாலின் புடை அமர்ந்து நான் மறை
ஆறங்கம் முதல் கற்ற கேள்வி
வல்லார்கள் நால்வருக்கும் வாக்கிறந்த
பூரணமாய் மறைக்கப் பாவாய்
எல்லாமாய் அல்லதுமாய் இருந்ததனை
இருந்தபடி இருந்து காட்டிச்
சொல்லாமற் சொன்னவரை நினையாமல்
நினைந்து பவத் தொடக்கை வெல்வாம்.

---

## ஸ்ரீ தேவியின் வணக்கம்.

சுரும்பு முரல் கடிமலர்ப் பூங்குழல் போற்றி
உத்தரியத் தொடித்தோள் போற்றி
கரும்புருவச் சிலை போற்றி கவுணியர்க்குப்
பால் சுரந்த கலசம் போற்றி
இரும்பு மனம் குழைத்தென்னை எடுத்தாண்ட
அங்கயற்கண் ணெம்பிராட்டி
அரும்பும் இள நகை போற்றி ஆரண நூபுரம்
சிலம்பும் அடிகள் போற்றி.

---

தருணமங்கலை உனது சிந்தை தழைந்த பால்
அமுது ஊறினுல்
அருண கொங்கையில் அது பெருங்கவி
அலை நெடுங்கடலாகுமே
வருணம் நன்குறு கவுணியன் சிறுமதலை
அம்புயல் பருகியே
பொருணயம் பெரு கவிதை யென்றொரு
புனித மாரி பொழிந்ததே.

---

உ

சிவமயம்.



ஓம் கணேசாய நம.
ஓம் குமராய நம.
ஓம் காசி விஸ்வேஸ்வராய நம.
ஓம் நீலகண்ட ஞான
தேசிக குருப்யோ நம.

வேதாந்த சாராமிருத

# சிவஞானச் செம்பொருள்

## நூன் முகம்

சகல உப நிடதங்களும் பசுக்களாம். சுரோத்திரிய பிரஹ்ம நிஷ்டர் ஆகிய ஆசிரியரே கரக்கின்றவர் ஆம். சிஞ்ஞாசுக்களே கன்ரும். ஆசிரியர் உபதேச வாக்கியமே அமிருதம் ஆம். சாதனங்கள் நான்கும் உள்ள தீவிரதர முமுட்சுவாயுள்ள அதிகாரியா உள்ள புத்திமானே அநுபவிப்பவன் ஆவன்.

உபநிடதங்கள் ஆகிய பாற்கடலின் கண் சூத்திரம், பாஷியம்; வார்த்திகம் என்னுங் குடங்களில் புராதன கிரந்த வடிவங்

கள் ஆக பூர்வாசிரியர் ஆகிய வேத வியாசர் முதலிய பெரியோர்கள் உபநிஷத் வாக்கியங்களாகிய பாலினை மொண்டு வைத்துள்ளார்கள் யாம் அதனை எமது சற்குருவாகிய ஸ்ரீ நீலகண்ட ஞான தேசிகரது சன்னிதித் தீயிற் காய்ச்சி எனது அநுபூதி என்னும் மத்தினுல் மதனஞ் செய்து அதிற்றேன்றிய சிவராஜயோகம், சிவஞானச் செம்பொருள். ஆகிய அமிருத வடிவ கற்கண்டு உண்டியினை சாதன சதுட்டயம் நிறைந்த அதிகாரி புருடருக்குக் கொடுத்துளேன். இதனை உண்டு அதில் எழும் சுவையினை தம் தம் அநுபூதியளவிற் பெற்றவர்கள் மீண்டும் சாரம் இன்றிய விடயங்கள் என்னும் விஷத்தினை உண்டு மீண்டும் ஜனன, மரணமாகிய துன்பங்களில் வருந்துவரோ வருந்தார் அமிருதம் உண்டவர் திருப்தராகலின்

அர்த்த கெம்பீரத்தால் அளத்தற்கு அறிதாகலானும் பரிபூரண பரமானந்த ருப சீதளத்தைப் பயத்தலானும், அமலமாயும் அற்புதமாயும் இருத்தலானும்வேதங்களின்முடிவாயுள்ளஉபநிஷத் வாக்கியங்களை பாற்கடல் என்று சொல்லப்பட்டது.

வேத வியாசர் முதலிய ஆசாரியர்கள் தாம் உபதேசம் செய்வதற்கு அமைந்த வாக்கியங்களை அங்கங்கே யெடுத்துக்கொண்டதனை மொண்டு என்றும் சொல்லப்பட்டது.

அவ்வாக்கியங்களை நூலாக பூர்த்தி செய்ததைக்குடங்களில் நிறைத்து என்றும் சொல்லப்பட்டது.

அக்கிரந்தங்களை ஆசாரியர் முன்னிலையில் விசாரம் செய்ததனை இது பூர்வ பட்சம், இது சித்தாந்த பட்சம் என தெளிவுற்றதனைக் காச்சி என்றும் சொல்லப்பட்டது.

சித்தாந்த பட்சத்திலும் சாரமாயுள்ள பிரகரண அருத்தங்களைத் தமது அநுபூதி வலி கொண்டு விசாரம் செய்ததனை மதனஞ் செய்து எனவும் பிரஹ்மான்ம ஐக்கிய ஞானத்திற்கு முக்கிய உபயோகிகளான பொருள்களை மனசிலே தாரணம் செய்ததனைத்

தந்துளேன் என்றும் கத்திய ரூபப் பிரபந்தமாகச் செய்துள்ளதை வேதாந்த சாராமிருதம் ஆகிய கற்கண்டு உண்டி எனவும் பெயர் தந்துளேன், இதனைக் கற்ருேர், கேட்டோர்ஆகிய அதிகாரிகள் அனைவரும் அனர்த்த நிவிருத்தியும், ஆனந்தப் பிராப்தியும் அடைய வேண்டும் என்றும் இந்நூலானது முருகவேளின் அருட் பிரசாதமானதால் என்றும் நிலை பெற்றுள்ளதாகவே ஆக வேண் டும் என்றும் எல்லாம் வல்ல இறைவனது திருவருளைப் பிரார்த் திக்கின்றேன்.

வேதாந்த சாரமாயுள்ள பொருள்கள் அனைத்தினையும் சாதன சதுட்டய சம்பன்னர் ஆம். அதிகாரிகளுக்கு எளிதாக விளங்கு மாறு உள்ளங்கை நெல்லிக்கனிபோன்று சுருங்கச் சொல்லி விளங்க வைத்தல் என்னும் முறையே அமைந்துள்ள இப்பெரு நூல் சாதனங்கள் நான்கும் ஒருங்கமைந்தவராய் யாவாலும் நீக்குதற்கரிய பிறவித் துன்பத்தினை நீக்குவதற்கு உறிய ஆசிரி யர் எங்குளார் என ஆதரவோடும் உருக்கத்தோடும்தேடிஅலையும் அன்புடைய அதிகாரிகட்கே இந்நூலினைக் கொடுத்து உதவு மாறும் அப்படி உதவியவர் மனையொடு, மக்களும், செல்வமும் நிலைபெற்று இருமை இன்பமும் எளிதினில் எய்தி நீடூழி வாழ்ந்து முடிவினில் வீட்டின்பமும் விரைவினில் எய்த வேண்டும் என எல்லாம் வல்ல இறைவனது திருவருளைப் பிரார்த்திக்கின்றேன்.

நித்தியானந்தன்.

அன்பே சிவம்.

## கந்தர் அநுபூதி.

உருவாய் அருவாய் உளதாய் இலதாய்
மருவாய் மலராய் மணியாய் ஒளியாய்
கருவாய் உயிராய்க் கதியாய் விதியாய்
குருவாய் வருவாய் குகனே அருள்வாய்.

முருகன் தனிவேல்முனி நங்குரு என்று
அருள்கொண்டு அறியார் அறியும் தரமோ
உருஅன்று அருவன்று உளதன்று இலதன்று
இருள்அன்று ஒளியன்று எனநின் றதுவே.

அன்பே சிவம்.

உ

ஓம் குமராய நம.

## பதினான்கு வித்தைகள்.

வேதம் 4, வேதாங்கம் 6, நியாயம் மீமாஞ்சை 2, ஸ்மிருதி புராணங்கள் 2 ஆக இவைகள் பதினான்கு வித்தைகளாம்.

இப்பதினான்கு வித்தைகளுள் மீமாஞ்சையானது மிகமிகவும் உயர்ந்ததாய் இருபது அதியாயங்களாய் அர்த்ததைச் சொல்லும் தன்மையால் இரண்டுபாகமாம்.

அவற்றுள் முதற்பாகம் சைமுனி சூத்திர ருபமாய், பன்னிரண்டு அத்தியாய வடிவமாய், கர்ம கர்த்துரு பிரதிபாதகமாய் லோக வேதாதி கரணம் என்றல் முதலிய ஆயிரம் நியாயங்களால் பூர்வ மீமாஞ்சை எனப்படும்.

அந்தச் சைமுனி சூத்திரத்திற்கு சபரரால், சாபரம் என்று ஓர் பாஷியம் இயற்றப்பட்டது. அதற்கே பட்டாசரியரால் வார்த்திக ருபத்தில் பாட்டம் என்று ஒரு மதாந்தரம் செய்யப்பட்டது. அந்தப் பட்டருடைய சீடரான பிரபாகரரால் அந்தச்சாபர பாஷியத்திற்குப் பிரபாகரம் என்று ஒரு மதாந்தரம் செய்யப்பட்டது.

இரண்டாம் பாகம் வியாச சூத்திர ருபமாய் எட்டு அத்தியாயங்களாய் பிரஹ்மாத்ம ஐக்கியப் பிரதி பாதகத்தால் உத்தர மீமாஞ்சை எனப்படும்.

அவற்றுள் பூர்வம் நான்கு அத்தியாயங்கள் தேவதாகாண்டமாம். அதில் மந்திர வாதத்தைப்போல் தேவதா இலக்கணங்கள் பல பத்திர இராமரால் பிரதிபாதிக்கப்பட்டுள்ளன.

## வேதாந்த சாஸ்திரம்.

உத்தரமான நான்கு அத்தியாயங்களும் பிரஹ்ம காண்டமாம் அது பிரஹ்மாத்தும ஐக்கியப்பிரதி பாதகமாய் சங்கராசாரியரால் பாடியம் செய்யப்பட்டுள்ளன. அந்தப் பாடியத்திற்குப் பஞ்ச பாதிகை என்னும் உரை செய்யப்பட்டு அதற்கே விவரணுசாரியரால் விவரணம் செய்யப்பட்டது. அன்றியும் அச்சங்கர பாஷியத்திற்கே வார்த்திகம், இராமானந்தீயம், பிரஹ்ம வித்தியாபரணம் முதலிய அநேக வியாக்கியானங்களும், வாசஸ்பதி மிசிரரால் பாமதி நிபந்தனம் என்னும் ஓர் உரையும் அவ்வுரைக்குக் கல்பதரு என்னும் வியாக்கியானமும் அதற்குப் பரிமளமென்னும் உரையும் உள்ளது. இவ்வாறு விரிந்த சித்தாந்தமாகிய நூல்களே வேதாந்த சாஸ்திரம் எனச் சொல்லப்படுகின்றது.

இத்தகைய வேதாந்த சாஸ்திரத்திற் கூறியுள்ள பிரஹ்ம வித்தையைக் கற்கப் புகுவோர் அதில் உள்ள பொருள் விளங்க வேண்டின் மிக மிக ஆர்வத்தோடும் அதி சிரத்தையோடும் அகமுக நாட்டத்தோடு கூடியவராய் அதிற் பதிந்த சித்தம உடைவராய் இருந்து ஸ்ரீ குரு சன்னிதியில் ஏகாக்கிர மனம் உடையராய்செவ்வனே விசாரம் செய்யின் அல்லது பயன்படாவாம். ஆதலின் 1. ஒரு காற்கேட்போன் இருகாற் கேட்பின் 2. பெருக நூலிற் பிழை பாடிலனே 3. முக்காற் கேட்பின் முறையறிந்து உரைக்கும் என்பது இலக்கணமாம்.

இதிலுள்ள அரும் பெரும் பொருள்களை உத்தேசம், இலக்கணம் சோதனையுடனே எமது அநுபவ வலி கொண்டு இதனைத் திருவருள் தூண்ட இதனை எழுதியதாம்.

வேதங்கள்யாவருக்கும் பிரமாணமாயுள்ளன. ஆகலின் இது எல்லவருக்கும் பிரமாணமேயாம். ஆகமம், விஷ்ணு ஆகமம்

பிரஹ்மாகமம், பௌத்தர் ஆகமம் இது அவ்வரவர்க்கே பிரமாணமாம். இதனையே வேதம் பொது ஆகமம் சிறப்பெனவும் திரு மந்திரம் கூறும் ஆதலின்,

இதனைப் படிப்பவரும் ஸ்ரீ சற்குரு சன்னிதியில் முறையாகக் கேட்பவரும் இருமை இன்பமும் எளிதினில் எய்தி நீடூழிவாழ்ந்து வீட்டின்பமும் விரைந்து வந்து பொருந்துமாறு எல்லாம் வல்ல இறைவனது திருவருளைப் பிரார்த்திக்கின்றேன். மேலும் இந்நூலினை அச்சியற்றிய பொள்ளாச்சி கோபால விலாசம் பிரசில் உள்ள ஆறுமுகம் பிள்ளை, இராமு பிள்ளை இவர்கள் இருவரும் நாம் கூறியவாறே அதிசிரத்தையுடனே இதனை அச்சியற்றித் தந்த அவர்கள் முயற்சிக்கு நாம் நன்றி பாராட்டக் கடமைப் பட்டுள்ளோம். அவர்கள் குலத்தோடு, மனை, மக்கள் யாவரும் நீடூழி வாழ்க! வாழ்க!! வாழ்க!!! என எல்லாம் வல்ல பரம் பொருளைப் பிரார்த்திக்கின்றேன்.

இந்நூல் முருக வேளின் திருவருள் முன்னின்று தூண்டுவித்து அதற்குரிய 1. விதி தந்தன, 2. மதி தந்தன, 3. வலி தந்தன, 4. ஒளி தந்தன, 5. பொருள் தந்தன, 6. அருள் தந்தன, 7. துணை நின்றன இந்நூல் முற்றுப் பெற்றனவே அல்லாமல் என் செயல் அன்றெனெ நீவிர் யாவரும் அறியுமின்.

இதிலுள்ள மாறுபட்டுள்ள பதங்களை பிழை திருத்தம் பார்த்துத் திருத்திக் கொள்ளவும்.

ஓம் கணேசாய நம. ஓம் குமராய நம.

ஓம் காசி விஸ்வேஸ்வராய நம.

ஓம் நீலகண்ட ஞான தேசிக நம.

ஓம் சாந்தி! சாந்தி!! சாந்தி!!!

௨

## வேதாந்த சாரமிருத சிவஞானச்செம்பொருள்.

1. மனம் எனும் ஓர் பேய்க் குரங்கு மடப்பயலே நீ தான்
மற்றவர் போல் எனை நினைந்து மருட்டாதே கண்டாய்
இனமுற என் சொல் வழியே இருத்தி எனிற் சுகமாய்
இருந்திடுநீ என் சொல் வழி யேற்றிலை ஆனாலோ
தினையளவு உன் அதிகாரம் செல்ல ஒட்டேன் உலகம்
சிரிக்க உனை அடக்கிடுவேன் திருவருளால் கணத்தே
நனவில் எனை அறியாயோ யார் என இங்கிருந்தாய்
ஞான சபைத் தலைவனுக்கு நல்ல பிள்ளை நானே.

2. நினைந்துநினைந்துஉணர்ந்து உணர்ந்து நெகிழ்ந்து
நெகிழ்ந்து அன்பே
நிறைந்து நிறைந்து ஊற்று எழுங்கண்ணீர் அதனால்
உடம்பு
நனைந்து நனைந்து அருள் அமுதே நல் நிதியே ஞான
நடத்தரசே
என் உரிமை நாயகனே என்று
வனைந்து வனைந்து ஏத்துதும் நாம் வம்மின் உலகியலீர்
மரணமிலாப் பெருவாழ்வில் வாழ்ந்திடலாம் கண்டீர்
புனைந்துரையேம் பொய் புகலேன் சத்தியம் சொல்கின்றேன்
பொற்சபையிற் சிற்சபையிற் புகுந் தருணம் இதுவே.

3. கண்டது எலாம் அனித்தியமே கேட்டது எலாம் பழுதே
கற்றது எலாம் பொய்யே நீர்களித்தது எலாம் வீணே
உண்டது எலாம் மலமே உட்கொண்டது எலாம் குறையே
உலகியலீர் இது வரையும் உண்மை அறிந்திலீரே
விண்டதனால் என் இனிநீர் சமரசசன்மார்க்க மெய்நெறியை
கடைப்பிடித்து மெய்ப்பொருள் நன்கு உணர்ந்தே
எண்டகு சிற்றம்பலத்தே யெந்தை அருள் அடைமின்
இறவா வரம் பெறலாம் இன்பு உறல் ஆமே.

4. நான் உரைக்கும் வார்த்தை எலாம் நாயகன் தன்வார்த்தை
நம்புமினோ நமரங்காள் நற்றருணம் இதுவே
வான் உரைத்த மணி மன்றில் நடம்புரி யெம் பெருமான்
வரவு எதிர் கொண்டு அவன் அருளால் வரங்கள்-
எலாம் பெறவே
தேன் உரைக்கும் உளம் இனிக்க எழுகின்றேன் நீவிர்
தெரிந்து அடைந்து என் உடன் எழுமின் சித்தி
எலாம் பெறலாகும்
ஏன் உரைத்தேன் இரக்கத்தால் எடுத்து உரைத்தேன்
கண்டீர்
யான் அடையும் சுகத்தினை நீர் தான் அடைதல்
குறித்தே.

அன்பே சிவம்.

உ

1. எந்தை நினை வாழ்த்தாத பேயர்வாய் கூழுக்கும்
ஏக்கற்றிருக்கும் வேறுவாய்
எங்கள் பெருமான் உனை வணங்காத மூடர்தலை
இகழ் விறகு எடுக்கும் தலை
கந்தமிகு நின் மேனி காணாத கயவர் கண்
கலநீர் சொரிந்த அழுகண்
கடவுள் நின் புகழ்தனைக் கேளாத வீணர் செவி
கைத்திழவு கேட்கும் செவி
பந்தம் அறநினை யெணாப் பாவிகள் தம் நெஞ்சம்
பகீரென நடுங்கும் நெஞ்சம்
பரமநின் திருமுன்னர் குவியாத வஞ்சர்கை
பலியேற்க நீள் கொடுங்கை
கந்தமிகு சென்னையிற் கந்த கோட்டத்துள் வளர்
தலமோங்கு கந்தவேளே
தண்முகத்துய்யமணி உண்முகச்சைவமணி
சண்முகத் தெய்வமணியே.

2. ஐயநின்சீர் பேசும் செல்வர்வாய் நல்லதெள்
அமுதுண்டு உவந்த திருவாய்
அப்பநின்திருவடி வணங்கினோர் தலைமுடி
அணிந்து ஓங்கி வாழுந்தலை
மெய்ய நின் திருமேனி கண்ட புண்ணியர் கண்கள்
மிக்க ஒளிமேவு கண்கள்
வேல நின்புகழ் கேட்ட வித்தகர் திருச்செவி
விழாச் சுபம் கேட்கும் செவி
துய்யநின்பதம் எண்ணும் மேலோர்கள் நெஞ்சம்
மெய்ச்சுக ரூபமான நெஞ்சம்
தோன்றல் உன் திருமுன் குவிந்த பெரியோர்கைகள்
சுவர்னம் இடுகின்ற கைகள்
சையமுயர் சென்னையில் கந்தகோட்டத்துள்வளர்
தலமோங்கு கந்தவேளே
தண்முகத் துய்யமணி உண் முகச்சைவமணி
சண்முகத் தெய்வ மணியே

3. வான் கலந்து மாணிக்க வாசக நின் வாசகத்தை
நான் கலத்து பாடுங்கால் நற் கருப்பஞ் சாற்றினிலே
தேன் கலநது பால் கலந்து செழுங்கனித் தீஞ்சுவை
கலந்தென்
ஊன் கலந்து உயிர்கலந்து உவட்டாமல் இனிப்பதுவே

4. வாட்டமிலா மாணிக்க வாசகனின் வாசகத்தை
கேட்டபொழுது அங்கிருந்த கீழ்பறவைச் சாதிகளும்
வேட்டம் உறும் பொல்லா விலங்குகளும் மெய்ஞ்ஞான
நாட்டம் உறும் என்னில் இங்கு நான் அடைதல் வியப்பு
அன்றே

1. அகரஉயிர்போல் அறிவாகி எங்கும்
நிகர் இல்இறை நிற்கும் நிறைந்து

2. பெண், ஆண் அலி என்னும் பேர் ஒன்று இலதாகி
விண் ஆகி நிற்கும் வியப்பு

3. தருமம் பொருள் காமம் வீடு என்னும் நான்கும்
உருவத்தால் ஆயபயன்

4. ஒழுக்கம் விழுப்பம் தரலால் ஒழுக்கம்
உயிரினும் ஓம்பப் படும்.

5. வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை மற்று அது
வேண்டாமை வேண்டவரும்.

6, பிறப்பு என்னும் பேதைமை நீங்கச் சிறப்பு என்னும்
செம்பொருள் காண்பது அறிவு.

7, பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவன் அடி சேராதார்.

8. கோள் இல் பொறியிற் குணமிலவே எண்குணத்தான்
தாளை வணங்காத் தலை.

கல்வியே கற்புடைப் பெண்டீர் அப் பெண்டிர்க்குச்
செல்வப்புதல்வனே ஈர்ங்கவியாம் — சொல்வன்மை
மல்லல் வெறுக்கையாம் மாண் அவை மண்ணுறுத்தும்
செல்வமும் உண்டு சிலர்க்கு.

இம்மை பயக்குமால் ஈய்க்குறைவின்றால்
தம்மை விளக்குமால் தாம் உணராக் —கேடின்றால்
எம்மை உலகத்தும் யாம் கண்டிலேம் கல்விபோல்
மம்மர் அறுக்கும் மருந்து.

௨

## அத்தியாத்ம சாஸ்திரம்·

கபிலர், பதஞ்சலி வியாசர் முதலிய முனிவர்களால் கிரமமாகச் சொல்லப்பட்ட 1. சாங்கியம், 2. பாதஞ்சலம், 3. வேதாந்தம் என ஆத்மஞான பலன்கள் உள்ள மோக்ஷப் பிரதிபாதக அத்தயாத்ம சாஸ்திரம் மூன்றும். அவைகள் பாஷிய வியாக்கியானுதிகளோடு கூடிய சாங்கிய சூத்திரம் பாதஞ்சல சூத்திரம் பிரஹ்ம சூத்திரம் என்பனவாம் அவற்றுள்,

1. சாங்கியம்— நித்திய நிர்மலமான ஆத்ம சன்னிதானத்தில் குணத்திரய வடிவமான பிரகிருதியே மகதத்துவாதி இருபத்திஐந்து தத்துவ சொருப ஜகத்தாம் என்று விவகரிப்பதே சம்சாரபந்தம் என்றும் சத்துவாதி குணத்திரயக் கிரமத்தால் சிலேட்டுமப் பிரகிருதி, பித்தப் பிரகிருதி, வாதப் பிரகிருதியில் உள்ள சாந்த குரோத மூடாதி குணங்களோடு கூடிய உத்தம, மத்திம, அதம புருஷத்திரயம் வர்ணக்கிரமம் முதலானவைகள் உண்டாம் என்று சொல்வதாம்.

2. பாதஞ்சலம்:— இயம நியமாதி அஷ்டாங்கயோகத்தால் மனோ நிச்சலம் உண்டாய் மோக்ஷ சித்தியாம் என்று சொல்வது.

3. உத்தரமீமாஞ்சை:— சகல உபநிடத அர்த்தங்களையும் சொல்லும் வேதாந்தமாம் அது பிரபஞ்சத்துக்கு மித்தியாத்துவம் சாதித்தலால் பிரஹ்மாத்தும ஐக்கிய ஞானத்தை வர்ணிப்பதாய் ஞானிகளால் அங்கீகரிக்கப்பட்டதாய் உள்ளது; அவை அத்தியாத்துமமதம். பாஸ்கரீயம், மாயாவாதம், சுத்தப் பிரஹ்ம வாதம், கிரீடாப் பிரஹ்ம வாதமென நான்கு பேதமாம் இவற்றின்கண் அநுகதமாய் இவற்றிற்கு மேலாயுள்ளது அநிர்வசநீயக்கியாதியேயாம்.

அநிர்வச நீயக்கியாதி என்பது கயிற்றரவு சத்தென்ருவது அசத்தென்ருவது சொல்லத் தகாதது அதுபோல அவித்தையும் அதன் காரியமான பிரபஞ்சமும் சத்தென்ருவது அசத்தென்ருவது உறுதியாய்ச் சொல்லத் தகாததென்று அறிந்து சொல்லுதல் இதன் விரிவை விருத்திப் பிரபாகரம் விசாரசாகரம், விசாரசந்திரோதயம் முதலியநூல்களிற் கண்டு கொள்க இம் மூன்றின்சாரமே இந் நூலாம்.





உ

சிவமயம்,

ஓம் கணேசாய நம:

ஓம் குமாராய நம:

ஓம் காசிவிஸ்வேஸ்வராய நம:

ஓம் நீலகண்டஞான தேசிக ஸ்ரீ சற்குருப்யோ நம:



# வேதாந்த சாராமிருத

# சிவஞானச் செம்பொருள்

## தோற்றுவாய்.

நான் யார் என்ற விசாரமாவது. யாது? ஆத்மா அனுத்மாக்களை வேறு பிரித்து அறிவதேயாம். அந்த விசாரம் எதனுல் உண்டாம் எனின், 1. ஈசுரன், 2. வேதம், 3. குரு, 4. அந்தக்காரணம் என்னும் இந்நான்கினது கிருபையால் உண்டாகும்.

1. சற்குரு முதலிய ஞான சாதனங்களின் பிராப்தியே ஈசுர கிருபையாம்.

2. சாஸ்திர அர்த்தங்களின் தாரண சக்தியே வேதத்தின் கிருபையாம்.

3. சாஸ்திர அனுசாரமாகவும் தனது அனுபவஅனுசாரமாகவும் உண்மையை உபதேசம் செய்தலே குரு கிருபையாம்.

4. சாஸ்திர அனுசாரமாகவும் குருவாக்கிய அனுசாரமாகவும் சாதனங்களைச் சம்பாதித்தலே அந்தத்கரணத்தின் கிருபையாம் இந்நான்கின் கிருபையால் உண்டாம் பயன்ஆவது;

## விசாரம்.

அநாதி சுத்தப்பிரஹ்மத்தில் அநாதி கற்பிதமாகிய பிரகிருதி என்று ஒரு சக்தி உண்டு.

அந்தப் பிரகிருதிக்குப் பிரஹ்மத்தோடு அநாதி கற்பிதபேத வாஸ்தவ அபேதமாகிய சம்பந்தம் உண்டு.

## பிரகிருதியின் நாமங்கள்.

அந்தப் பிரகிருதி மாயை, அவித்தை தமப்பிரதானப் பிரகிருதி எனப் பிரிவை அடைகின்றது.

சத்துவகுணப் பிரதானம், மாயை, இரஜோகுணப்பிரதானம் அவித்தை தமசைப்பிரதானமாக உள்ளது தமப்பிரதானப் பிர

கிருதி, மாயை, அவித்தை, விகிருதி சக்தி சத்யை மூலே, தூலே, யோனி அவ்வியத்தம், அவ்வியாகிருதம் அஜை, அஞ்ஞானம், தமசு, துச்சை, அநிர்வசநீயம், என்றும் அவற்றின் நாமங்களாம்.

## அநாதி பாவபதார்த்தங்கள் ஆறு

அவை, உற்பத்தி இல்லாத பொருள்கள், சொருபமாய் அநாதியாம். அப்படிப்பட்டவை 1. சுத்தப்பிரஹ்மம், 2. பிரகிருதி, 3. அவற்றின் சம்பந்தம், 4. ஈசுரன், 5. ஜீவன், 6. அவற்றின் பேதம் என்னும் இவைஆறும் அநாதிபாவ பதார்த்தம் என்பர்.

மித்தியாத்துவ நிச்சயத்திற்குப் பாதம் என்று பெயர் ஆம் அது சாஸ்திர சம்பந்தம், யுக்தி சம்பந்தம் அபரோக்ஷம் என்னும் பேதத்தால் மூவகைப்படும்.

## ஆத்மா அநாத்மாக்களின் இலக்கணங்களை எடுத்து விசாரம் செய்வாம்.

பந்தத்துருவம் கேட்டு உணரில் பரவீட்டுருவம் மேல் வெளியாம் ஆதலின் அநாத்மாக்களின் இலக்கணங்களை நன்கு விசாரிப்பதால் ஆத்மாவின் இலக்கணம் உள்ளவாறு விளங்கும் ஆதலின் அதனை நன்கு ஊன்றி விசாரம் செய்வாம் மேலும் ஒப்பு இன்றிய தமிழ் மறையும்.

பிறப்பு என்னும் பேதைமை நீங்கச் சிறப்பு என்னும் செம் பொருள் காண்பது அறிவு எனக்கூறும்.

ஆதலின் அநாத்மாவாகிய சடங்கள் ஆத்மாவை மறைத்துத் தாமே ஆத்மாவாகத் தோற்றுவதற்கான பிராந்திகளும் அத்தியாசங்களும் பிரமாணகத சம்சயம் பிரமேயகத சம்சயம் முதலியவற்றை விசாரித்துமேல் மகாவாக்கிய விசாரம் செய்வாம்.

## ஐவகைப் பிராந்திபேதமாவது.

1. பேதப்பிராந்தி, 2. கர்த்திருத்துவ போக்திருத்துவப் பிராந்தி, 3. சங்கப்பிராந்தி, 4. விகாரப்பிராந்தி, 5. சத்தியத்துவப் பிராந்தியாம்.

1. ஜீவேஸ்வரர்பேதம், 2. ஜீவர்களின் பரஸ்பர பேதம், 3, ஜடங்களின் பரஸ்பரபேதம், 4. ஜீவஜடபேதம் 5. ஈசுரஜடபேதம் என ஐவகைப்பேதப் பிராந்தியாம்.

2. அந்தக் கரணத்தின் தர்மமாகிய கருத்திருத்துவ போக்திருத்துவங்கள் ஆத்மாவின் கண்ணே தோற்றுதல் கருத்திருத்துவ போக்திருத்துவப்பிராந்தியாம்.

3. ஆத்மாவிற்குத் தேகாதிகளில் அகந்தையும் கிரகாதிகளில் மமதையும் ஆகிய சம்பந்தமாவது அல்லது சஜாதீய விஜாதீயசுவகத வஸ்துக்களோடுள்ள சம்பந்தமே சங்கப்பிராந்தியாம்.

4. பாலின்விகாரம் தயிர் ஆதல்போலப் பிரஹ்மத்தின் விகாரமே இச்ஜீவனும் ஜகத்துமாம் என்ற தோற்றமே விகாரப்பிராந்தியாம்.

5. காரணத்திற்கு வேறுன ஜகத்துச் சத்தியம் என்பதே சத்தியத்துவப் பிராந்தியாம்.

## ஐவகைப்பிராந்திகளும் நீக்குதற்குள்ள உபாயங்கள்.

1. பிம்பப்பிரதிபிம்ப தரிசனத்தால் பேதப்பிராந்தி நீங்கும்.

2. படிகத்தில் தோன்றும் செந்நிற திருஷ்டாந்தத்தால் கருத்துருத்துவ போக்திருத்துவய் பிராந்தி நீங்கும்.

3. கடாகாய மடாகாய திருஷ்டாந்தத்தால் சங்கப் பிராந்தி நீங்கும்.

4. இரச்சு சர்ப்ப திருஷ்டாந்தத்தால் விகாரப் பிராந்தி நீங்கும்.

5. கனககுண்டல திருஷ்டாந்தத்தால் சத்தியத்துவப் பிராந்தி நீங்கும்.

## பேதப்பிராந்தியின் நீக்கமாவது·

1. கண்ணுடியில் தோற்றும் முகத்தின் பிரதிபிம்பம் அக் கண்ணுடியில் இல்லே- ஆனுல் கண்ணுடியில் பார்க்கும் பொருட்டு வெளிப்பட்ட நேத்திர விருத்தி அந்தக் கண் ணுடியைத் தீண்டி மறுபடியும் திரும்பி முகத்தையே பார்க் கின்றது. ஆகையால் பிம்பவடிவ முகத்தோடு பிரதிபிம்பம் அபின்னமாம் அதனுல் பிரதி பிம்பம்மித்தை அன்று சத்திய மேயாம்.

பிரதிபிம்பத்தின் தர்மம் ஆகிய பிம்பத்தினும் வேரும் தன்மையும் கண்ணுடியில் இருக்கும் தன்மையும் பிம்பத் தினும் எதிர்முகமாம் தன்மையும் ஆகிய இந்த மூன்றும் அவற்றினது தோற்றமும் ஆகிய ஞானமும் பிராந்தியாம் ஆகையால் இந்தத்தர்மங்களின் மித்தியாத் துவ நிச்சய பாதத்தைச் செய்வதால் பிம்பப்பிரதி பிம்பங் களுக்கு என்றும் அபேத நிச்சயம் உண்டாகின்றது,

சித்தாந்தம் அதுபோலச் சுத்தப்பிரஹ்மம்பிம்பம் ஆம் ஜீவனுகிய அதன் பிரதிபிம்பம் அஞ்ஞானமாகிய கண்ணுடி யில் தோன்றுகின்றது அவற்றுள் சொப்பனத்தைப்போல ஒரு ஜீவன் முக்கியமாம் மற்றவை தாவர சங்கமம் ஆகியவை ஜீவ ஆபாசங்களாம் அந்தச்ஜீவனுகிய பிரதிபிம் பம் ஈசுரன் ஆகிய பிம்பத்தோடு எப்போதும் அபின்னமாம்,

ஆனால் மாயையின் வலியால் ஆம் அந்தச் ஜீவனது தர்மம் ஆகிய பிம்பம் ஆம் ஈசுரனிலும் வேரும் தன்மை ஜீவத்துவம் அற்பஞ்ஞத்துவம் அற்ப சத்தித்துவம் பரிச்சின்னத்துவம், நானாத்துவம் முதலியனவும் அவற்றின் தோற்றமும் ஆகிய ஞானமும் பிராந்தியாம், ஆகையால் அவற்றின் மித்தியாத்துவ நிச்சயம் ஆகிய பாதத்தைச் செய்வதால் ஜீவனாகிய பிரதிபிம்பத்திற்கும் ஈசுரன் ஆகிய பிம்பத்திற்கும் என்றும் அபேதமாகிய நிச்சயம் உண்டாகின்றது. இவ்வாறு பிம்பப் பிரதிபிம்ப திருஷ்டாந்தத்தால் பேதப்பிராந்தி நிவிருத்தியாகின்றது.

2. கர்த்திருத்வ போக்திருத்துவப் பிராந்தியின் நீக்கம் ஆவது,

சிவப்பு வஸ்திரத்தின் மீது வைத்தபடிக மணியில் வஸ்திரத்தின் செந்நிறம் சையோக சம்பந்தத்தால் தோற்றுகின்றது. ஆனால் வஸ்திரத்தின் தர்மம் ஆம். வஸ்திரமும், படிகமும் பிரிந்த காலத்து அதுபடிகத்தில் தோற்றுவதில்லை.

ஆனால் அது படிகத்தின் தர்மம் அன்று. ஆனால் படிகத்தில் பிராந்தியினால் தோற்றுகின்றது.

சித்தாந்தம் அதுபோல அந்தக்கரண தர்மமாகிய கர்த்திருத்துவ போக்த் திருத்துவங்கள் தாதாத்மிய சம்பந்தத்தால் தோற்றுகின்றன.

ஆனால் அவைகள் அந்தக்கரணத்தின் தர்மம் ஆம். சுழுத்தியில் அந்தக்கரணமும் ஆத்மாவும் பிரிந்த காலத்து அவை ஆத்மாவினிடத்தில் தோற்றுவதில்லை. ஆதலால் அது ஆத்மாவின் தர்மம் அன்று.

ஆனால் ஆத்மாவில் பிராந்தியினால் தோற்றுகின்றன. இவ்வாறு படிகத்தில் செந்நிறம் தோற்றும் திருஷ்டாந்தத்

தால் கருதிருத்துவ போக் திருத்துவப் பிராந்தி நிவிருத்தி யாகின்றது.

### சங்கப்பிராந்தியின் நீக்கமாவது.

கட உபாதியை உடைய ஆகாயம் கடாகாயம் என்பர். அந்த ஆகாயம் கடத்தோடு தோற்றிய போதினும்கடத்தின் தர்மமாகிய உற்பத்தி நாசம் போதல் வருதல் முதலியன ஆகாயத்தைப் பரிசிக்கின்றதில்லை. ஆகையால் ஆகாயம் அசங்கமாம்.

ஆகாயத்திற்குக் கடத்தோடு சம்பந்தம் தோற்றுதல் பிராந்தியாம்.

சித்தாந்தம் அதுபோல தேக முதலிய சங்காதமாகிய உபாதியை உடைய ஆத்மா ஜீவன் எனப்படும்.

அந்த ஆத்மா சங்காதத்தோடு கூடியதாகத் தோற்றிய போதிலும் சங்காதத்தின் தர்மமாகிய ஜனன மரணாதிகள் ஆத்மாவைப் பரிசிக்க மாட்டாவாம். ஏன் எனின்!

சங்காதம் = திருசியம். ஆத்மா = திருஷ்டா

ஆனால் ஆத்மா சங்காதத்தினும் வேருகிய அசங்கமாம் ஆத்மா சங்காத ரூபம் அல்லாதது.

ஆகையால் ஆத்மாவிற்குச் சங்காதத்தோடு அகந்தை யும் இல்லை. ஆத்மா சங்காதமாகாமல் அந்தச் சங்காதமும் பஞ்ச பூதத்தினதா இருத்தலால் ஆத்மாவிற்கு மமதை முதலிய சம்பந்தமும் இல்லை.

ஆத்மா சங்காதத்திற்கு வேரு இருத்தலால் ஆத்மா விற்குச் சங்காதத்தின் சம்பந்திகளாகிய மனை, மக்கள் முதலியவற்றுள்ள மமதையாகிய சம்பந்தமும் இல்லை. இவ் வாற்ருல் ஆத்மா அஜங்கமேயாம், இந்த ஆத்மாவிற்கு சங் காதத்தோடுள்ள அகந்தை மமதை ஆகிய சம்பந்தம் பிராந்தியேயாம்.

இவ்வாறு கடாகாய திருஷ்டாந்தத்தால் சங்கப் பிராந்திநிவிருத்தியாம்.

4. விகாரப் பிராந்தியின் நீக்கமாவது மந்த அந்த காரத்தில் கயிறு கிடப்பதைப்பார்க்கும் பொருட்டுநேத்திரத் துவாரத்தால் அந்தக்கரண விருத்தி வெளிப்போந்து அந்த ஆகாரத்தை அடைகின்றது. அந்த விருத்தி இருள் முதலிய தோஷத்தால் கயிற்றின் ஆகாரத்தை அடைகிறது இல்லை. ஆகையால் அந்த விருத்தியால் கயிற்றின் ஆவரணம் பங்க மாவதில்லை அப்போது கயிற்றினை உபாதியாகவுள்ள சைதன் யத்தை ஆசிரயத்திருந்த தூலாவித்தை கலக்கத்தை அடைந்து சர்ப்ப ரூப ஆகாரத்தை அடைகின்றது.

அந்தச் சர்ப்பம் பாலின் பரிணமமே தயிர் ஆனது போல அவித்தையின் பரிணமமும் கயிற்றினை உபாதியாக உடைய சைதன்யத்தின் விவர்த்தமும் ஆம். பரிணமம் அன்று.

சித்தாந்தம் அதுபோலப் பிரஹம சைதன்யத்தின் ஆசிரயமாய்இருக்கும்மூலாவித்தை பிராரப்த முதலிய நிமித் தத்தால் கலக்கத்தை அடைந்து ஜட சேதன வடிவப்பிரபஞ் சத்தோடு விகாரத்தை அடைகின்றது. அந்தப் பிரபஞ்சம் அவித்தையின் பரிணமமும் அதிஷ்டானப் பிரஹ்ம சைதன் யத்தின் விவர்த்தமும் ஆம். பரிணமம் அன்று.

இவ்வாறு இரச்சு சர்ப்ப திருஷ்டாந்தத்தால் விகாரப் பிராந்தி நிவிருத்தியாம்.

5. சத்தியத் தன்மைப் பிராந்தியின் நீக்கமாவது கனகத் திற்கும் குண்டலத்திற்கும் காரிய காரணத் தன்மையால் தோற்றும் பேதம் கற்பிதமாம். கனகத்திற்கு வேருகக் குண் டலத்தின் சொரூபம் காணப்படாமையால் வாஸ்தவ அபே தம் உள்ளது.

ஆனால் க க ன த் தி ற் கு வேருகக் குண்டலத்திற்குச் சத்தை இல்லை.

சித்தாந்தம்—அதுபோலப் பிரஹ்மத்திற்கும் ஜகத்திற் கும் காரண காரியத்தன்மையினாலும், விசேஷத்தினாலும் பேதம் கற்பிதமாம். விசாரித்து பா ர் க் கு ம் இ ட த் து சச்சிதானந்தத்திற்கு வேருக நாம ரூபமாகிய ஜகத்து சத் தியமாகத் தோற்றுவதில்லை.

ஆனால் மித்தையாகத் தோற்றுகின்றது. எந்த வஸ்து எதில் கற்பிதம் ஆமோ அந்த வஸ்து அதனினும் வேருகத் தோற்றும். ஆனால் ஜகத்திற்குப் பிரஹ்மத்தினும் வேருகச் சத்தை இல்லையாம்.

இவ்வாறு கனக குண்டல திருஷ்டாந்தத்தால் பிரஹ் மத்திற்குப் பின்னமாகிய ஜகத்தின் சத்தியத்துவப் பிராந்தி நிவிருத்தியாம்.

## பிராந்தியாவது யாது? அத்தியாசம்.

அத்தியாசம் என்பது மயக்க ஞானத்திற்கு விஷய மாகிய மித்யாவஸ்துவிற்கும் பிராந்திஞானத்திற்குஉள்ளது. அத்தியாசமாம்.

அந்த அத்தியாசம் எ த் த னை வகைப்படும்? ஞான அத்தியாசம், அர்த்த அத்தியாசம் என இருவகையாம்.

அந்த அத்தியாசமாவது (1) கேவல சம்பந்த அத்தி யாசம், (2) சம்பந்தசகித சம்பந்தி அத்தியாசம், (3) கேவல தர்ம அத்தியாசம், (4) தர்ம சகித தர்மியின் அத்தியாசம், (5) அந்நியோந்யா அத்தியாசம், (6) அந்நிய தர அத்தியா சம் என்னும் பேதத்தால் ஆறு விதமாம்.

அல்லது சொரூப அத்தியாசம் சம்சர்க்காத் தியாசம் என்னும் பேதத்தால் அர்த்த அத்தியாசம் இரண்டு வகைப் படும். முன் சொல்லப்பட்ட ஆறு பே த ங் க ளு ம் இதில் அடங்கும்.

மேலே காட்டிய ஐவகைப் பிராந்திகளும், இதனுள் அடங்கும்.

## அத்தியாசங்களின் இலக்கணம்.

1. வெள்ளியில் கிளிஞ்சலின் தாதாத்மிய சம்பந்தத்தின் அத்தியாசம் உண்டாவது போல அநாத்மாவில் ஆத்மாவின் தாதாத்துய சம்பந்த அத்தியாசம் உண்டாகின்றது. அநாத் மாவில் ஆத்மாவின் தாதாத்மிய சம்பந்தம் அத்தியஸ்தமா கின்றது. ஆத்மாவின் சொரூபம் அத்தியஸ்தமாகின்றதில்லை ஆகையால் அநாத்மாவில் ஆத்மாவின் கேவல சம்பந்த அத்தியாசம் உண்டாகின்றது.

சுத்தியில் வெள்ளியின் சம்பந்தமும் அதன்சொருபமும் ஆகிய இரண்டும் அத்தியஸ்தமாவது போல ஆத்மாவில் அநாத்மாவின் சம்பந்தமும் சொருபமும் ஆகிய இரண்டும் அத்தியஸ்தமாகின்றன. ஆகையபல் ஆத்மாவில் அநாத் மாவின் சம்பந்தயின் அத்தியாசம் உண்டாகின்றது. ஸ்படி கத்தில் சிவப்பு, கருப்பு முதலிய தர்ம மாத்திரம். சிவப்புப் படிகம் முதலியனவாகஅத்தியஸ்தம் ஆகின்றது போல யான் வெள்ளையன், குருடன், செவிடன் முதலியவாகத் ஸ்தூல தேகத்தின் வெண்மை முதலியனவும் இந்திரியங்களின் பார்வை முதலியனவும் ஆகிய தர்மங்கள் மாத்திரம் ஆத்மா வில் அத்தியஸ்தமாகின்றது. அவற்றின் சொரூபம் அத்தி யஸ்தமாகின்றதில்லை. ஆகையால் ஆத்மாவில் தேகேந்திரி யாதிகளின் கேவலதர்மத்தின் அத்தியாசம் உண்டாகின்றது

சுத்தியில் வெள்ளித்தன்மை தர்மமும் அவ்வெள்ளியின் சொரூபமும் இரண்டும் அத்தியாசம். ஆவது போல அந்தக் கரணத்தின் கர்த்திருத்துவாதி தர்மங்களும் அவ்வந்தக்கர ணத்தின் சொரூபமும் ஆகிய இரண்டும் ஆத்மாவில் அத்தி யஸ்தமாகின்றன ஆகையால்,

ஆத்மாவில் அந்தக்கரணத்தின் தர்ம சகித தர்மியின் அத்தியாசமும் உண்டாகின்றன. இரும்பும் அக்கினியும் போல ஆத்மாவில் அநாத்மாவின் அத்தியாசமும் அநாத்மா வில் ஆத்மாவின் அத்தியாசமும் இருத்தலே அந்நியோந் நியாத்தியாசமாம்.

அநாத்மாவில் ஆத்மாவின் சொரூபம் அத்தியஸ்தம் ஆகாது ஆனால் ஆத்மாவில் அநாத்மாவின் சொரூபம் அத் தியஸ்தமாம் இதுவே அந்நியதரா அத்தியாசமாம்.

ஞானத்தினால் பாதமாகத் தக்க வஸ்து அதிஷ்டானத் தில் சொரூபமாக அத்தியஸ்தம்ஆகின்றது. தேகாதி அநாத் மாவிற்கு அதிஷ்டான ஞானத்தால் பாதம் உண்டாகின்ற மையால் ஆத்மாவில் அதன் சொரூப அத்தியாசம் உண்டா கின்றது.

பாதிக்கத் தகாத வஸ்துவின் சொரூபம் அத்தியஸ்தம் ஆகாது. ஆனால் அதன் சம்பந்தம் அத்தியஸ்தம் ஆகும். ஆகையால் அநாத்மாவில் ஆத்மாவின் சம்சர்க்காத்தியாசம் உண்டாகின்றது இதனையே சம்பந்த அத்தியாசம் என்றும் சொல்லுவர்,

கேவல தர்ம அத்தியாசம், தர்ம சகித தர்மியின் அத்தி யாசம், அந்நியதரா அ த் தி ய ா ச ம் என்னும் இம்மூன்றும் சொரூப அத்தியாசத்துள் அடங்கும்.

கேவல சம்பந்த அத்தியாசம் சம்சர்க்க அத்தியாசமே ஆகும். சம்பந்த சகித சம்பந்தியின் அத்தியாசம் சம்சர்க்க சகிதஅத்தியாசம். சொரூபஅத்தியாசமாம். அந்நியோந்நிய

அத்தியாசத்தில் சம்சர்க்க அத்தியாசமும் சொருப அத்தியா சமும் என்னும் இரண்டும் உண்டு ஏன் எனின்!

ஆத்மாவின் சொருபம் சத்தியம் ஆகலின் அஃது அத் தியஸ்தம் ஆகாது. ஆனுல் அதன் சம்சர்க்கம் எனப்படும். தாதாத்மிய சம்பந்தம் அநாத்மாவில் அத்தியஸ்தமாம் ஆதலால் அதன் சம்சர்க்கத்தியாசம் உண்டாகின்றது. ஆனதால் அதன் சொருப அத்தியாசமும் உண்டாகின்றது.

அதனுல் அந்நியோந்நியா அத்தியாசம் இவ்விரண்டி லும் அடங்கும் சங்கப்பிராந்தி சம்சர்க்க அத்தியாசத்திலும் மற்றைய நால்வகைப் பிராந்தியும் சொருப அத்தியாசத்தி லும் அடங்கும்.

அகங்காராதி அநாத்மாக்களேயும் ஆத்மாவையும் அறி வதில் விசேஷ உபயோகம் உள்ள அத்தியாசம் எதுவோ அதனே இங்கு எடுததுக் கூறுவாம். அந்நியோந்நிய அத்தி யாசமாம்.

## அந்நியோந்நிய அத்தியாசம் என்பது யாது எனின்?

பரஸ்பரத்தில் பரஸ்பரத்தின் (ஒன்றில் மற்று ஒன்றின்) அத்தியாசத்திந்கு அந்நியோந்நியா அத்தியாசம் என்று பெயர் ஆம்.

ஆத்மா அநாத்மாக்களுக்கு ஒன்றற்கு ஒன்று எப்படி அத்தியாசம் உண்டாகின்றது எனின்.

சத்து, சித்து, ஆனந்தம், அத்வைதம் என்னும் இவை நான்கு விசேஷணங்களும் ஆத்மாவினுடையனவாம். அசத்து, சடம். துக்கம், துவைதம் என்னும் இவை நான்கு விசேஷணங்களும் அநாத்மாவினுடையனவாம். அவற்றுள்

அநாத்மாவினது துக்கம், துவைதம் என்னும் இரண்டு விசேஷணங்களும் ஆத்மாவிலுள்ள ஆனந்தம் அத்வைதம் என்னும் இரண்டு விசேஷணங்களையும் மறைக்கின்றன. ஆகலின் அத்வைதமாயும் ஆனந்த ரூபனுயும் இருக்கிறேன் என்னும் ஞானம் உண்டாகாமல் நான் துக்கி ஈசுராதிகளி னும் வேறு என்னும் ஞானம் உண்டாகின்றது.

ஆத்மாவினது சத்து, சித்து என்னும் இரண்டு விசே ஷணங்களும் அநாத்மாவிலுள்ள அசத்து, சடம் என்னும் இரண்டு விசேஷணங்களையும் மறைக்கின்றன அதனுல் அநாத்மாவாகிய அகங்காராதிகளில் அசத்தாயும், சடமாயும் உள்ளது என்னும் ஞானம் உண்டாகாமல் இருக் கிறது விளங்குகிறது என்னும் ஞானம் உண்டாகின்றது.

இவ்வாறு ஆத்மா அநாத்மாக்களுக்கு பரஸ்பரம் அத் தியாசம் தோற்றுகின்றது.

சகல அநாத்மாகார விருத்திகளும் ஒடுங்கிய பிரஹ்மா கார விருத்தியின் உண்டாம். பிரத்தியயத்தினையே சாக்ஷாத் காரம் என்பர். அதனையே (நான் பிரஹமம் என்னும்) ஞான மாம் என்பர்.

தத்துவ விசாரம் செய்து சகல சந்தேகமும் போய்
அத்துவிதம் தான் ஆதல் அபரோக்ஷ ஞானமாகும்.

எனக் கைவல்லிய நவநீதம் கூறும் அதனை அநாத்மா வின் கண்உள்ள சந்தேகம் விசாரிப்பதில் ஒரு பயனும் இன்ரும். ஆகலின் ஆத்மாவின் கண் உள்ள சம்சயம் எதுவோ அதனை இங்கு முமுட்சுக்களுக்குப் பயன் உண் டாம் வண்ணம் அதனைச் செவ்வையாக விசாரம் செய்வாம் அவை.

1. பிரமாண கத சம்சயம்
2. பிரமேய கத சம்சயம்

என்னும் பேதத்தால் இருவகைப்படும்.

அதாவது உபநிஷத்வடிவ வேதாந்த வாக்கியங்கள் பேதத்தைப் பிரதிபாதிப்பதா அல்லது அபேதத்தைப் பிரதி பாதிப்பதா. அல்லது வேறு பொருளைச்சொல்வதா என்னும் ஆகாரம் உடையதாய் ஆறுவிதலிங்கயுக்திகளால் வேதாந்த தாத்பரிய நிச்சயம் செய்வதன் முன்னர் உண்டாம். சம்சயத் தினையே பிரமாண கத சம்சயம் என்பர்.

வேதாந்தமாகியபிரமாணத்தினுல் அறியத்தக்க மோக்ஷ முதலிய பதார்த்தக்களைப் பிரமேயம் என்பர். அவற் றின் சொருபத்தில் எச் சம்சயம் உளதாமோ அதனையே பிர மேய கத சம்சயம் என்பர்.

அந்தப்பிரமேய கத சம்சயம் விஷயபேதத்தால் அநேக வகைப்படும்.

## இனி அதன் இலக்கணம்.

அதாவது சர்வ அனர்த்த நிவிருத்தியும் ஆனந்தத்தின் பிராப்தியுமே மோக்ஷமா அல்லது மூவகைத் துக்கத்தின் நீக்கமா, அல்லது இருபத்தொரு துக்கங்களின் நீக்கமா, அல்லது பஞ்சக்கிலேசங்களின் நீக்கமா, அல்லது சுவர்க்கம், வைகுண்டம் முதலிய விஷய சுகத்தின் லாபமே மோக்ஷமா இவ்வாறு மோக்ஷத்தின் சொருபத்தில் உண்டாவது பல வடிவப் பிரமேய கத சம்சயம் என்பர்.

அனர்த்த நிவித்ருதியும் ஆனந்தப் பிராப்தியுமே மோக்ஷமாம் எனக்கொள்ளின் அந்த மோக்ஷத்திற்குரிய சாதனங்கள் கர்மமா அல்லது உபாஸனையா, அல்லது கர்ம உபாஸனைகளோடு கூடிய ஞானமா, அல்லது கேவல ஞானமே எனின் அது பேத ஞானமா, அல்லது அபேத

ஞானமா என்றல் முதலிய சம்சயங்கள் இவையாவும் சாதன வடிவப்பிரமேய கத சம்சயங்கள் என்பர்.

மோக்ஷ சாதனம் அபேத ஞானமே எனக்கொள்ளின் அந்த அபரோக்ஷ ஞானத்தின் முக்கிய சாக்ஷாத் அந்தரங்க சாதனம் கர்ம உ பா ஸ னை யா அல்லது விவேக முதலிய நான்கா அல்லது சிரவணாதி மூன்று அல்லது ப தா ர் த் த சோதனமா அல்லது மகா வாக்கிய உபதேசமா ஞானத்தின் பகிரங்க சாதனம் சிரவணாதிகளா அல்லது விவேக முதலிய நான்கா அல்லது கர்மமா என்னும் இவை முதலிய சம்சயங்கள் ஞான சாதனத்தில் உண்டாகின்றன இவை யாவும் சாதன வடிவப் பிரமேய கத சம்சயம் என்பர்.

அபரோக்ஷ ஞானத்தின் முக்கிய அந்தரங்க சாதனம் மகாவாக்கிய உபதேசமே எனவும் விவேகாதி எட்டினையும் பரம்பரா அந்தரங்க சாதனமே எனவும் யாகாதி கர்மங்களே பகிரங்க சாதனம் எனவும் கொள்க.

அந்த ஞானத்தின் விஷயம் பேதமா, அல்லது அபேதமா அபேதமே எனின் ஆத்மாவிற்கும் பிரஹ்மத்திற்கும் அல்லது அந்தக்கரண விசிஷ்ட சேதன வடிவ ஜீவனுக்கும் விராட்டு முதலிய ஈசுரனுக்கும் அபேதமா இவை முதலியன ஞானத்தின் விஷயத்தில் உள்ளன. இவையும் பிரமேய கத சம்சயமாம். கூடஸ்த வடிவ ஆத்மாவிற்கும் பிரஹ்மத்திற்கும் அபேத ஞானமே விஷயமெனக்கொள்ளின் மு ன் கூறிய ஆத்மா தூல சரீரத்தினும் பின்னமா அல்லது அபின்னமா பின்னமே ஆயினும் அது ஜடமா அல்லது சேதனமா அல்லது ஜடசேதனம் என்னும் இரண்டு வடிவமா.

சேதனமே எனினும் அது கர்த்தா போக்தாவா அல்லது அகர்த்தா அபோக்தாவா.

அகர்த்தா அபோக்தா எனினும் அது தேகாதிகளில் அகந்தை, மமதையுள்ள ஜங்கம் உடையதா அல்லது அஜங்

கமா அசங்கமாயினும் அது அணுப் பரிணமா அல்லது மத்திம பரிமாணமா அல்லது மகத்பரிமாணமா மகத்பரிமாணமே உடையதாயினும் அதற்கு தத்பதத்தோடு பேதமிருக்கின்றதா இவை முதலிய சம்சயங்கள் துவம் பதார்த்திலுள்ளன அவையும் பிரமேய கத சம்சயமாம்.

முற்கூறிய ஆத்மா தத்பதத்தின் அர்த்தத்தோடு அபின்னம் ஆயினும் அவ்வாத்மா தத்பதவாச்சியார்த்த வடிவ ஈசுரனோடு அபின்னமா அல்லது அந்த ஈசுர பாவத்திற்கதிஷ்டானமான தத்பதத்தின் இலக்ஷியார்த்த வடிவசுத்தப் பிரஹ்மத்தோடு அபின்னமா.

இலக்ஷியார்த்தத்தோடு அபின்னமாயினும் ஜகத்திற்கு காரணம் பிரதாதிகளா அல்லது தத்பதத்தின் வாச்சியார்த்தமான ஈசுரனு.

ஈசுரனேயாயினும் அவ்வீசுரன் ஏக தேசத்திருப்பவரா பரிச்சின்னரா அல்லது வியாபகரா.

வியாபகரேயாயினும் கோலோக முதலிய இடங்களில் லீலா விக்கிரகம் கொண்டவராய் வியாபகரா, அல்லது ஏக ரச வியாபகரா.

ஏக ரச வியாபகரே ஆயினும் ஜகத்திற்கு உபாதன காரணரா அல்லது நிமித்தகாரணரா அல்லது சிலந்திப்பூச்சியினைப் போலவும் சொப்பனத்திற்கு ஏதுவான சாக்ஷியினைப் போலவும், அபின்ன நிமித்தோ பாதான காரணரா.

அபின்ன நிமித்த உபாதானகாரணரே ஆயினும் அவர் ஜீவர்களது கர்மத்தின் அபேக்ஷை இன்றியவராய்ப் படைத்தல் செய்பவரா இருத்தலின் விஷமமாகச் செய்யுந் தன்மை முதலிய தோஷத்தோடு கூடியவரா.

அல்லது கர்மத்தின் அபேக்ஷை உடையவரா இருத்தலின் படைப்பின் கர்த்தாவாகுவதலால் விஷமத்தன்மை

தயாளமின்மை வடிவ தோஷங்கள் இன்றியவரா இருக்கின்ருரா.

கர்ம அ பே பை க்ஷ வ டி வ கருத்தாவா இருத்தலின் விஷமமாகச் செய்யுந்தன்மை தோஷம் இன்றியவரா இருப்பினும் அந்த ஈசுரன் பரமார்த்தமாக மாயா சக்தி அதன் தர்மங்களாகிய சர்வஞ்ஞுத் த ன் மை ம முதலியன. கர்மமாகிய படைப்பு முதலியன என்பவற்றின் கற்பனேகளோடு கூடிய வரா அல்லது அக்கற்பனே இன்றியவரா.

அவைகள் இன்றியவரே ஆயினும் அவர் முற்கூறிய ஆத்மாவினும் பின்னரா அல்லதுஅபின்னரா.

இவை மு த லி ய வடிவினவாகிய சம்சயங்கள் தத்பதார்த்தத்தில் உள்ளன. அவையும் பிரமேயகத சம்சயமாம். எந்தத் தத் பதார்த்தத்தின் இலக்ஷியார்த்தமாகிய சுத்தப் பி ர ஹ் ம ம் துவம் பதார்த்தத்தின் இலக்ஷியார்த்தமாகிய ஆத்மாவோடுஅபின்னமாயினும் அந்தபிரஹ்மாத்மாக்களின் ஏகத்துவம் எதுவோ அது மோக்ஷ காலத்தில் உள்ளதா அல்லது எப்போதும் இயல்பாக உள்ளதா எப்பேரதும் ஏகத்துவம் உளதாயினும் சச்சிதானந்த ஐஸ்வரியம் இன்றியதா அல்லது ஐஸ்வரியத்தோடு கூடியதாயினும் கூடிய அச்சச்சிதானந்த மு த லி ய ன குண வடிவமா அல்லது பிரஹ்மாத்மாவின் சொருபமா சொருபமேயாயினும் அவற்றிற்கு ஒன்றற்கொன்று பேதம் சொல்லுவது உண்டாகிறது.

அந்தப்பேதம் வாஸ்தவமா அல்லது கற்பிதமா இவை முதலிய வடிவ சம்சயங்கள் தத்பதார்த்தத்திற்கு அபின்னமான துவம் பதார்த்தத்தில் உள்ளன. அவையும் பிரமேயகத சம்சயமாம். இ வ் வ ா ற் ரு ல் சிரவண மனனங்களால் கிரமமாக நிவிருத்திக்கத்தக்கனவாகிய பிரமாணகதபிரமேயகத சம்சயங்கள் எவையோ அவை யாவும் பிரஹ்ம சாக்ஷாத்காரமாகவே க்ஷீணமாகின்றன.

முற்கூறிய இருவகைச் சம்சயங்களும் சிரவண மனனாதிகளால் ஒழிதலின் ஞானத்தால் அவற்றின் நிவிருத்தி சம்பவியாதெனினும் சிரவண மனனங்களால் நீங்கிய சம்சயங்களுக்கு அவித்தை வடிவ காரணம் இருத்தலால் அவை மீண்டும் உற்பத்தியாகின்றன. ஞானம் உண்டாகிய பின் அவித்தை நாசமாதலால் அச்சம்சயங்கள் மீண்டும் உற்பத்தியாவதில்லை. ஆதலால் ஞானத்தினாலும் சம்சயங்களின் நிவிருத்தி கூறப்பெறுகின்றன.

இச்சம்சயங்களின் நிவிருத்தியில் அநேக நூல்களில் அநேக பிரமாணங்கள் யுக்திகள் காணப்படுகின்றன. அவைகள் சிரவண மனனங்களுக்குச்சகாயமேயாம். ஆனால் அதன் விரிவஞ்சி இங்குயாம் அதனை எழுதவில்லை. அதிகாரிகளின் உபயோகத்திற்குரியன இவண் எடுத்துக்காட்டப்பட்டனவேயாம். என்று அறிந்து கொள்ளவும்.

## பஞ்சக்கிலேசம் ஆவது.

1) அவித்தை, (2) அஸ்மிதை, (3) இராகம் 4) துவேஷம் (5) அபினிவேசம் என்பனவாம் அவற்றில்

1. அவித்தை யாவது துக்க வடிவதனாதிகளில்=சுகபுத்தியும். (2) அநாத்மாவாகிய உடம்பாதிகளில்=ஆத்மபுத்தியும், அநித்தியமாகிய ஆகாய முதலியவற்றில் நித்தியபுத்தியும் அசுசியான உடம்பாதிகளில் சுசிபுத்தியும் ஆகியஇவை நான்கும் காரியாவித்தையாம்.

2. அஸ்மிதையாவது புத்தி சாக்ஷிகளின் ஒருமை உணர்ச்சியேயாம்.

3. இராகமாவது அநுகூல பதார்த்தத்தின் ஞானத்தால் உண்டாம் புத்தி விருத்தியேயாம்.

4. துவேஷமாவது—பிரதிகூல பதார்த்தத்தின் ஞானத்தால் உண்டாம் புத்தி விருத்தியேயாம்.

5. அபினிவேஷமாவது மரண பயத்தால் உடம்பினைக் காப்பாற்றுவதிலுண்டாம் ஆக்ரஹமேயாம்.

## நான் யார் என்ற விசாரம்

## நான் யார்? பிரஹ்மம் என்பது யாது? பிரபஞ்சம் என்பது யாது? என்ற ஆராய்ச்சியேயாம்.

இதன் சாமானிய சொரூபமாவது யானும் பிரஹ்மமும் சைதன்ய வடிவமேயாம். பிரபஞ்சம் சட வடிவமாம்.

சைதன்யமாவது ஞான வடிவமாய்ச் சகல கடாதிப்பிர பஞ்சங்களையும் அறிவது எதுவோ எதனை அந்நியமாகிய மன இந்திரியாதிகள் அறிய மாட்டாவோ அதுவே சைதன்யம் என்று சொல்லுவர்.

சமஷ்டி, வியஷ்டி தூல சூக்கும காரண தேகங்கள் அவற்றின் அவஸ்தைகள் தர்மங்கள். ஆகிய இவையாவுமே பிரபஞ்ச வடிவமெனக் கூறுவர்.

## நான் பஞ்ச கோசாதீதன்.

கோசம் என்பது யாது? கத்தியின் உறைக்கும் திரவியம் மறைத்து வைக்கும் பெட்டிகளுக்கும் கோசாகாரப் புழுவின் கூட்டிற்கும் ஆம்.

அதுபோல பஞ்ச கோசங்களும் ஆத்மாவை மறைத்து இருக்கின்றன. அதனால் அன்னமய முதலிய உடம்பினையே கோசம் எனப்படுகின்றது.

## அவற்றின் இலக்கணம்

இத்தூல சரீரமே: (1) அந்நமய கோசம் ஆம். சூக்கும சரீரமே. (2) பிராணமய கோசம், (3) மனோமய கோசம், (4) விஞ்ஞான மய கோசம், காரண சரீரமே. (5) ஆனந்த மய கோசம் என்பன இவற்றின் நாமங்களாம் இவற்றுள்,

1. அந்நமய கோசம் ஆவது, மாதா, பிதாக்கள் உண்ட அன்ன பானங்களால் உண்டாகியசுக்கிலசோணிதங்களால் மாதாவின் உதரத்தின் கண் தோன்றி அன்னசாரமாகிய பால் முதலியவற்றால் விருத்தி அடைந்து முடிவில் மீண்டும் பிருதிவியின் கண்ணேயே இலயத்தை அடையும். இத்தூல தேகமே அந்நமய கோசமாம். இது எப்படி இருக்கின்றது? எனின் சுக துக்கங்களின் அநுபவ ரூப போகத்திற்கே சாதனங்களா உள்ளனவாம். இவை தோன்றுவதன் முன்னும் அழிந்த பின்னரும் அந்நமய கோசமே இல்லை. ஆனதால் இவை உற்பத்தி நாசமுடையனவா இருத்தலின் கடத்தை போலக் காரியமேயாம்.

நான் என்றும் உண்மையாய் உள்ளவன் அதனாலேயே எனக்கு உற்பத்தி நாசமின்றி இதனினும் வேறாகவே இருக்கின்றேன். ஆகலின் இந்த அந்நமய கோசம் நான் அல்ல இது என்னுடையதும் அல்ல, இது பஞ்சீகிருத பஞ்சமகா பூதங்களின் காரியமாம். இதனை அறியும் நான் இவற்றினும் வேறாகவே இருக்கின்றேன் என்பதை அறிந்து கொள்ளவும்.

2. இனி பிராணமய கோசமாவது, கர்மேந்திரியங்கள் ஐந்துடன் கூடிய பஞ்சப் பிராணனையே பிராணமய கோசமென்பர் இவற்றுள் கர்மேந்திரியம் ஐந்தும் பஞ்சப் பிராணனும் முன் சூக்கும தேகத்தின் பிரக்கிரியையில் உள்ளன. பிராண வாயு இருதய ஸ்தானமாம் இரவு பகல் ஒவ்வோரு

தினமும் இருபத்தோராயிரத்து அறுநூறு உசுவாச நிசுவாசங்களைச் செய்யும் கிரியையில் உள்ளன. அபான வாயு குதஸ்தானத்தில் உள்ளன. ஆகலின் அவை மல, மூத்திரங்களைக் கழிக்கும் கிரியையில் உள்ளன.

3. சமான வாயு நாபித்தானத்தில் இருந்து கொண்டு உண்ட அந்நபாநாதிகளின் சாரங்களை எடுத்து நாடிகளின் வழியாகச் செலுத்தும் கிரியையில் உள்ளன.

4. உதானவாயுவிற்குக் கண்டமேஸ்தானமாம். அவை உண்ணும் அந்நபானங்கனின் விபாகத்தைச் செய்கின்றன. அப்படியே சொப்பனம். இழுப்பு, விக்கல் முதலியன வாய கிரியைகளைச்செய்கின்றன.

5. இனி வியானவாயு சர்வாங்கமேஸ்தானமாம் சர்வாங்க மூட்டுகளையும் திருப்புதல் முதலிய கிரியைகளைச் செய்கின்றன.

பிராணுதிவாயுக்கள் சரீரத்தைப் பூரித்து வல்லமையைத் தருவனவாம். அதுவன்றி இந்திரியங்களைத்தத்தம் கிரியைகளில் பிரவிருத்தியை உண்டுபண்ணும் கிரியா சாதனமாயும் உள்ளது.

புருடன் தூங்கும் காலத்தில் பிராணன் விழிப்பா இருந்த போதிலும் அப்போது ஒரு சிநேகன் வருவானுயின் அவனுக்கு உபசாரம் செய்வதில்லை திருடர்கள் வந்து ஒன்றைத் திருடிக்சென்றபோதிலும் தடுப்பதுமில்லை. அதனுல் பிராணுதிவாயுக்கள் கடத்தைப்போல் ஜடமேயாம் சைதன்ய சொருபமாகிய யானே இதனிலும் வேருகவே இருக்கின்றேன். ஆகையால் இந்தப்பிராணமய கோசம் நான் அல்ல அது என்னுடையதுமல்ல. இது சூட்சும பஞ்ச பூதங்களின் இரஜோ குணகாரியமாம்.

3. மனமும் ஞானேந்திரியமும் கூடி மனோமய கோசமாம்.

அஞ்ஞானத்தின் பரிணாமமாகிய காமக் குரோதாதி விருத்திகளை உடையதா இருத்தலின் மனம் நியமம் இன்றிய சுபாவமுடையதா உள்ளன. அதனால் விகாரியாம். நானோ நிர்விகாரியா இருக்கின்றேன். நான் சாக்ஷியானதால் இந்த மனோமய கோஷம் நான் அல்ல இது என்னுடையதுமல்ல இது சூக்சும பூதங்களின் சத்துவ குண காரியமாம் இவற்றினை அறியும் ஆத்மாவாகிய நான் இதனினும் வேறாகவே இருக்கின்றேன்.

4. ஞானேந்திரியங்கள் ஐந்துடன் கூடிய புத்தியே விஞ்ஞானமய கோஷமாம்,

புத்தி எவ்வாறுளதுஎனின் சுழுத்தியில் சிதாபாசனோடு புத்தி இலயத்தை அடைகின்றன.

சாக்கிராவத்தையில் நக நுனி முதல் சிகை வரையில் வியாபித்து இருத்தலால் கருத்தா வடிவமாய்க் காணப்படுகின்றன. ஆனதால் புத்தியானது கட முதலியவற்றைப் போல இல மூதலிய அவஸ்தைகளை உடையன ஆகலின் அது விநாசியாம். (நாசம் உடையதேயாம்) ஆகலின் நான் இலய முதலிய அவஸ்தைகள் இன்றியவனாகவே இருக்கின்றேன். இந்தப் புத்திக்கு விலக்ஷணமாகிய அவிநாசியாய் இருக்கிறேன் ஆகையால் இந்த விஞ்ஞான மய கோசம் நான் அல்ல இது என்னுடையதுமல்ல இது சூக்சும பூதங்களின் சத்துவ குணகாரியமேயாம் இதனை அறியும் ஆத்மாவாகிய நான் இதனினும் வேறாகவே இருக்கின்றேன்.

5. புண்ணிய கர்ம பலத்தை அநுபவிக்கும் காலத்து புத்தி அந்தர் முகப்பட்டு ஆத்ம சொருபத்தின்கண் உள்ள பிரதிபிம்ப ரூப ஆநந்த வடிவமே ஆகின்றன. இது பிரிய மோத பிரமோத ரூபமாய் சொல்லப்படுகின்றது.

அந்த விருத்தியே புண்ணிய கர்ம பல போகங்கள் விடுபடும் காலத்தில் நித்திரா ரூப இலயத்தை அடைகின் றது. அந்த விருத்தியே ஆநந்த மய கோசமாம் மேலும் அவை எப்படி உள்ளன. எதற்கு இஷ்ட வஸ்துவின் தரிச னத்தால் உண்டாகும் பிரிய விருத்தியே சிரமாம்.

எதற்கு இஷ்ட வஸ்துவின் அடைவால் உண்டாகிய மோத விருத்தியே வலது சிறகாயும் இஷ்ட வஸ்துவின் அநுபவத் தில் உண்டாகும் பிரமோத விருத்தியே இடது சிறகாயும் புத்தி விருத்தியில் அல்லது அஞ்ஞான விருத்தியில் உள்ள ஆத்ம சொருப ஆநந்தத்தின் பிரதி பிம்பமே உடலாயும், ஆத்ம சொரூப பிம்ப வடிவ ஆநந்தமே=ஆதாரமாயும் (புச்சமாயும்) உள்ளது எதுவோ அதுவே பக்ஷியாகிய போக் தாவாம் ஆநந்தமய கோசம் உள்ளதாம்.

இந்த ஆநந்த மய கோசத்திற்கு நான் வேருகவே இருக்கின்றேன். ஏன்எனின் ஆநந்தமயகோசம் ஆனதுமேகம் முதலியனபோலஓரோர்காலத்தில் தோன்றுவது ஆகையால் அது க்ஷணிகமேயாம் நான் எப்போதும் இருத்தலால் நித்தி யனே ஆகலின் இந்த ஆநந்தமய கோசம் நான் அல்லஇது என்னுடையதும் அல்ல இது அவித்தையின் காரியமேயாம். ஆகையால் இதனே அறியும் ஆத்ம வடிவமாகிய நான் இத னினும் வேருகவே இருக்கின்றேன்.

இஷ்ட வஸ்துவின் தரிசனத்தால் உண்டாம் விருத் தியே பிரியமாம்.

அதனது லாபத்தால் உண்டாம் விருத்தியே மோதம் அதன் அநுபவத்தால் உண்டாம் விருத்தியே பிரமோதமாம். இவ்விருத்தியே சாக்கிர சொப்பனங்களில் புண்ணிய, கர்ம பல போக காலத்தில் உதயமாகின்றன. புண்ணிய கர்ம பல போகம் நீங்கும் காலத்தில் சுழுத்தி வடிவ அஞ்ஞானத்தில் இலயமாகின்றன். அந்த அஞ்ஞானமே ஆநந்த மய கோச மாம்.

இப்பக்ஷிக்கு பிரிய விருத்தியே சிரசாம். மோத விருத்தியே இடதுசிறகாயும் பிரமோதவிருத்தியேவலதுசிறகாயும் இவ்விருத்திகளின் பிரதிபிம்பவடிவ விஷயாநந்தமே இதன் ஆத்மாவாம். பிம்பமாகிய ஆத்ம வடிவப் பிரஹ்மமே புச்ச வடிவப்பிரதிஷ்டையாம். (ஆதாரமாம்.)

ஓம் சாந்தி! சாந்தி!! சாந்தி!!!

அன்பே சிவம்.

## தத்துவமஸி மஹா வாக்கிய பிரஹ்ம உபதேசம்.

சாம வேதத்தில் சாந்தோக்கிய உபநிடதத்தில் ஆருவது அத்தியாயத்தின் உத்தாலக முனிவர் தமது புத்திரன் சுவேத கேதுவிற்கு ஒன்பது முறை உபதேசம் செய்த தத்துவமஸி என்னும் மகா வாக்கியத்தில் உள்ள மூன்று பதங்களின் முடி பொருளை வேதாந்த அநுசாரமாக எமது ஆசிரியர் ஸ்ரீ நீலகண்ட ஞான தேசிகர் எமக்கு உபதேசம் செய்த கிரமப்படியே அதனையாம் கூறுகின்ருேம்.

அம்மகா வாக்கியத்தின் கண் உள்ள தத் என்னும் வாசகம் ஆவது நிர்மலமாய் விளங்குகின்ற சர்வஞ்ஞத் தன்மை முதலிய கல்யாண குணங்கள் நிறைந்த பிரஹ்ம (ஈசுரன்) மாம்.

அம்மகா வாக்கியத்திலுள்ள துவம் என்னும் வாசகம் ஆவது மல சகிதமாய் விளங்கும் அற்பஞ்ஞத் தன்மை முதலிய இழி குணங்கள் நிறைந்த ஜீவன்மாவாம்.

அம் மகாவாக்கியத்தின் கண் உள்ள அஸி என்னும் வாசகமாவது நிர்மலமாகிய இவ்விரு பொருள்களின் ஏகத்துவமேயாம்.

## பரஸ்பர விருத்த தருமங்கள் அமைந்த ஜீவேஸ்வரர் இருவருக்கும் எவ்வாறு ஏகத்துவம் பொருந்தும் எனின்!

நெருங்கியுள்ளகாரணகாரியம் என்னும்வேறுபாட்டால் இருவகைப்பட்ட ஏழுஉபாதிகளும் விசாரத்தால் நீங்க அவ் வுபாதிகளுக்கு அதீதமாயுள்ள சைதன்ய வடிவ கூடஸ்தப் பிரஹ்மங்களாய் ஜீவேஸ்வரர்களை அறிந்து அதனாலாகிய அபேத வாதனையும் நசிக்கின் அந்த அஸி என்னும் பதத் தின் பொருளாம்.

ஒரே ஆகாயத்தில் குடம், மடம் என்னும் உபாதிகளின் திருஷ்டியால் முறையே குடாகாயம், மடாகாயம் என்னும் பெயரும் நீர் கொணர்தல், இடங்கொடுத்தல் ஆகிய காரி யமும் தோன்றுகின்றன. உபாதிகளின் திருஷ்டி நீங்கின் அவைகள் மகாகாய வடிவமாகவே தோன்றுகின்றன அதுபோல்வே ஒரே பிரம்ஹ்மத்தின் கண்ணே காரிய காரண திருஷ்டியால் முறையே ஜீவ சாக்ஷி என்னும் பெயரும் மன முதலியவற்றை விளக்கும் காரியமும் ஈசுர சாக்ஷி என்னும் பெயரும் சர்வேசுவரத்துவம் முதலிய வற்றை விளக்குதலாகிய காரியமும் தோன்றுகின்றன இவ் வுபாதிகளின் திருஷ்டி நீங்கின் இவை நீங்குவதால் ஒரே பிரஹ்மமே தோன்றுகின்றன அது தோன்றியவுடனே ஜீவே சுவரர்களைக் கூடஸ்த வடிவ பிரஹ்மமாய் அறிந்த பேத அறிவும் அதனுல் ஆகிய பேத சமஸ்காரமும் நீங்கும் அவ் வாறு நீங்குவதே அஸி பதப்பொருளாம்.

அதாவது காரிய உபாதியோடு கூடிய சைதன்யமே துவம் பத வாச்சியார்த்தமாம் உபாதி அற்ற சுத்த சைதன்யமே துவம்பத இலக்ஷியார்த்தமாம்.

காரண உபாதியோடு கூடிய சைதன்யம் தத்பத வாச்சியார்த்தமாம் உபாதி அற்ற சுத்த சைதன்யமே தத்பத இலக்ஷியார்த்தமாம்.

அதாவது முக்கியப் பொருள், இலக்ஷியப் பொருள் என்று கூறப்படுவதால் இப்பொருள் பெறப்பட்டது அதாவது வாசகத்திற்கும், வாச்சியத்திற்கும் உள்ளதாகிய (நினைப்பூட்டுதல்—நினைக்கப்படுதல்) என்னும் தன்மையாய ஆற்றல் விருத்தி எனப்படும். எங்ஙனம் கேட்கப்பட்டகுடம் என்னும் வாசகம் குடமாகிய வாச்சியத்தை நினைப்பூட்டுதலும், நினைக்கப்படுதலும் ஆகிய இவற்றால் குடமாகிய பொருளினை நினைக்கப்படுவதாய சக்தியே விருத்தியாம்.

இதுவே சக்தி என்றும் இலக்ஷணை என்றும் இருவகைப்படும்.

நெருப்பின் கண் தகிக்கும் ஆற்றலும் நீரின் கண் நனைக்கும் ஆற்றலும் இயல்பாகவே உள்ளன. அது போல சொல்லின் கண் கேட்பவனுக்கு அப்பொருளை உணரும் உணர்வினை உண்டு பண்ணும் ஆற்றலும் உண்டு.

இதனைச் சக்தி விருத்தி என்றும், முக்கிய விருத்தி என்றும் அபிதா விருத்தி என்றும் கூறுவர் பெரியோர்.

இவற்றுள் முறையே சக்தி விருத்தியால் அறியப்படுவதனைச் சக்கியார்த்தம் என்றும்

முக்கிய விருத்தியால் அறியப்படுவதனை முக்கியார்த்தம் என்றும்.

அபிதா விருத்தியால் அறியப்படுவதனை அபிதார்த்தம் என்றும் கூறுவர்.

இவ்வாறுணரும் பொருளினை தென் மொழியில்வல்லுநர் இயற்பெயர்ப் பொருள் என்பர். இவ்வாறுய சக்கியத்தின் சம்பந்தம் இலக்கணை எனவும் இதனால் அறியப்படும் பொருள் இலக்கியார்த்தம் எனவும் சொல்லுவர் இதனை தென்மொழியில் ஆகு பெயர்ப்பொருள் என்பர்.

நீலோற் பல புஷ்பம் சூடினுள் என்ற கருத்தோடு நீலஞ்சூடினுள் என்று ஒருவன் கூறினுன் இங்கு நீலம் என்னும் சொல்லிற்குச் சக்தி (ஆற்றல்) நீல நிறத்திற்கு உள்ளது ஆகலின் நீலமென்னும் சொல்லிற்குச் சக்கியார்த்தம் நீல நிறமெனவும் இதன் சம்பந்தம் (சமவாயம்) உற்பலம் என்னும் புஷ்பத்தில் உள்ளது. இது இலக்கணையெனவும் இதனுல் உணரப்படும் பொருள் உற்பலம் என்னும் புஷ்பமாம்.

இதுவே இலக்கியார்த்தமாம் என்பர். அவ்விலக்கணையாவது கேவலம், இலக்ஷிதம் என்னும் வேறுபாட்டால் இருவகைப்படும்.

கேவல இலக்கணையாவது சக்கியத்தின் நேர் சம்பந்தம்

இனி இலக்ஷித இலக்ஷணையாவதுசக்கியப்பொருளின் பரம்பரைச் சம்பந்தம் ஆம். எங்ஙனம் வண்டு ஒலிக்கின்றது என்னும் பொருளை உணர்த்தத் (துவிரேபம்) ஒலிக்கின்றது என்ருன் ஈண்டு ஒருவன் துவிரேபம் என்ற சொல்லிற்குச் சக்கியார்த்தம் இரண்டு ரகரமாம், இந்த இரண்டு ரகரமும் அமைந்து விளங்குவது பிரமரம் என்னும் சொல்லாம் ஆகலின் இந்த இரண்டு ரகரங்களுக்கும் பிரமாம் என்ற சொல்லோடும் பிரமரம் என்ற சொ்ல்லுக்கு வண்டோடும் சம்பந்தமுளது. இதனைச் சுவகடிதபத வாச்சியத் தன்மையாகிய பரம்பரைச் சம்பந்தம் என்பர்.

ஈண்டுச் சுவ (தான்) என்னும் சொல்லால் துவிரேபம் என்னும் சொல்லுக்குச் சக்கியார்த்தமாகிய இரண்டு ரகங்களைக் கொள்ளப்படும்.

இந்த இரண்டு ரகரமும் அமைந்து விளங்குவது பிரமரம் என்னும் சொல்லாம். இதற்கு வாச்சியத்தன்மைச் சம்பந்தம் வண்டோடு உள்ளன. ஆகலின் துவிரேபம் என்னும்

சொல்லின் சக்தியார்த்தம் ஆகிய இரண்டு ரகரத்திற்குப் பிரமரம் என்னும் சொல் வாயிலாய் வண்டாகிய இலக்ஷி யார்த்தத்தோடு சம்பந்தம் உள்ளன. இதனையே இலக்ஷித இலக்ஷணை என்பர்.

கேவல இலக்கணையாவது விட்ட இலக்கணை விடாத இலக்கணை விட்டு விடாத இலக்கணை என மூவகைப்படும்.

குடத்தை கொண்டு வா நீ என்றல்முதலிய வாக்கியங் கள் சம்சர்க்கார்த்தத்தையும் அதாவது சம்பந்தமாகிய பொருளையும் நீலப்புஷ்பம் என்றல் முதலிய வாக்கியங்கள் விசிஷ்டார்த்தத்தையும் உணர்த்துவது போன்று தத்துவ மஸி முதலிய வாக்கியங்களில் சம்சர்க்கார்த்தத்தையும் விசிஷ்டார்த்தத்தையும் உணர்த்தமாட்டாது. ஆனல் அது அகண்டார்த்தத்தையே உணர்த்துவனவேயாம்.

சம்சர்க்கார்த்தம்=பதார்த்தத்தின் சம்பந்தம் அல்லது, சம்பந்தத்தோடு கூடிய பதார்த்தமாம். குடத்தைக்கொண்டு வா நீ என்னும் வாக்கியத்தில் குடம் என்னும் சொற்பொரு ளுக்கு இரண்டன் உருபின் பொருளாயசெயப்படுபொருண் மைப் பொருளின் தன்மையில் ஆதேயத்தன்மைச் சம்பந்தம் உள்ளன.

இங்கு குடம் ஆதாரம் (இடம்) இதன் கண் உள்ள செயப்படு பொருண்மை ஆதேயம்=(இடத்தில் நிகழ்வது) கொண்டு வா என்னும் சொற்பொருளாகிய கொணர்தலிற் செயப்படு பொருண்மையை நிருபிக்கும் தன்மைச் சம்பந்த முண்டு வா. என்னும் சொல்லிற்கு வினை ஏவல் என இரு பொருள் உள்ளன. வினையிற் கொணர்தலின் அநுகூலத் தன்மைச் சம்பந்தம் உள்ளன. வினைக்கு நீ என்னும் சொற் பொருளில் ஆசிரயத் தன்மைச் சம்பந்தம் உள்ளன.

நீலோற் பல புஷ்பம் சூடினுள் என்ற கருத்தோடு நீலஞ்சூடினுள் என்று ஒருவன் கூறினுன் இங்கு நீலம் என்னும் சொல்லிற்குச் சக்தி (ஆற்றல்) நீல நிறத்திற்கு உள்ளது ஆகலின் நீலமென்னும் சொல்லிற்குச் சக்கியார்த்தம் நீல நிறமெனவும் இதன் சம்பந்தம் (சமவாயம்) உற்பலம் என்னும் புஷ்பத்தில் உள்ளது. இது இலக்கணையெனவும் இதனுல் உணரப்படும் பொருள் உற்பலம் என்னும் புஷ்பமாம்.

இதுவே இலக்கியார்த்தமாம் என்பர். அவ்விலக்கணை யாவது கேவலம், இலக்ஷிதம் என்னும் வேறுபாட்டால் இரு வகைப்படும்.

கேவல இலக்கணையாவது சக்கியத்தின் நேர் சம்பந்தம்

இனி இலக்ஷித இலக்ஷணையாவதுசக்கியப்பொருளின் பரம்பரைச் சம்பந்தம் ஆம். எங்ஙனம் வண்டு ஒலிக்கின்றது என்னும் பொருளை உணர்த்தத் (துவிரேபம்) ஒலிக்கின்றது என்ருன் ஈண்டு ஒருவன் துவிரேபம் என்ற சொல்லிற்குச் சக்கியார்த்தம் இரண்டு ரகரமாம், இந்த இரண்டு ரகரமும் அமைந்து விளங்குவது பிரமரம் என்னும் சொல்லாம் ஆகலின் இந்த இரண்டு ரகரங்களுக்கும் பிரமாம் என்ற சொல்லோடும் பிரமரம் என்ற செர்ல்லுக்கு வண்டோடும் சம்பந்தமுளது. இதனைச் சுவகடிதபத வாச்சியத் தன்மையாகிய பரம்பரைச் சம்பந்தம் என்பர்.

ஈண்டுச் சுவ (தான்) என்னும் சொல்லால் துவிரேபம் என்னும் சொல்லுக்குச் சக்கியார்த்தமாகிய இரண்டு ரகங்களைக் கொள்ளப்படும்.

இந்த இரண்டு ரகரமும் அமைந்து விளங்குவது பிரமரம் என்னும் சொல்லாம். இதற்கு வாச்சியத்தன்மைச் சம்பந்தம் வண்டோடு உள்ளன. ஆகலின் துவிரேபம் என்னும்

சொல்லின் சக்கியார்த்தம் ஆகிய இரண்டு ரகரத்திற்குப் பிரமரம் என்னும் சொல் வாயிலாய் வண்டாகிய இலக்ஷி யார்த்தத்தோடு சம்பந்தம் உள்ளன. இதனையே இலக்ஷித இலக்ஷணை என்பர்.

கேவல இலக்கணையாவது விட்ட இலக்கணை விடாத இலக்கணை விட்டு விடாத இலக்கணை என மூவகைப்படும்.

குடத்தை கொண்டு வா நீ என்றல்முதலிய வாக்கியங் கள் சம்சர்க்கார்த்தத்தையும் அதாவது சம்பந்தமாகிய பொருளையும் நீலப்புஷ்பம் என்றல் முதலிய வாக்கியங்கள் விசிஷ்டார்த்தத்தையும் உணர்த்துவது போன்று தத்துவ மஸி முதலிய வாக்கியங்களில் சம்சர்க்கார்த்தத்தையும் விசிஷ்டார்த்தத்தையும் உணர்த்தமாட்டாது. ஆனல் அது அகண்டார்த்தத்தையே உணர்த்துவனவேயாம்.

சம்சர்க்கார்த்தம்=பதார்த்தத்தின் சம்பந்தம் அல்லது, சம்பந்தத்தோடு கூடிய பதார்த்தமாம். குடத்தைக்கொண்டு வா நீ என்னும் வாக்கியத்தில் குடம் என்னும் சொற்பொரு ளுக்கு இரண்டன் உருபின் பொருளாயசெயப்படுபொருண் மைப் பொருளின் தன்மையில் ஆதேயத்தன்மைச் சம்பந்தம் உள்ளன.

இங்கு குடம் ஆதாரம் (இடம்) இதன் கண் உள்ள செயப்படு பொருண்மை ஆதேயம்=(இடத்தில் நிகழ்வது) கொண்டு வா என்னும் சொற்பொருளாகிய கொணர்தலிற் செயப்படு பொருண்மையை நிருபிக்கும் தன்மைச் சம்பந்த முண்டு வா. என்னும் சொல்லிற்கு வினை ஏவல் என இரு பொருள் உள்ளன. வினையிற் கொணர்தலின் அநுகூலத் தன்மைச் சம்பந்தம் உள்ளன. வினைக்கு நீ என்னும் சொற் பொருளில் ஆசிரயத் தன்மைச் சம்பந்தம் உள்ளன.

ஆசிரயம்—இடம்! ஏவற்கு நீ என்னும் சொற்பொருளில் விடயத்தன்மைச் சம்பந்தமுண்டு எனவே குடத்தின் கண் இருக்கும் செயப்படு பொருண்மையை நிருபிக்கும் கொணர்தல்ஆன அநுகூல வினையின் ஆசிரயமாகிய ஏவல் விஷயம் நீ என்னும் சம்சர்க்கார்த்தத்தையே உணர்த்துகின்றது. இவ்வாக்கியம் என்பது போதரும் விசிஷ்டார்த்தம்—விசிட்டமாகிய அர்த்தம். விசிட்டம்—விசேஷணத்தை உடையது. இதனைத் தென் மொழியில் அடைகொளி என்பர்.

நீலோற்பலம் பூத்தது என்னும் வாக்கியத்தில் நீலம் என்னும் சொற்பொருள் விசேடம். (அடை)

உற்பலம் என்னும் சொற்பொருள் அவ்விசேடணத்தை உடையது. ஆகலின் விசிஷ்டம் (அடைகொளி) எனப்படும் எனவே நீலத்தை விசேடணமாக உடைய உற்பலம் விசேடியமாம். பூத்தது என்னும் விசிஷ்டார்த்தத்தை அறிவிப்பதாகும். வாக்கியம் என்பது போதரும்.

இனி அகண்டார்த்தமாவது—கண்டிக்கப்படாத பொருள். புருடன் அஜாங்கனே என்றல் முதலிய சுருதி வாக்கியங்களால் எவ்வித சம்பந்தமும் இல்லாமல் நித்தியமா இருக்குந் தன்மை அல்லது ஜாதி பண்பு, முதலிய வேறு பொருள்களின் சமபந்தமும் இல்லாமையே அகண்டார்த்தமாம்.

எது சம்பந்தத்தை விஷயமாக்காத யதார்த்த ஞானத்தை உண்டு பண்ணும் தன்மையோ அதுவே மகா வாக்கியார்த்தங்களுக்கு அகண்டார்த்தத்தை உணர்த்தும் தன்மை என்பர்.

இலக்கண வாக்கியம்—இலக்கணையாற்பொருள் உணர்த்தும் வாக்கியம் மூன்றன் உருபும் பயனும் உடன் தொக்க தொகை.

அவை மஞ்சம் கூப்பிடுகின்றது என்றல் முதலிய வாக்கியங்கள் ஆம்.

இலக்கணையைச் சிலர் கேவல இலக்ஷணை இலக்ஷித இலக்ஷணை என்றும் வேறு சிலர் விட்ட இலக்கணை, விடாத இலக்கணை, விட்டு விடாத இலக்கணை, இலக்ஷித இலக்கணை என நான்கு வகையாம் என்றும்,

சிலர் விட்ட இலக்கணை, விடாத இலக்கணை, விட்டு விடாத இலக்கணை என்றும் கூறுவர் அவற்றுள் முடிவிற் கூறிய பட்சத்தையே இங்கு யாம் எடுத்துக் கூறுவாம்.

## விட்ட இலக்கணையாவது.

சொல்லின் முக்கியப்பொருள் அதாவது (வாச்சியம்) விடப்படுதலின் (அதன் முக்கியப்பொருள்) சம்பந்தமுடைய வேறு பொருளோடு (இலக்கியார்த்தத்திறேடு) அச் சொல்லிற்குண்டாம். இலக்ஷணு விருத்தி (பரம்பரை சம்பந்தமாம்) விட்ட இலக்கணையாம்.

மஞ்சம் கூப்பிடுகின்றது என்னும் வாக்கியத்தில் மஞ்சம் என்னும் சொல்லின் முக்கியப் பொருள் ஆகிய கட்டில் விடப்படுவதால் அதன் சம்பந்தமுடைய புருஷனிடத்துமஞ்சம் என்னும் சொல்லிற்கு இலக்ஷணு விருத்தி உள்ளன.

இங்கே மஞ்சம் என்னும் சொல்லிற்கு வாச்சியம் கட்டில் ஆம். இலக்ஷியம் புருடனும் இவ்வாறு வடபகீரதி விஞ்சுகோஷமது உள்ளது என்பதிலும் அமைத்துக் கொள்ளவும்.

இவற்றுள் மஞ்சம் பகீரதி என்னும் சொற்கள் தம் ஆற்றலால் உணர்த்தும் பொருள்கள் கட்டிலும் நீர்ப்பிரவாகமும் ஆம். அவற்றின் கண்ணே முறையே கூப்பிடுவதற்கு வினை முதலாந்தன்மையும் இடைச்சேரி இருத்தற்கு ஆதார

மாந்தன்மையும் பொருந்தாமையானும் சொல்வோன் கருத்து அஃதன்மையானும் அச்சொற்கள் அப்பொருளை விட்டு இலக்ஷணையால் முறையே புருடனையும் கரையினையும் உணர்த்தியதே ஆம்.

மஞ்சத்திற்கும், புருஷனுக்கும் ஆதேயத் தன்மைச் சம்பந்தமும் பகீரதிக்குக் கரையோடுள்ள சம்பந்தம் சையோக சம்பந்தமும் உண்டென்பர் பெரியோர்.

தருக்கர் சொல்லில் மாத்திரம் இலக்கணை உண்டென்பர். இதனை மறுத்து வாக்கியத்திலும் அது உண்டென்பவரைத் தழுவியே இது கூறப்பட்டது.

பதக் கூட்டம் வாக்கியம் எனப்படும். எழுவாய் பயனிலையோடு கூடி இருத்தல் வேண்டும் என்பதில்லை. ஆதலால் தான் வடபகீரதி என்பது வாக்கியம் எனச் சொல்லப்பட்டது. அதுசில ஆசிரியர் கொள்கையாதலால் இவற்றின் விரிவை அறிய விரும்புவோர்.

விருத்தி பிரபாகாரம் தத்துவாநு சந்தானம் முதலிய நூல்களை விசாரிக்கவும்.

## விடாத இலக்கணையாவது.

சொல்லின் முக்கியப் பொருள் விடப்படாமையின் அதன் (முக்கியப்பொருள்) சம்பந்தமுடைய வேறு பொருளோடு (இலக்கியப்பொருளோடு) அச்சொல்லிற்குண்டாம். இலக்ஷணு விருத்தி விடாத இலக்கணையாம் அதாவது,

சிவலை நின்றது, வெள்ளை போயினது என்பதிலுள்ள சிவலை, வெள்ளை என்னும் முக்கியப்பொருளாகிய சிவப்பு நிறமும், வெண்மை நிறமும் விடப்படாமையின் சிவப்பு நிறம், வெண்மை நிறங்களின் சம்பந்தமுடைய பசுக்களி

டத்தே சிவலை, வெள்ளை என்னும்சொற்களுக்கு இலக்கணா விருத்தியுள்ளது

சிவலை, வெள்ளை என்னும் சொற்கள் தம் ஆற்றலால் உணர்த்தும் பொருள்கள் முறையே சிவப்பும், வெண்மையுமாம் அவை தனியே நிற்றலும், போதலும் கூடாமையானும் சொல்வோன் கருத்து அஃதன்மையானும் அச்சொற்கள் இலக்கணையால் முறையே சிவப்பு நிறமுள்ள பசுவும் வெண்ணிறமுடைய பசுவுமே அதற்குபொருளாம் என உணரவும்.

சிவப்பு, வெண்மை என்ற பண்புகளுக்கு பண்பியாகிய பசுக்களோடு உளதாகிய சம்பந்தம்.

சமவாயம் அல்லது தாதாத்மியம் சம்பந்தமாம். விடாத இலக்கணை விடாத சக்கியத்தின் சம்பந்தம்.

## விட்டு விடாத இலக்கணையாவது·

சொல்லின் சக்கியப்பொருள் ஏக தேசம் விடுபட ஏக தேசத்திலுண்டாம் அச்சொல்லின் இலக்ஷணா விருத்தி விட்டு விடாத இலக்கணையாம்.· இதுவே பாகத்தியாக இலக்கணை எனவும் சொல்லுவர். அவனே இவன் என்னும் தொடர் மொழியில் அவன் என்னும் சொல்லிற்கு சேய்மைத் தேசமும் சென்ற காலமும் ஆகிய இவைகளோடு கூடிய புருடன் பொருளாவன்.

இவன் என்னும் சொல்லிற்கு அண்மைத்தேசமும்நிகழ் காலமும் ஆகிய இவைகளோடுகூடியபுருடன்பொருளாவன். அவ்விரு பொருளுக்கும் ஒன்றுந்தன்மைஅமையாமையானும் சொல்பவன் கருத்து அஃதன்மையானும் அவன் என்னும் சொற்பொருளின் கண் வாச்சியத்தின்கண்விசேடபாகத்தை விடுத்து விசேடியபாகமாகியபுருடனிடத்து இவன் என்னுஞ் சொல்லிற்கு இலக்ஷிணையும் உள்ளன.

விட்டு விடாத இலக்கணை விட்ட சக்கியப்பொருளும் விடாத சக்கியப் பொருளுமாகிய இவற்றின் சம்பந்தம் இலக்கணை என்னும் பொது இயல்பாம். (இலக்கணையாம்)

ஈண்டு விட்டு விடாத இலக்கணையிலும், உளதாதலும் அதனுலிங்கு அகண்டார்த்தம் பெறப்படுதலும் ஆராய்ந்து கொள்ளவும் அதனையாம் மேல் விரித்துக்கூறுவாம்.

வேதாந்த நூல்கள் முழுவதிலும் உணரத் தக்கவை காரிய உபாதி இன்றிக் காண்பவனுகிய சாக்ஷியும் காரண உபாதியாகிய (திருஷ்டா) காண்பவன் ஆகிய பிரஹ்மமும் ஆம்.

இவை இரண்டும் மகாவாக்கியத்தில் உள்ள தத்பதம் துவம் பதம் என்னும் வாக்கியங்களிற்கலந்துள்ளன. ஈண்டு மகாவாக்கியத்தில் விட்ட இலக்கணையைக் கொள்ளின் வாச்சிய பாகம் முழுதும் விட்டு வேறு பொருள் கொள்ள வேண்டும்.

அவ்வாறு பொருள் சூனியமே (பாழே) ஆம்.

இதனை அறிவதினுல் வீடு பேற்றினை முத்தி விருப்புடையோன் அடையான்.

விடாத இலக்கணையைக் கொள்ளின் இலக்கணையின் பயனுகிய முரண் நீங்குதலே இன்றும் வாச்சிய பாகம் முழுதும் இருக்குமாயின், விட்ட இலக்கணையும், விடாத இலக்கணையும், அவற்றின் இலக்கணங்களும் கூறவேண்டுவதென்னை எனின் தனித்தனியே விட்ட இலக்கணை இயல்பும், விடாத இலக்கணை இயல்பும் நன்றுய் விசாரித்து பாராது போயின் அவ்விரண்டும் ஒருங்கே கலந்துள்ள விட்டு விடாத இலக்கணையின் தன்மை ஒரு சிறிதும் புலப்படாதெனக் கூறியுள்ளதாம்.

அன்றியும் இவ் விலக்கணைகளுக்கு மனோபிரஹ்மம் சத்தியம் ஞானானந்தம்பிரஹ்மம் என்றல் முதலிய வாக்கியங் களின் உபயோகமிருக்கின்றனவென்பதறிக.

ஜீவப்பிரஹ்மங்களின் ஒருமை உணர்ச்சியைக் கருத். தோடு உணர்த்தப்பட்ட. தத்துவம் அஸி என்னும் தொடர் மொழிக் கண் உள்ள தத்துவம் என்னும் இருபதங்களுக்கும் அகண்டப்பிரஹ்மத்தின் கண் இலக்கணை உள்ளதேயாம்.

ஈண்டு காரணத்தன்மைமுதலிய ஏழு உபாதிகளுடைய சைதன்யமே தத்பத முக்கியார்த்தமாம். காரியத்தன்மை முதலிய ஏழு உபாதிகளுடைய சைதன்யமே துவம்பத முக்கியார்த்தமாம்.

இவ்விரு பொருளுக்கும் குளிர்ந்த பண்புடைய பனிக் கட்டிக்கும் வெம்மைப் பண்புடைய நெருப்பிற்கும் உள்ள வேறுபாடே தோன்றுகின்றன. ஆதலான் சொல்வோன் கருத்து அஃதன்மையானும் தத் என்னும் சொல்லின் முக்கி யப்பொருளில் ஏகதேசமாகிய காரணத் தன்மை முதலிய உபாதிகள் எழினையும்விடலால் சேதனமாகிய ஏகதேசத்தின் கண் தத்என்னும் சொல்லின் இலக்கணையும் துவம் என்னும் சொல்லின் முக்கியப்பொருளின் கண் ஏகதேசமாகிய காரி யத்தன்மை முதலிய ஏழு உபாதிகளையும் விடலால் ஏகதேச மாகிய சேதனத்தின் கண் துவம் என்னும்சொல்லின் இலக் கணையும் உண்டு இதுவே விட்டுவிடாத இலக்கணை எனவும் பாகத்தியாக இலக்கணை எனவும் கூறுவர் உயர்ந்தோர்.

மகாவாக்கியத்தில்விட்ட இலக்கணையும் விடாத இலக் கணையும் பொருந்தாவாம். மற்றோ பாகத்தியாக இலக்கணை யே பொருந்தும் அதன் தன்மை விசார சாகரத்தில் எழுதப் பட்டுள்ளது. அதனையே இங்கு சொல்லுவாம். அப்பாகத்

தியாக இலக்கணைமகாவாக்கியத்தில் இலக்ஷித இலக்கணை அன்று ஆனால் கேவல இலக்கணையாம். ஏன் எனின்! இலக்கிய சேதனத்தோடு வாச்சியத்திற்குச் சாக்ஷாத் ச ம் ப ந் த முண்டு பரம்பரைச் சம்பந்தமில்லை யாண்டு பாகத்தியாக இலக்கணை உண்டோ ஆண்டு வாச்சியத்தின் ஏக தேசம் இலக்கியமாகும் அந்த ஏகதேசத்தேசத்தோடு வாச்சியத்திற்குச் சாக்ஷாத்சம்பந்தம் உள்ளது. ஆதலின் அது கேவல இலக்கணையாம். மகாவாக்கியத்தால் (பெரு மொழியால்) ஞான விருப்பு உடையார்க்கு அ க ண் ட ப் பிரஹ்மத்தின் அறிவுஉண்டாகுகஎன்பது இறைவனது கருத்தாம் ஆதலின் அது நிருட இலக்கணையாம் பிரயோஜனவதி இலக்கணை அன்று.

ஈண்டிது சங்கை வாச்சியார்த்தத்திற்கு இலக்கியசேதனத்தோடு சம்பந்தம் அங்கீகரிக்கின் அசங்கத் தன்மைக்குக் கேடுண்டாம். சம்பந்தம் அங்கீகரியாவிடின் இ ல க் க ணை பொருந்தாவாம். ஏன் எனின் சக்கிய சம்பந்தம் அல்லது போத்திய சம்பந்தத்தை இலக்கணையென்பர். அது அஜங்கத்திற் பொருந்தாது.

சமாதானம் வாச்சியார்த்தத்தில் சேதனம் சடமென இரண்டு பொருளுண்டு அதன் (வாச்சியார்த்தத்தினது) சேதன பாகத்திற்கு இலக்கியதாரார்த்தத்தில் (தாதாத்மிய) அபேத சம்பந்தம் உண்டு. வாச்சிய பாகமான சேதனத்தின் சொருபம் இலக்கிய சேதனமாம். ஆதலால் வாச்சியத்தின் சேதன பாகத்திற்கு இலக்கிய சேதனத்தோடு தாதாத்மிய சம்பந்தமுண்டு.

வாச்சியத்தின் ஜடபாகத்திற்கு இ ல க் கி ய சேதனத்தோடு அதிஷ்டானத் தன்மைச் சம்பந்தமுளது கற்பிதத்தின் சம்பந்தத்தால் அதிஷ்டானத்தின் சு பா வ ம் (இயற்கை) கெடாவாம். தனது தாதாத்மிய சம்பந்தத்தானும் சுபாவத்

திற்குக்கேடுண்டாகாது. அதனால் இலக்கியார்த்தத்தின் அஜஹத்தன்மை கெடாது என்று விருத்திப் பிரபாகரம் என்னும் நூல் கூறுவதை ஆராய்ந்து உணர்ந்து கொள்ளவும் நிருட இலக்கணை நெடுநாளைய கருத்தின் விடயமாகிய பொருளில் இருக்கும் இலக்கணை பிரயோஜனவதி இலக்கணை பிரயோஜனமுள்ள இலக்கணை இவற்றிற்கு முறையே உதாரணம். நீலக்குடம் கங்கையில் கிராமம் என்பனவாம். இவற்றின் விரிவு காண வேண்டின் நியாய முதலிய நூல்களிற் காணலாம்.

## இனி இலக்கணையும் அவற்றின் பேதமும் அனுவாதம் செய்தல்,

வாச்சியார்த்தத்தின் சம்பந்தமே இலக்கணை என அறிக எந்த அர்த்தத்தின் ஞானம் பதத்தின் சக்தியால் உண்டாகின்றதில்லையோ ஆனால் இலக்ஷணையினால் உண்டாகின்றதோ அதுவேபதத்தின் இலக்ஷியார்த்தமெனப்படும்.

## விட்ட இலக்கணை, விடாத இலக்கணை விட்டு விடாத இலக்கணைகளின் இலக்கணம்.

யாண்டு வாச்சியார்த்தம் முற்றும் விடப்படும். அதன் சம்பந்தம் பிரதீதியாகின்றதோ ஆண்டு விட்ட இலக்கணை கூறப்படுகின்றது கங்கையில் கிராமம் இருக்கின்றது என ஒருவன்கூறுமிடத்துக்கங்கைஎன்னும் பதத்திற்குக்கரையில் இலக்கணை இருக்கின்றது. ஏன் எனின்! கங்கையென்னும் பதத்திற்கு வாச்சியார்த்தம் தேவ நதிப்பிரவாகமாம். அப்பிரவாகத்தில் கிராமம் இருப்பது அசம்பவம் ஆம். ஆதலால் வாச்சியார்த்தம் முழுமையும்விட்டுக்கரையில்கங்கைஎன்னும் பதத்திற்கு விட்ட இலக்கணை இருக்கின்றன.

வாச்சியத்தின் சம்பந்தத்திற்கு இலக்கணை எனப்பெயராம். கங்கையில் கிராமம் என்னும் இடத்தில் கங்கா பதத்தின் வாச்கியத்தின் பிரவாகத்திற்குக் கரையோடுள்ள சம்பந்தம் சையோக சம்பந்தமாம். ஆதலால் கங்கா பதத்தின் வாச்சியத்திற்குக் கரையோடுள்ள சம்பந்தமே இலக்கணையாம் வாச்சிய பாகம் முற்றும் விடுதலால் இவை விட்ட இலக்கணையாம்.

வாச்சியார்த்தத்தோடு வாச்சியத்தின் சம்பந்தியின் ஞானம் எந்தப்பதத்தினுல் உண்டாகின்றதோ அந்தப் பதத்தில் விடாத இலக்கணை உள்ளது அதாவது சிவப்பு ஓடுகின்றது. என ஒருவன் கூறுமிடத்து சிவப்பு என்னும் பதத்திற்கு சிவப்பு வர்ணத்துடன் கூடிய குதிரையில் விடாத இலக்கணை இருக்கின்றது. ஏன் எனின்! சிவப்பு என்பது சிவப்பு வர்ணத்திற்காம் ஆதலால் சிவப்பு பதத்தின் வாச்சியம் சிவப்பு நிறமாம். கேவலம் அதில் ஒடுதல் சம்பவியாது இக்காரணத்தினுல் சிவப்பு என்னும் பதத்தின் வாச்சியமான சிவப்பு நிறத்தோடு கூடிய குதிரையினிடத்தில் சிவப்பு என்னும் பதத்திற்கு விடாத இலக்கணை இருக்கின்றது.

குணத்திற்கும் குணிக்கும் தாதாத்மிய சம்பந்தம் கூறப்படுகின்றது. சிவப்பும் ரூபத்தின் பேதமாவதால் குணமாம். ஆதலால் சிவப்பு என்னும் பதத்தின் வாச்சியமான சிவப்பு நிறத்தோடு கூடிய குதிரையினிடத்தில் தாதாத்மிய சம்பந்தம இலக்கணையாம் வாச்சியத்தினை விடாமல் அதிகத்தைக் கிரஹிப்பதால் விடாத இலக்கணையாம்.

பதத்தின் வாச்சியார்த்தத்தில் ஒரு பாகத்தை விட்டு ஒரு பாகத்தைக் கிரகிப்பது பாகத்தியாக இலக்கணை எனப்படும். அதனையே விட்டு விடாத இலக்கணை என்பர். முன்னர்ப் பார்த்த பொருளையே வேறு ஓர் இடத்தில் பார்த்து அதுவே. இதுவென ஒருவன் கூறுவானுயின் ஆ ண் டு ப்

பாகத்தியாக இ ல க் க ணை இருக்கின்றது. ஏன் ஏனின்! சென்ற காலமும் தூரதேசமும் உள்ள பொருளையே அது வென்பர். அதுவே பதத்தின் வாச்சியார்த்தமாம்.

நிகழ்காலத்தில் சமீபதேசத்தில் உள்ளபொருளினையே இது என்னும் பதத்தின் வாச்சியார்த்தமென்பர் சென்ற காலத்துடனும் தூர தேயத்துடனும் கூ டி ய பொருளையே நி க ழ் காலத்துடனும் சமீப தேசத்துடனும் கூடி இருக்கின்றது என்பது (அதுவேஇது)என்னும் வாசக சமுதாயத்தின் வாச்சியார்த்தமாம். அது சம்பவியாது ஏன் எனின்

சென்ற காலத்திற்கும் நிகழ் காலத்திற்கும் வி ரோ த மிருக்கின்றது அங்ஙனமே அ ந் நி ய தேசத்திற்கும் சமீப தேசத்திற்கும் விரோதமிருக்கின்றது ஆதலால் இ ர ண் டு பதங்களிலும் உள்ள தேச காலங்களாகிய வாச்சிய:பாகங்களைவிட்டு பொருள் மாத்திரத்தில் இரண்டு பதங்களுக்கும் பாகத்தியாக இலக்கணை இருக்கின்றது.

## தத் பதத்தின் வாச்சியார்த்தம்.

1. சர்வ சக்தி மான் சர்வஞ்ஞன் விபு ஈசன் சுதந்திரன் கர்மாதீனன் ப ரோ ா க்ஷ ன் மாயி பந்தமோக்ஷமின்றியவன் அதாவது இத்துணைத் தர்மங்களுடன் கூடிய ஈசுரசேதனம் தத் பதத்தின் வாச்சியார்த்தமென்பர்.

## துவம் பதத்தின் வாச்சியார்த்தம்.

2. ஈசுர தர்மங்களுக்கு விரோதியான தர்மங்கள் எதனிடத்து இருக்கின்றனவோ அந்தச் ஜீவ சேதனமே து வ ம் பதத்தின் வாச்சியார்த்தமாமென்பர் இதன் கருத்திதுவாம். ஜீவன், அற்பஞ்ஞன், அற்ப சக்திமான், பரிச்சின்னன், அநீசன், கர்மாதீனன், அவித்தியா மோகிதன், பந்தமோக்ஷமுடையோன் பிரத்தியக்ஷன் ஆவன். ஏ ன் எ னி ன்! தன்

சொரூபம் எவனுக்கும் பரோக்ஷமன்று பிரத்தியக்ஷமேயாம். ஈசுரனுடைய சொரூபம்ஈசுரனுக்கு பிரத்தியக்ஷமேயாயினும் ஜீவர்களுக்குப் பிரத்தியக்ஷமன்று ஆதலால் ப ரோ க்ஷ மேயாம் இத்துணைத் தர்மங்களுடன் கூடிய ஜீவ சேதனம் துவம் என்னும் பதத்திற்கு வாச்சியார்த்தமாமென்பர்.

## வாச்சியார்த்தத்தில் ஏகத்துவத்தின் விரோதமும் இலக்கணையின் கர்த்தவ்யத் தன்மையும்·

சாம வேதத்தில் சாந்தோக்கிய உபநிடதத்தில் உத்தாலகமுனிவர் தமதுபுத்திரனுகியசுவேத கேதுவின் பொருட்டு ஜகத்தை உண்டு பண்ணும் ஈசுரனைக் காட்டி தத்துவம் அஸி (அதுவே நீயா இருக்கின்ருய்) எனக்கூறியுள்ளார். அதன் வாச்சியார்த்தம் இதுவாம். தத் என்பது அது· அதாவது ஜகத்தை உண்டு பண்ணும் சர்வ சக்தி சர்வஞ்ஞுத் தன்மை முதலிய தர்ம சகித ஈசுரனும். துவம் என்பது நீ. அற்ப சக்தி அற்பஞ்ஞுத்தன்மை முதலிய தர்மசகிதஜீவனும் அஸி என்னும் பதம் இருக்கின்ருய் என்பதாம். அது நீயா இருக்கின்ருய் என்று கூறுவதாம். அதனுல் ஜீவேஸ்வரர்களின் ஏகத்துவம் வாச்சியார்த்தத்தால் விளங்குவதாம்.

அது பொருந்தாது ஏன் எனின்! சர்வ ச க் தி மா ன் அற்ப சக்திமான், சர்வஞ்ஞன், அற்பஞ்ஞன், வியாபகன், பரிச்சின்னன், சுதந்திரன், பரதந்திரன், மாயையைக்சுவாதினமாயுள்ளவன். அவித்யாமோகிதன் என்னும் இத்தன்மையரான இருவரும் ஒன்றெனக்கூறுதல் நெருப்புச் சீதளமா உள்ளது என்பதற்குச்சமானமேயாம். ஆதலால் நல்ல புத்தியுள்ளவனே நீ! இலக்கணையால் இலக்ஷியார்த்தத்தை அறிந்துகொள்ளுதி! வாச்சியார்த்தத்தில் விரோதமிருக்கின்றது. என் அன்பனே! மகாவாக்கியத்தில் விட்ட இலக்கணையும், விடாத இலக்கணையும் பொருந்தாவாம் ஆதலின் பாகத்தியாக இலக்கணையே மகாவாக்கியத்தில் அறிதல் வேண்டும் அதனுல் விரோத பரிகாரமாமென்பர்.

## மகாவாக்கியத்தில் விட்ட இலக்கணை அசம்பவம்.

சகலஉபநிடதங்களாலும் அறியத்தக்கவை சாக்ஷிசேதனமும் பிரஹ்ம சேதனமுமாம் அந்த இருவித சேதனமும் துவம்பத தத் பதங்களின் வாச்சியார்த்தத்தில்பிரவேசித்திருக்கின்றன விட்ட இலக்கணை கொள்ளுமிடத்தில் வாச்சிய பாகம் முழுதும் விடும் வாச்சியத்தின் சமபந்தி வேறு ஞேயமாம். ஆதலால் மகா வாக்கியத்தில் விட்ட இலக்கணையை அங்கீகரிக்கின் வாச்சியத்தில் உள்ள சேதனத்தைவிட வேறு புதிதான ஒன்றே ஞேயமாம். சேதனத்தின் பின்னமானது அசத்து, ஜடம் துக்கமேயாம். ஆதலால் மகாவாக்கியத்தில் விட்ட இலக்கணை பொருந்த மாட்டாவாம்.

## மகாவாக்கியத்தில் விடாத இலக்கணை அசம்பவம்.

அன்பனே! விடாதஇலக்கணை இருக்குமிடத்தில் வாச்சியார்த்த முற்றுமிருக்க வாச்சியத்திற்கு அதிகமானதும் கிரஹிக்கத்தக்கதேயாம். மகாவாக்கியத்தில் விடாத இலக்கணையை அங்கீகரிக்கின் வாச்சியார்த்த முற்றும் இருக்கும். வாச்சியார்த்தம் மகாவாக்கியத்தில் விரோதத்தோடு கூடியதா இருக்கின்றது. விரோதத்தை நீக்குவதற்கு இலக்ஷணையை அங்கீகரிக்கப்படுகின்றது. விடாத இலக்கணையை அங்கீகரிப்பதால் மகாவாக்கியத்தில் விரோத பரிகாரமில்லை ஆதலால் விடாத இலக்கணை மகாவாக்கியத்தில் கொள்ளத் தக்கதன்று என்பர்.

## மகாவாக்கியத்தின் பாகத்தியாக இலக்கணையை அங்கீகரித்தல்.

அன்பனே! தத் பதத்தின் வாச்சியம் ஈசுரனும் துவம் பதத்தின் வாச்சியம் ஜீவனும் இவர் இருவருக்குமுள்ள விரோத தர்மங்களை விட்டு சுத்தமாயும் அஜங்கமாயும் அத்

வைதமாயுமுள்ள சேதனத்தைஇலக்கணையினால் நீஅறிவாய் இதுவே பாகத்தியாக இலக்கணையாம். இவ்விடத்தில் இது சித்தமாம். ஜீவேஸ்வரர்களின் சொருபங்கள் அநேக பிர காரமாக அத்வைத கிரந்தங்களிற் கூறப்பட்டுள்ளன.

விவரண கிரந்தத்தில் அஞ்ஞானத்தின் பிரதி பிம்பம். ஜீவனும் பிம்பமே ஈசுரனும் எனப்படுகின்றது. வித்தியா ரண்ய சுவாமிகள் சுத்த சத்துவ குணமாயையின் உள்ள ஆபாஸமே ஈசுரனும் மலின சத்துவகுண சகித அந்தக்கர ணத்தின் உபாதான காரணமான அவித்தையில் உள்ள ஆபாஸமே ஜீவனுமாம் எனக்கூறியுள்ளார்கள் வேதாந்தத் தின் பிரக்கிரியைகள் யாவும் அத்வைத ஆத்மாவை அறி வித்தற் பொருட்டேயாம். ஆதலால் ஞானவிருப்புடையோ ருக்கு எந்தப்பிரக்கிரியையால் எளிதாகஞானமுண்டாகுமோ அந்தப்பிரக்கிரியையே நலமுடையதாமெனக் கொள்க அங் ஙனமாயினும் வாக்கிய விருத்தியிலும் உ ப தே ச சகஸ்ரீ என்னும் கிரந்தத்திலும் பாஷ்யகாரரால் ஆபாச வாதமே எழுதப்பட்டிருக்கின்றது. ஆதலால் ஆபாச வாதமே முக்கி யமாம் என்று அறிக.

## மகா வாக்கியத்தின் பொருளை சலனமற்ற சித்தத் தால் யாம் கேட்டுக்கொண்டபடியே அநுவாதம் செய்தல்.

எங்கே பதத்தின் மத்தியில் ஓர் பாகம் தியாகமும், ஓர் பாகம் கிரஹணமுமாமோ அங்கே பாகத்தியாக இலக்கணை உண்டு. அந்தப்பாகத்தியாக இலக்கணையை விட்டு விடாத இலக்கணை என்றும் கூறுவர். எங்ஙனம் எனில் முன்னே கண்ட தேவதத்தன் என்னும் ஓர் புருடனை அந்நிய தேசத் திற் கண்டு அவனே இவன் எனக்கூறின் அங்கே பாகத் தியாக இலக்கணை உண்டு. எதனால்எனின் அதீதகாலத்தில்

அந்நிய தேசத்தில் உள்ளவனை அவன் என்பர். ஆகலின் அதீத காலமும் அந்நிய தேசங்களுடன் கூடினவன் அவன் என்னும் பதத்திற்கு வாச்சியார்த்தமாம் வர்த்தமான காலத்தில் சமீப தேசங்களோடுங் கூடினவன். இவன் என்னும் பதத்திற்கு வாச்சியார்த்தமாம் ஆகவே அதீத காலமும் அந்நிய தேசங்களுடன் கூடினவனே வர்த்தமான காலமும் சமீப தேசங்களோடு கூடினவனும் என்னும் இது வாச்சியார்த்தமாம் ஆகவே அதீத காலமும் வர்த்தமான காலமும் ஒன்றுக்கொன்று விரோதமாயும் அப்படியே அந்நிய தேசமும், சமீப தேசமும் ஒன்றுக்கொன்று விரோதமாயுள்ளன ஆகலின் இரண்டு பதங்களிலுமுள்ள தேசகாலங்களாகிய வாச்சிய பாகத்தை விடுத்து தேவதத்தனுடைய தேக மாத்திரத்தில் இரண்டு பதங்களின் பாகத்தியாக இலக்கணை உண்டென்பர். அதாவது இவற்றின் இலக்ஷிய பாகம் சரீரமாம். வாச்சிய பாகம் இரண்டிற்கும் சம்பந்தம் இல்லையாம். ஆகலின் வாச்சிய பாகத்தை விடுத்து அவனது இலக்ஷிய பாகமாகிய சரீரத்தை நோக்குங்கால் அவற்றிற்கு வேற்றுமை இல்லை வாச்சிய பாகத்தை விடுத்து இலக்ஷிய பாகமாகிய சரீரத்தை விடப்படாத படியால் இது விட்டு விடாத இலக்கணை ஆயிற்று இவற்றின்சம்பந்தம் அதிஷ்டானத்தன்மைச்சம்பந்தமாம் இவற்றின் இலக்ஷிய பாகமாகிய சரீரத்திற்கு அபேதத் தன்மைச் சம்பந்தம் உள்ளனவாம்.

## இவற்றிற்கு உதாரணம்.

பன்னியஸோயம் என்னும் பதங்களின் வாச்சியார்த்தம்
அன்னிய தேசங்காலம் அவன் இவன் என்பவெல்லாம்
சொன்ன இவ்விரோதம் விட்டுத்தொடர் இலக்கியம்.
விடாமல்
உன்னிடிற்தேவதத்தன் ஒருவனை வெளியாக்காட்டும்.

கைவல்யம்.

இந்த விட்டு விடாத இலக்கணேயே மகாவாக்கியத்திற்குப் பொருள் கொள்ளும் சாதனமாம். அது எவ்வாறு எனின் அதனே,

## தாஷ்டாந்தத்தில் பொருத்திக் காண்பிப்பாம்.

தத்துவம் என்னும்பதங்களுக்கு! தத் என்பது அது! ஈசுரனும் துவம் என்பதுஜீவனும்! இவ்வாக்கியத்திற்குஈசுரனேசர்வஞ்ஞன்! ஜீவனேஅற்பஞ்ஞன்!ஈசுரன்சர்வசக்திமான்ஜீவன்அற்பசக்திமான்

| | |
|---|---|
| ஈசுரன் வியாபகன் | ஜீவன் பரிச்சின்னன் |
| ஈசுரன் சுதந்திரன் | ஜீவன் பாரதந்திரன் |
| ஈசுரன் பரோட்சன் | ஜீவன் அபரோக்ஷன் |
| ஈசுரன் மாயையைச் சுவாதீனமாயுள்ளவன் | ஜீவன் அவித்யாமோகிதன் |

என்னும் இத்துணேயாயுள்ள ஜீவேசுரர் இருவருக்கும் ஏகத்துவம் கூறுதல் நெருப்புச்-சீதளமாயுள்ளது. என்பதற்குச் சமானமேயாம், ஆதலால் நல்ல புத்தியுள்ள மைந்தனே! நீ இலக்ஷணேயால் இலக்ஷியார்த்தத்தை அறிந்து கொள்ளுதி. இத்தகைய உயர்வும் தாழ்வுமாய் அமைந்த இவ்விருவருக்கும் எவ்வாறு ஏகத்துவம் பொருந்தும் எனின் அவை பொருந்துமாறு.

## ஈசுரனுக்கு வாச்சிய இலக்ஷியங்கள்.

வாச்சிய பாகமாவது! விராட்டு இரண்ய கர்ப்பன் அவ்வியாகிருதன்என்னும் சரீரத்திரயமும்! சிருஷ்டி, திதி சம்மாரம்என்னும் அவஸ்தாத்திரயமும் வைஸ்வானரன், சூத்திராத்மா, அந்தரியாமி என்னும் அபிமானத்திரயமும்!என்னுமிவை ஒன்பதும் ஈசுவரனது வாச்சிய பாகங்களாம் இவற்றின்இலக்ஷியபாகமோ சுத்தப்பிரஹ்மமாம். இவ்விரண்டிற்குமுள்ள சம்பந்தம் அதிஷ்டானத்தன்மை சம்பந்தமாம்.

## ஜீவனுக்குள்ள வாச்சிய இலக்ஷியங்கள்.

வாச்சிய பாகமாவது! தூலம், சூட்சுமம், காரணம் என்னும் சரீரத்திரயமும், சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி என்னும் அவஸ் தாத்திரயமும் விசுவன், தைசஸன், பிராஞ்ஞன் என்னும் அபிமானத்திரயமும் ஆகிய இவை ஒன்பதும் ஜீவனது வாச்சிய பாகங்களாம். இவற்றின் இலக்ஷிய பாகமோ கூடஸ்த வடிவ ஆன்மாவேயாம். இவ்விரண்டிற்குமுள்ள சம்பந்தம் அதிஷ்டானத் தன்மைச் சம்பந்தமாம். இவ்விருவருக்குமுள்ள வாச்சிய பாகங் களை விடுத்து இலக்ஷிய பாகத்தைக் கொள்ளின் ஏகத்துவம் பொருந்தும்.

வாச்சிய பாகங்கள் இரண்டும் விட்ட இலக்கணையாம். இலக்ஷிய பாகங்கள் இரண்டும் விடாத இலக்கணையாம். இந்த இரண்டிற்குமுள்ள சம்பந்தம் அதாவது சுத்தப்பிரஹ்மத்திற்கும் கூடஸ்த வடிவ ஆத்மாவிற்குமுள்ள சம்பந்தம் அபேதத் தன்மை சம்பந்தமாம்,

ஈசுரனது வாச்சிய பாகங்களாகிய ஒன்பதும், ஜீவனது வாச்சியபாகங்களாகிய ஒன்பதும் விடுத்து இலக்ஷிய பாகங்களை நோக்குங்கால் இவ்விரண்டு பாகங்களும் சுத்தப் பிரஹ்மமே ஆகும்.

### இவற்றிற்கு உதாரணம் கைவல்யம்.

பூச்சிய ஈசன் ஜீவன் புகல் பதம் இரண்டினுக்கும்
வாச்சியம் இலக்ஷியந்தான் மலமிலாப் பிரஹ்மம் ஆன்மா
காச்சிய பாலில் நெய் போல் கலந்து ஒன்றும்
ஆச்சிய மென்ன உன்னை அறிந்து நீ பிரிந்து கொள்ளே.

தூயதத்துவமசி மகாவாக்கியத்தினாலே துரியபரர்க்கு
உளது ஏகத்துவம் என்கை கடாதி
ஆய உபாதிகள் அகற்றி விசும்பு ஒன்றே எனவும் அகற்றி
மநுடத்தன்மை இராமனை நீ தானே



மாயவன் தான் எனவும் கன்னனை வேடு கழித்து
மகன் குந்திக்கு எனவும் ஒருதசமனை மாய் துயரம்
போய் அகல ஒழித்து நீயே தசமன் எனவும்
புகலுதல் போல் சுபாவ சித்தமாகுவதே அன்றி
வேதாந்த சூடாமணி.

## இரண்டு பதங்களின் இலக்கணையை ஓதப்புரோத பாவமாகக் கூறுதல்.

இரண்டு பதங்களிலும் இலக்கணையை அங்கீகரிக்கிற்ருேஷமில்லை ஏன் எனின்! ஏகத்துவத்தின் விரோதியான தர்மங்கள் எல்லாவற்றையும் விட்டு இரண்டு பதங்களிலுமுள்ள பிரகாரம் சேதன ருப வாச்சிய பாகம் எதுவோ அவவெல்லாத்தர்மங்களும் இன்றிய சேதனத்தில் இரண்டு பதங்களுக்கும் இலக்கணையாம்.

உபாதியினுலும் உபாதியினுல் ஆகிய தர்மங்களினுலும் சேதனத்திற்கு பேதமிருக்கின்றது. ஸ்வருபமாகவோ இல்லை. உபாதியையும் உபாதிகளினுலாகிய தர்மங்களையும் விடுவதனுல் இரண்டு பதங்களின் இலக்ஷியமான சேதனத்திற்கு ஏகத்துவம் சம்பவிக்கின்றது. கடாகாயத்தில் கட திருஷ்டியை விட்டு மட விசிஷ்ட ஆகாயத்தோடு ஏகத்துவம் பொருந்துகின்றதில்லை. மட திருஷ்டியை விடுவதனுல் ஏகத்துவம் பொருந்துகின்றது,

தத்துவம் என்று கூறுவதனுல் தத் பதத்தின் அர்த்தத்திற்கு துவம் பதத்தின் அர்த்தத்தோடு அபேதங் கூறப்பட்டது ஆகின்றது.

அந்தத் தத் பதத்தின் அர்த்தம் வியாபகமா இருத்தலினுல் பரிச்சின்னத் தன்மை பிராந்தி நீங்குகின்றது.

தத்துவம் என்று கூறுவதனுல் தத் பதத்தின் அர்த்தத்திற்கு துவம் பதத்தின் அர்த்தத்தோடு அபேதம் கூறப்பட்டது. அந்தத் துவம் பதத்தின் அர்த்தமாகிய சாக்ஷி நித்திய அபரோக்ஷமா

இருக்கின்றது. அதனால் பரோக்ஷத் தன்மைப் பிராந்தி நீங்குகின்றது.

உபநிடத வாக்கியங்கள் யாவுமே ஜீவப்பிரஹ்மங்களின் ஏகத்துவத்தையே கூறுகின்றனவோ அங்கே முற்றும் பாகத் தியாக இலக்கணையே அருத்தமாகக் கொள்ளுதி.

இதில் நான் பிரஹ்மம் என்னும் ஞானம் யாவர்க்குண்டாகின்றது.

இந்த ஞானம் சிதாபாசனுக்கே உண்டாகின்றது.

பிரஹ்மத்திற்கு வேருகிய சிதாபாசன் தன்னை எவ்வாறு பிரஹ்ம ரூபமாக அறிகின்ருன். ஜீவத் தன்மைக்கு அதிஷ்டானமான கூடஸ்தருக்குப் பிரஹ்மத்தோடு முக்கிய அபேதம் இருக்கின்றது. ஆகலின் புத்தியோடு கூடிய சிதாபாசனுக்கு தனது சொருபத்தை பாதித்தலால்பிரஹ்மத்தோடு அபேதமிருக்கின்றது. ஆகையால் சிதாபாசன் தனது சொருபத்தைப் பாதித்து தன்னை அஹம் சப்தார்த்தத்திற்கு இலக்ஷியார்த்தமாகிய கூடஸ்த வடிவ ஆத்மாவை தனது ஸ்வருபமாகவே அறிகின்ருன். தனது நிஜ ரூபமாகிய கூடஸ்தரை நான் கூடஸ்தன் என்று அபிமானித்துக் கொண்டு அதனைப் பிரஹ்ம ரூபமாகவே அறிகின்ருன்.

## ஜீவனுக்குள்ள ஏழு அவஸ்தைகள்.

1. அஞ்ஞானம், 2. ஆவரணம், 3. விக்ஷேபம், 4. பரோக்ஷம், 5. அபரோக்ஷம், 6. துக்க நிவிருத்தி, 7. நிரங்குச திருப்தி என ஏழாம்.

1. சமுசாரப் பற்றுள்ள சிதாபாசனுன ஜீவன் சுருதி விசாரத்துக்கு முன் தன் நிஜ ருபமான சுயம் பிரகாச வடிவ பிரத்யக் ஆத்மாவை அறியாதிருந்ததே அஞ்ஞானமாம்.

2. பின் ஒவ்வொருவேளைசிதாத்மப்பிரசங்கங்களைக்கேட்ட இடத்தில் பிரத்யக் ஆத்மா இல்லை இருந்தால் தோன்ருதா என்னும் இவ்விருவகையான மறைப்பே அஞ்ஞானத்தின் காரியமான ஆவரணமாம்.

3. பின் தானே கர்மத்தைச் செய்பவன் தானே கர்ம பலத்தைப் புசிப்பவன் என்று எண்ணுவதே விக்ஷேபமாம்.

4. பின் ஆத்மாவைச் சொல்லும் வேதாந்த வாக்கிய விசாரத்தால் பிரத்யக் ஆத்மாவே உண்டு என்று அறிவதே முதலாவதான அசத்தாவரணத்தை நிவர்த்திக்கும் (அதாவது சத்தையின் மறைப்பைக் கெடுக்கும்) பரோக்ஷ ஞானமாம்.

5. பின் நீயே பிரஹ்மம் என்றும் சொல்லும் வேதவாக்கிய விசாரப் பிரவாகத்தால் பிர்த்தியக் ஆத்மாவே நான் என்று அறிவதே இரண்டாவதாகிய அபாநுவரணத்தை நிவிருத்திக்கும் (விளக்கத்தின் மறைப்பைக் கெடுக்கும் அபரோக்ஷ ஞானமாம்.

6. பிரத்யக் ஆத்மா சாக்ஷாத்காரம் ஆனபின்னரும் நான் கர்மத்தைச் செய்பவன். நானே கர்ம பலத்தைப் புஜிப்பவன் என்னும் ஜீவத்துவ ருப துக்கத்தின் பரித்தியாகமே சோக நிவிருத்தியாம்.

7. செய்யத் தக்கனவான கிருத்தியம் யாவும் செய்யப்பட்டன என்னும் சகஜ சந்தோஷமே நிரங்குச திருப்தியாம்.

சோக நிவிருத்தியும், நிரங்குச திருப்தியும் ஆகிய இரண்டு அவஸ்தையும் அபரோக்ஷ ஞான பலமாம்.

## ஏழு அவஸ்தைகளின் சமஸ்வயம்.

சுயம் பிரகாச சித்ருபமுன ஆத்மாவிற்கு நித்திய அபரோக்ஷத்துவம் இருத்தலால் அதனிடத்து அஞ்ஞானமுதலிய

ஏழு அவஸ்தைகள் எங்ஙன் ஆம் எனின்,

## திருஷ்டாந்தம்.

பத்துப்புருடர்கள் ஒன்ருகக்கூடி ஓர் நதியைக் கடந்து, போய் தீரத்தில் தம்மை எண்ணும் சமயத்தில் அவருள் ஒன் பது புருடரையெதிரிட்டு எண்ணும் ஒருவன்

1. தன்னைப் பத்தாமவன் என்று அறியாததே அஞ்ஞான மாம்.

2. பின் பத்தாமவன் இல்லை அவன் இருத்தால் தோன் ருஞ என்னும் இருவகைப் பிராந்தியே அஞ்ஞானத்தின் காரியமான ஆவரணமாம்.

3. பின் பத்தாமவன் நதியுள் இறந்தனன் என்னும் நினைப்பே விக்ஷேபமாம்.

4. பின் ஒரு ஆப்த வசனத்தால் பத்தாமவனைச் சுவர்க் கமே போல் உண்டென்று அறிவதே பத்தாமவன் இல்லை என்னும் முதல் ஆவரணத்தின் விரோதியான பரோக்ஷ ஞானமாம்.

5. பின் ஒன்பது புருடருடன் உன்னைக்கூட்டியெண்ணி நீயே தசமன் என்று தெளிவிக்கத் தானே தன்னைப்பத்தாமவன் எனக்கண்கூடாகக் காண்பதே பத்தா மவன் தோற்றவில்லை என்னும் இரண்டாவதான ஆவரணத் திற்கு விரோதியான அபரோக்ஷ ஞானமாம்.

6. பின் பத்தாமவன் இறந்தான் என்னும் துக்கத்தினை விடுவதே சோக நிவிருத்தியாம்.

7. பின் நிஜஸ்திதியில் சுகமா இருப்பதே நிரங்குச திருப் தியாம். இவைகள் இவ்வாறு பொருந்துமென அறிக.

## ஞான பூமிகள் ஏழு.

1. சுபேட்சை, 2. விசாரணை, 3. தனுமானசி, 4. சத்துவா பத்தி, 5. அசம் சத்தி, 6. பதார்த்தா பாவனை, 7. துரிய காமி என ஏழு பூமிகள் அவற்றுள்,

1. நான் மூடனு இருக்கக் காரணமென்னை! அதனைச் சுருதி குருவினுல் அறியவேண்டும் என்பதே சுபேக்ஷையாம்

2. மேல் குரு சாஸ்திராதிகளாற் சிறிது தோன்றும் ஞான வைராக்கிய பலத்தால் உண்டாகும் சதாசாரப்பிரவிருத்தியே விசாரணையாம்.

3. மேல் சுபேக்ஷை விசாரணைகளின் பலத்தால் விஷயப் பற்றொழிவதே தனுமானசியாம்.

4. மேல் அப்பூமிகள் மூன்றன் அப்பியாச பலத்தால் சாக்கிரப்பிரபஞ்சம் எல்லாம்சொப்பனப்பிரபஞ்சம் என்றெண்ணி ஆத்மாவின் சன்மாத்திர அனுசந்தானமே சத்துவா பத்தியாம்.

5. மேல் சகல பிரபஞ்சத்தோற்றமும் உள் அடங்கு சுழுத்தனைப்போல ஆ த் ம ா சின்மாத்திரமாக நிற்றலே அஜம் சத்தியாம்.

6. மேல் சகல வாசனைகளும் ஒழிந்து காட நித்திரை அடைந்தவன்போல் ஆ ந ந் த வடிவ ஆத்மாவில் இலயமாவதே பதார்த்தா பாவனையாம்.

7. மேல்உண்டு இல்லை என்னுது அகங்கிருதி தோற்ருது கேவலம் ஞப்தி ரூபமான அத்வைத பதத்தில் வெறுங்கடம் போல் உள்ளும் பு ற மு ம் சூ னி ய ம ா இருப்பதே துரிய காமியாம்.

## பிரஹ்ம வடிவ ஆத்மாவை சச்சிதா நந்த வடிவமென அநுபவ ரூபமாய் அறியும் தன்மை.

நாசத்தையுடைய இச்சரீரத்தின் கண் அபிமானியாய் இருக்கின்ற சரீரியை நான்கு வேதங்களிலுள்ள நான்கு மகாவாக்கியங்களும் நீயே சச்சிதா நந்தம் என்று உபதேசம் செய்யினும் நீயே சச்சிதா நந்தமென்று ஆசிரியர் உபதேசம் செய்யினும் குற்றமற்ற சச்சிதா நந்த வடிவப் பிரஹ்மமே நான் என்னும் அநுபவம் சரீரியாகிய இப்புருடனுக்கு நிலை பெற்ற அச்சிதா நந்தங்களின் அநுபவம் எவ்வாறுண்டாம் எனின்,

அந்நிய ஜனனங்களில் தான் மனம் வாக்குக் காயமென்னும் மூவித கரணங்களாற் செய்த கர்மங்களே ஓர் உடம்பினைத்தரும் என்று கூறின் சென்ற காலத்திலும் இச்சரீரி என்பவன் இருக்கின்றான் அல்லவா! இனி நிகழ்காலத்திலும் இவன் செய்யாநின்ற பாவ புண்ணியத்திற்கு அநுபோகமாக முறையே நரகமும் சுவர்க்கமும் உண்டென்று கூறின் இனி வருங்காலத்திலும் இச்சரீரீ யாதனா சரீரம் தேவ சரீரங்களைத் தரித்துக்கொண்டு இருக்கின்றான் அல்லவா சித்தப்பிரமைக்கு காரணமான யாதனா சரீரமும் தேவ சரீரமும் மநுட சரீரமும் அநேகமாய் வேறு வேறாய் நாசமடையும். இப்படியே தனது மாயா மயமாகிய சரீராதிகள் நாசமடையினும் இச்சரீரி மூன்றுகாலத்திலும் நாசமின்றி இருத்தலான் இவனை சத் தென்று சொல்லுவது யாவர்க்கும் சம்மதமேயாம்.

மழை நிசி இருள் போல யாதொரு விஷயமும் தோன்றாமற் போக மறைக்கின்ற சுழுத்தியின் கண்ணே மயக்கமின்றி அவித்தையாகிய இ ரு ளை யு ம் அதிற் பிரதிபலித்த ஆனந்தத்தையும் சூரியன் முதலிய பாகியப் பிரகாசங்கள் ஒழிந்த காடாந்தகாரத்தில் இரவில் உண்டாகும் சாக்கிரத்தின் கண்ணே யாதொரு மயக்கமும் இல்லாமலே காடாந்தகாரத்தையும் அதில் சாமானிய

மாகப் ஸ்பரிசத்தாற்றேற்றும் கடபடாதிப் பொருள்களையும் அறி கின்ற தன்மையால் சித்து என்பது அநுபவ ரூபமேயாம்.

பேரானந்தத்தால்நிரதிசயமாகிய தான் தானே தன்னிடத்து மாருத பிரமை வைத்திருப்பதால் குறைவின்றிய அப்பிரியமானது யாவர்க்குமே துக்கத்தில் உண்டாகாமல் சுகத்தின் கண்ணேயே உண்டாவது இது உலகப்பிரசித்தம். ஆதலால் இவன் ஆனந்தனே என்பது அநுபவ ரூபமாம்.

அந்நபான முதலிய! சுகத்திற்குச் சாதனமாவது ஆகையால் யாவர்க்கும் அவை அதிகப்பிரியமேயாகும். இப்படியே ஆத்மாவும் ஆநந்தத்திற்குச் சாதனமென்று எண்ணுவது சுருதி விரோதமேயாகும். சுக ரூபமே ஆம் என்று கூறிய ஏகரூபமாகிய ஆன்மாவை அன்னபாளுதிகள் என்னும் சுக சாதனங்களோடு சேர்த்து இதுவும் சுக சாதனமென்று கூறின் உன்னுடைய அநுகூல விஷயமான ஆனந்தம் வேறே யாது அதனை அநுபவியா நின்ற கர்த்தா வேறே யார் விஷய பாவம் விஷயீ பாவம் ஆக ஆத்மாவானது இரண்டாயுள்ளதா இல்லை ஒன்றேயாம்.

விஷயங்களில் உண்டாகும் சுகத்தின் கண் வருவது பிரீதி மாத்திரமேயாகும். அது நிரதி ஜயப்பிரீதியன்று ஆத்மாவின் கண் வருவது நிரதி ஜயப்பிரீதியாம். ஆதலால் விஷயத்தில் உண்டாம் பிரீதி போன்று அல்லவாம் எதனுல் எனின் விஷயத்திலுண்டாம் பிரீதி மாறி விடும் மேலும் அந்நிய சுகத்திலும் செல்லுகின்றது. அந்த விஷயத்திலேயே நியமமாம் இருக்கவில்லை ஆனுல்,

ஆத்மாவின் கண்ணுள்ள பிரியமோ மாறுபடுவது இன்ரும் ஆதலால் ஆத்மாவின் கண்ணுள்ள பிரீதியே நிரதி ஜயமாம். ஒரு விஷயத்திலுண்டாம் சுகத்தினை விடவும் கூடும் அதனைப் பற்றவும் கூடும். இவ்வாத்மாவையோ தள்ளத்தக்கவனும் கொள்ளத்தக்கவனும் அலன் ஆதலால் விடயங்களில் உண்டாம் சுக போகங்களை விடும்படியான ஆத்மாவை அவ்வாத்மாவால் ஒரு காலத்திலும் விட முடியாததேயாம்.

விருக்ஷமானது தானடைந்த அக்கினியால் வேதல் போன்று தானடைகின்ற வியாதி முதலிய கோபங்களால் என்னை யான் கொலை செய்து விடுகிறேன் என்று சொல்லி ஓர் ஓர் காலத்தில் மரணம் அடைதலின் ஆத்மா தன்னையே தான் கொன்று விடுகிறேன். எனச்சொல்லுதல் அன்று பின்னரோ இத்தேகத்தின்வேருகவே இருந்து அதனைக்கொன்று விடுகின்ற இச்சீவன் ஆகிய இவனால் விடப்பட்ட இத்தேகம் அவன் அல்லனும் அந்நியமான தேகத்தின் கண் துவேஷமே அல்லாமல் தன்னை ஒருபோதும் ஆத்மாவாகிய தான் துவேஷிப்பதே இல்லையாம். யாவரும் பிரியப்படும் பொருளினும் புத்திரன் பிரியமாம், புத்திரனிலும் அந்நியமான தேகத்தில் பிரியமாம், தேகத்திலும் இந்திரியங்கள் மிகப் பிரீதியாம், இந்திரியங்களினும்பிராணன்பிரீதியாம், பிராணனிலும் ஆத்மா மிகப்பிரீதியாம், ஆகலின் இச்சாக்ஷியே பிரதான ருபமாம்

இந்த விசாரத்தால் ஆத்மா சச்சிதா நந்த ஐஸ்வரியமுள்ளதே எனச்சித்தாந்தமாயினவாம்.

---

## ஜீவன் முத்தர் தவ வழிகள்.

வியாசாதிகள் போல சாபானுக்கிரக சாமார்த்தியம் எவனுக்குண்டோ அவனே தத்துவஞானி அல்லால் வேறெயொருவனுமாகான் எனின் அச்சாமார்த்தியம் தவத்தின் பயனேயன்றித் தத்துவ ஞானத்தின் பயன் அன்று. அன்றித் தத்துவ ஞானத்திற்கும் தவமே காரணம் என்னும் சுருதி இருத்தலினுல் தவமிலாத்வர்க்கு தத்துவ ஞானமேதெனின் சாபாதிகளுக்குக் காரணம் காமியத் தவமே என்றும் தத்துவ ஞானத்திற்குக்காரணம் நிஷ்காமியத் தவமே என்றும் அறிந்து கொள்ளவும் அவ்வியாசாதிகட்குத் தத்துவ ஞானமும் சாபாதி அனுக்கிரகமும் ஆகிய இரண்டும் இருப்பது என்னை எனின் அவர்களிடத்து இருவகைத் தவமும் இருத்தலால் ஞானமும் சாமர்த்தியமும் என இருவகைப்பயனும் உள்ளது. ஒவ்வொன்றை ஆசிரயத்தவர்க்கு ஒவ்வொன்றே சித்திக்கும் அத

ுல் விரோதமில்லை சாபாதி சாமர்த்தியமின்றிய விதி சூனியனுன தத்துவ ஞானியைக் கிரியா நிஷ்டர் எல்லோருமே நிந்தனை செய்வதென்னை எனின்! கிரியா நிஷ்டர்களையும் விஷயத்தில் அழுந்திய மூடர் நிந்தை செய்கின்றூர்கள். அந்நிந்தையால் அவருக்கு வைஷம்யமில்லை. அ ந் த விஷயப்பற்றுடையோரது நிந்தையும் கிரியா நிஷ்டருக்கு ஆனி இல்லாதது போல தே க ா த் ம மதியுடைய கிரியா நிஷ்டர் செய்யும் நிந்தையால் தத்துவ ஞானிக்கு யாதொரு ஹானியுமில்லை.

ஆகமப் பிரமாணத்தால் அறி என்றும். வாக்குக்கு எட்டாது ஏகமாம் பிரஹ்மம் என்றும். இதயத்தால் உணர்வாய் என்றும் சோகமாம் மனத்திற்கு எட்டாச் சுயம் ஜோதி என்றுஞ் சொன்னீர் மோகமாம் இரண்டு சங்கை முனைத்தன பரித்திடீரே.

---

தன்னுல் விசேஷித்துத் தெளியக் கூடாமையின் மோகமாம் என்னும்பயிருக்குக்கோரையாகிய களைகளைப்பரித்து எறியாவிடின் அது பலத்தைப் பயவாததே போல சந்தேக நிவிர்த்தி செய்யாவிடில் ஞானமும் சம்சார நிவிருத்தி ரூபமான பலத்தைப் பயவாதன்றே ஆகலின் இரண்டு சங்கை முனைத்தன பரித்திடீர் என்று கூறினுன்.

---

பிரஹ்மமானது யாதொரு வாக்கியத்திற்கும் எட்டாது எனக் கூறிய சுருதியானது தத்துவமஸி மகாவாக்கியத்தில் (தத் பத, துவம் பத) அர்த்தங்களை இலக்ஷணு விருத்தியால் அறிவித்ததல்லவா. ஆகலின் பிரஹ்மமானது சுருதி வாக்கியங்களுக்கு கோசரமாம். ஆனுல் அவ்விருவகை வாக்கியங்களில் பிரமாணமாவது யாது எனின்! அவ்வாக்கியங்கள் இரண்டும் உண்மையேயாம் வேதங்கள் பொய்மையா கூறும் அவை கூறிய வாக்கியங்கள் இரண்டும் மெய்மையேயாம்.

## இதற்கு உதாரணமாகப் பொருந்தக் காட்டல்.

சில புருடரோடு கூடி நின்ற நாயகனையுடைய ஓர் நாயகியை மற்றொருத்தி நோக்கி உனது நாயகன் இவனு, இவனு என்று அக்குழுவில் உள்ளவரை ஒவ்வொருவரையும் சுட்டிக் கேட்டு வர அதற்கு அந்த நாயகியானவள் தனது நாயகன் அல்லாதவரை இவன் அல்லன், இவன் அல்லன், என்றே கூறி வந்தனள் தனது நாயகனைச் சுட்டிக் கேட்ட அளவில் அவள் நாணமுற்றுச் சும்மா இருந்தனள் என்னும் நியாயம் போலப் பிரஹ்மம் அல்லாதவைகள் ஜடமாதலால் அவைகளை இது பிரஹ்மம் அன்று இதுபிரஹ்மம் அன்று எனஒவ்வொன்றாக நீக்கிப்பின்னர் சேடமாய் நின்ற சேதன ரூபமான பரப்பிரஹ்மத்தையே மௌன ரூபமா இருந்து அவ்வேதமானது தரிசிப்பித்தது என அறிந்து கொள்ளவும்.

## மனதிற்கெட்டும் எட்டாது என்பது எவ்வாறு எனக்கூறல்.

அந்தக்கரணத்தின் விருத்தியும் சிதாபாசம் என்னும் ஜீவனுங்கூடிய விகாரமே மனம் என்று சொல்லுவர் பெரியோர், அந்தக்கரணத்தினின்றும் எழா நிற்கும் பிரஹ்மாகார விருத்தி மாத்திரத்தை அபேக்ஷிக்கும்நியாயத்தால் பிரஹ்மமானது மனதுக்குக் கோசரம் ஆம். சிதாபாசனோடு கூடிய விருத்திக்குப் பிரஹ்மம் ஆனதுகோசரமாகாவாம்ஆகலின்பிரஹ்மமானதுமனதிற்குஎட்டும் எட்டாது என்று சுருதிகூறியதற்கு பொருள் இதுவென அறிந்து கொள்ளவும் மேலும் மலம், விக்ஷேபம், அஞ்ஞானம் என்னும் முத்தோஷங்களோடு கூடிய புத்தி விருத்திக்கு பிரஹ்மம் விஷயமன்று அத்தோஷங்களின்றிய புத்தி விருத்திக்கே விஷயமாம். என்று கூறுவர் உயர்ந்தோர். வாக்கிய விருத்தி இலக்ஷண விருத்தியின் இலக்கணங்கள் மகாவாக்கிய விசாரத்திலும் முத்தோஷங்களின் இலக்கணம் அநுபந்த சதுட்டயங்கள் கூறிய இடத்திலும் விரித்து எழுதப்பட்டது.

## தேவாரம் திருநாவுக்கரையர் சித்தாந்தம்.

மைப்படிந்த கண்ணாளும் தானும் கட்சி மயானத்
தான் வார்சடையான் என்னின் அல்லால்
ஒப்புடையன் அல்லன் ஒருவன் அல்லன் ஓர் ஊ
ரன் அல்லன் ஓர் உவமன் இல்லி
அப்படியும் அந்நிறமும் அவ்வண்ணமும் அவன்
அருளே கண்ணுகக் காணின் அல்லால்
இப்படியன் இந் நிறத்தன் இவ் வண்ணத்தன்
இவன் இறைவன் என்று எழுதிக் காட்டொணுதே.

---

## ஆத்ம சாக்ஷாத்காரத்திற்கு பிரதி பந்தங்கள் மூன்றும்

அவை பூதப்பிரதிபந்தம், வர்த்தமானப் பிரதிபந்தம், ஆகாமியப்பிரதி பந்தமென ஆத்மசாக்ஷாத்கார விக்கினத் திரயங்கள். அவற்றுள்

1. மோக்ஷ அபேக்ஷையால் சர்வ சங்க பரித் தியாகமே செய்து ஸ்ரீ ஆசிரியரை அடைந்து சிரவணுதிகளைச் செய்தாலும் பூர்வாச்சிரமம் அங்கீகரித்திருந்த வனிதாதி வஸ்துக்களின் ருப யௌவன சிங்காராதி சத் குணங்களை அநுபவித்த அதுவே சமஸ்கார பலத்தால் வந்து வந்து துன்ப இன்பங்களை அடிக்கடி கொடுத்துச் சிந்திப்பித்து ஆத்ம சாக்ஷாத்காரம் ஆக ஒட்டாமல் தடுப்பதே பூதப் பிரதி பந்தமாம் என்பர்.

2. ஜட புத்தியும், ஜனச் சேர்க்கையும், விஷய ஆசக்தியும், குதர்க்கமும், அபிமானமும், சஞ்சலத் தன்மையும் முதலியன உண்டாய் தத்துவ விசாரம் செய்யினும் ஆத்ம

சாக்ஷாத்காரம் ஆகவொட்டாமல் தடுப்பதே வர்த்தமான பிரதிபந்தம் என்பர்.

3. தனக்குச் சில ஜன்மம் வந்தால் அல்லது பிரார்த்த விஷயம் நீங்காவாம் என்ற புத்தி பிரஹ்மலோக வாஞ்சை என்னும் தோஷத்துவம் உடையவனு இருந்து வேதார்த்தங் களை அறிந்திருந்தாலும் ஆத்ம சாக்ஷாத்காரத்திற்கு விரோ தம் செய்வதே ஆகாமியப்பிரதி பந்தமென்பர்.

## அவற்றின் நிவிர்த்திக்கு உள்ள சாதனங்கள்.

அந்தப்பிரதி பந்தங்களைக் கெடுத்தற்குக் காரணமாக ஞானம், வைராக்கியம், உபரதி என்னும் முக்கிய சாதனங்களை இடைவிடாது அப்பியாசம் செய்வதற்கு அவற்றின் காரணம் சொருபம், காரியம் என்னும் மூன்று வித இலக்கணங்களைச் செவ் வையாக எடுத்துக் காண்பிப்பாம்.

1. வேதாந்த சிரவணத்தால் உண்டாம் அத்தியாத்தும விவேகப் பிரயோகமுள்ள சாக்ஷித்துவ தரிசனமே ஞான இலக்ஷணமாம் சிரவணுதிகளேஞானத்தின் காரணங்களாம் ஆத்மா அகங்காரம் ஆய இவற்றினை வேறு பிரித்து அறி தலே ஞானத்தின் சொருபமாம். அகங்காரத்துள்ள சாக்ஷித் துவமே ஞானத்தின் காரியம் ஆம்.

2. போக அநித்தியத்துவ தரிசனத்தால் உண்டாகிய விரக்தியோடு கூடிய தன்மையே முக்கியமான வைராக்கிய மாம். வைராக்கியத்திற்கு வனிதாதி விஷயங்களில் அநித் தியத்வாதி தோஷதரிசனமே காரணமாம் மேல் எவ்விதத் தானுயினும் அவற்றை விடுவதே சொருபமாம் அவ்விஷயங் களில் மீண்டு செல்லாமையே காரியமாம்.

3. யோக ஜன்னிய சித்தத்தின் ஸ்திரத்தன்மையோடு கூடிய பாகியப் பிரபஞ்சத்தின் லயமே உபரதியாம். இயம நியமாதி அஷ்டாங்க யோகமே காரணமாம். மனம் தன்

ஸ்தானத்தில் ஏகாக்கிரமா இருப்பதே சொருபமாம். நிருவி கர்ப்ப சமாதியினுல் இலௌகிக வைதிகமென்னும் இரு வித வியவகாரமும் ஒழிந்து மனம் சொருபத்தில் அழுந்திக் கிடப்பதே காரியமாம்.

## ஞானுதிகளின் அவதி.

1. தேகாத்ம பாவம் திடமானது போலப் பிரஹ்மமே நான் என்னும் திட புத்தியே ஞானத்தின் அவதியாம்.

2. பிரஹ்ம லோகாதிகள் துரும்பெனக் காண்பதே வைராக்கியத்தின் அவதியாம்.

3. சுழுத்தினைப் போலச் சகல காரியங்களையும், நினையா திருத்தலே உபாதிக்கு அவதியாம்.

## ஜீவன் முத்தர்கள் விசித்திர சரிதம்.

ஸ்ரீ கிருஷ்ணன் போகி. சுகர் வாமதேவர் யோகி. ஜனகன். இராமன் அரசர்கள். வசிஷ்டர் கர்ம கர்த்தாவாம். இந்த ஐந்து பேரும் ஞானமுள்ளவராகச் சொல்லப்பட்டவர் அவ்வாறே தத் தாத்திரயர்உன்மத்தர், பிரஹ்லாதன் பத்தர். நாரதர் கானலோலர் ஜனகாதியர் யோகிகள். அநுமார் முதலியோர் தூதர்களாஇருந்த வர். என்னும் வாக்கியத்தால். ஜனகர். ஜயரதர். யாக்ஞ வல்கியர் சுகர் வாமதேவர், கௌதமர், வான்மீகி, விசுவாமித்திரர், துர் வாசர், வியாசர். பிருகு, சௌபரி ததீசி, சுவேத கேது, பரத்து வாசர், சுக்கிரர், இராவணன், விருஷபர் முதலியோர்கள் ஒழுக்க பேதமே நிதர் ஜனமேயாம்,

## ஜீவன் முத்தர்கள் அடையும் ஐந்து வித பிரயோஜனங்கள்.

ஜீவன் முத்தனுக்கு (1) ஞான ரக்ஷை (2) தவம் (3) சகல சம்வாதம் (4) துக்க ஜயம் (5) சுகாவிர்ப்பாவம்

என ஐந்து பயன்கள் உள்ளன அவற்றுள்.

1. வாசனுக்ஷயம் மனோ நாசங்களால் புத்தி நிருமலமா இருப்பதே ஞான ரக்ஷையாம்.

2. மனமும் இந்திரியங்களும் ஒருவழிப்படுதலே தவமாம்

3. தபோ நிஷ்டன் ஆதலால் பாலர் முதல் பண்டிதர் ஈருகயாவரும் யோகீசுரர் என்று வணங்குவதால் அதுவே சர்வ சம்வாதமாம்.

4. அஸ்மிதை முதலிய பஞ்சக் கிலேசங்களும் இல்லா திருப்பதே துக்க ஐயமாம்.

5. அச்சாதனங்களால் தனக்கொரு பிரதிபந்தமும் இன்றி இருப்பதே சுகாவிர்ப்பாவமாம்

## ஞானபல சதுட்டயம்.

(1) துக்காபாவம் (2) சர்வகாமாப்தி (3) கிருத கிருத்தியத்துவம் (4) பிராப்த பிராப்தியத்துவம் என ஞான பலம் நான்காம் அவற்றுள்.

1. துக்காபாவம். இகபரம் என்னும் பேதத்தால் இருவித மாம். அவற்றுள் தூல சரீரத்தில் வியாதி துர்க்கந்தத்துவ முதலியனவும் சூட்சும சரீரத்தில் காமக்குரோதாதிகளும் காரண தேகத்தில் ஆதி வியாதிகளுக்கு வித்தாகிய சமஸ் காரங்களும் ஆகிய மூவகைத் துன்பமும் இகலோகத் துக்க மாம்.

மித்யா சொருபமாகிய மாயா காரியமான தூல சரீராதி களின் வேறு பட்ட ஆத்ம ஞானத்தின் பின் பரமார்த்தமான போக்கிய போத்துருக்கள் இல்லாமையால் அந்தத் துக்கங் கள் மூன்றும் இல்லாதிருப்பதே இகலோக துக்கபாவமென் பர்.

புண்ணியம் எப்போது வருமோ பாவம் எப்போது போமோ என்னும் இச்சிந்தனேயே ப ர லோ க துக்கமென்பர். ஆத்ம ஞானத்திற்குப் பின் தாமரை இலையிற் தண்ணீர் போல அவ்விரு கருமங்களும் பற்ற மாட்டாவாம். அஃதெங்ஙனமெனில் விறகின் க ண் ணே நெருப்பிருக்கும் நெருப்பின் கண்ணே விறகு இருக்கமாட்டாவாம். அது போலகர்மத்துவய வியவகாரத்தில் விவேகி இருப்பன் அவனிடத்தில் கர்மத்துவய வியவகாரம் இருக்கமாட்டாவாம். அதனுல் காட்டுத்தீ பற்றியுள்ள ஓர் பர்வதத்தை பசு, பக்ஷிகள் ஒன்றும் சேராததுபோல ஞானக்கினி சொருபனே அப்புண்ணிய பாவகர்மங்கள் பொருந்தமாட்டாவாம். இவ்வாற்ருல் அச்சிந்தனே தோற்ருதிருப்பதே பரலோக துக்காபாவமென்பர்.

2. சர்வ ஐஸ்வரிய சம்பன்னன் ஆன சார்வ பௌமன் முதல் இரண்ய கர்ப்பன் ஈருயுள்ள ஆனந்தங்கள் முறையே ஒன்றின் ஒன்று நூறு மடங்கு அதிகமாயுள்ளயாவும் நிவர்த்தனுன விவேகிக்கு உண்டாயினும் அவ்வாநந்தங்கள்யாவும் பிரஹ்ம அம்ஷங்களாய் அகண்டானந்தம் சித்தித்தலால் அதுவே சர்வகாமாப்தியாம் என்பர்.

3. அவ் விவேகிக்கு தத்துவஞானம் உண்டாவதற்கு முன்னே இகலோக சம்பந்தமான இஷ்டப்பிராப்தி அநிஷ்ட நிவிருத்தியின் பொருட்டு கிருஷி வாணிச்சியாதிகளும் சுவர்க்காதி சித்தியின் பொருட்டு யாகம் உ பா ஸ னே முதலியனவும், மோக்ஷ சாதன ஞான சித்தியின் பொருட்டுச் சிரவணுதிகளும் ஆகிய மூவகைக் கர்த்தவ்வியங்கள் இருந்தது. ஆத்மஞானத்தினே அடைந்த பின்னர் சம்சார புத்தியோடு இகபோக இச்சை இல்லாமையால் கிருஷி முதலான வியவகாரமும் இல்லை. சாளரத்தின் வழி உட்புகுந்த சூரிய கிரணத்தில் காணப்படும் - பரமாணுக்கள் வெளியில் உள்ள பிரகாசத்தில் காணப்படாததுபோல அஞ்ஞானிக்கு விஷயமாம். கர்மமெல்லாம் ஞானி இடத்துத்

தோற்றுமையால் யாக உபாசனாதிகளும் அநுஷ்டிக்கத்தக்கனவாஇல்லை.பிரஹ்மானந்த சாக்ஷாத்காரம் இருத்தலான் சிரவணாதிகளும் செய்யப்பட்டனவேயாம் இதுவே கிருத கிருத்தியத்துவமாமென்பர்.

4. தனக்கு விசிஷ்ட புண்ணிய பரிபாகம் முமுட்சுத்துவம் குருபாதசேவை வேதாந்த சிரவணம் ஆத்மா அனாத்மா விவேகம் அஞ்ஞான நிவிருத்தி ஆத்ம சாக்ஷாத்காரம் சம்சார துக்கநிவிருத்தி. நிஜானந்தப் பிராப்தி முதலிய சித்திகளே பிராப்த பிராப்பியத்துவமாமென்பர்.

## விதேககைவல்யம் அடையும் கிரமம்.

மேல் எக்காலத்திலும் எத்தேசத்திலும் யாதொரு சரீரமும் அடையாமல் சச்சிதாநந்தப் பிரஹ்ம சொருபத்தில் நிலைத்திருத்தலே விதேககைவல்யமென்பர். அந்தவிதேககைவல்யம் அடையும் கிரமமாவது. ஒருமுமுட்சுவானவன் ;நித்தியகரும அனுஷ்டானத்தால் தர்ம உற்பத்தியும், தர்மஉற்பத்தியால் பாவக்ஷயமும் பாவக்ஷயத்தால் சித்த சுத்தியும், சித்த சுத்தியால் சமுசார தோஷ தரிசனமும். சமுசார விஷய விரக்தியும். விஷய விரக்தியால் மோக்ஷ அபேக்ஷையும், மோக்ஷ அபேக்ஷையால் பாகிய கரும பரித்தியாகமும், பாகியகருமபரித்தியாகத்தால் யோக அப்பியாசதோஷமும் யோக அப்பியாசத்தால் பிரத்யக்காத்மாப் பிரீதியும் பிரத்யக்காத்மப்பிரீதியால் தத்துவமஸிமகா வாக்கியவிசாரமும்' தத்துவமஸிமகா வாக்கிய விசாரத்தால் அத்வைதஞானமும் அத்வைதஞானத்தால் அவித்தியாநாசமும், அவித்யா நாசத்தால் துவைதப்பிராந்திநாசமும் துவைதப்பிராந்தி நஷ்டத்தால் சுக துக்க பரித்தியாகமும் சுகதுக்கபரித்தியாகத்தால் இராகத்துவேஷங்களின் ஹானியும் இராகத்து வேஷங்களின் ஹானியால் விதிநிடேத நீக்கமும் விதிநிடேத நீக்கத்தால் புண்ணியபாவக்ஷயமும் புண்ணிய பாபக்ஷயத்தால் தேக அபாவசித்தியும் தேக அபாவசித்தியால் சர்வபாவ விமோஜனமும், சர்வபாவ விமோஜனத்தால் சர்வோத்கிருஷ்டமான பரமபதமும் புனரா

விருத்தி இன்மையும் (மீட்சி இன்றியதும்) உரைமனம் இறந்துள்ளதாய் நித்தியானந்த சொரூபமாய் உள்ள விதேககைவல்யம் உண்டாகும்.

இதுவே சுருதி ஆச்சாரியர் பிரசாத சித்தியாம் இதுவே சகல சாஸ்திரார்த்த நிர்ணயமாம்.



வேதாந்த சாராமிருத சிவஞானச் செம்பொருள்

முற்றுப்பெற்றன.

அன்பே சிவம்.

முருகனே செந்தில் முதல்வனே மாயோன்
மருகனே ஈசன் மகனே—ஒருகைமுகன்
தம்பியே நின்னுடைய தண்டைக்கால் எப்பொழுதும்
நம்பியே கைதொழுவேன் யான்.

ஓம் சாந்தி! சாந்தி!! சாந்தி!!!

திருச்சிற்றம்பலம்.







உ

சிவமயம்.

ஓம் கணேசாய நம:

ஸ்ரீ தத்துவராயர் இயற்றிய

# யோக வதைப் பரணியில்

உள்ள சசிவர்ண போதம் மூலமும்,

சுரோத்திரிய பிரஹ்ம நிஷ்ட

## ஸ்ரீ நித்தியானந்த சுவாமிகள்

இயற்றிய பொழிப்பு உரையும்.

சசிவர்ண போதம் என்பது சசிவர்ணனது போதத்தை உணர்த்தும் நூல் என விரியும். சசி—சந்திரன் போன்ற வெண்ணிறமுடையவன் அதாவது வெண்குஷ்டமுடையவன். போதம்—தத்துவ ஞானம்.

விருத்தி இன்மையும் (மீட்சி இன்றியதும்) உரைமனம் இறந்துள்ளதாய் நித்தியானந்த சொருபமாய் உள்ள விதேககைவல்யம் உண்டாகும்.

இதுவே சுருதி ஆச்சாரியர் பிரசாத சித்தியாம் இதுவே சகல சாஸ்திரார்த்த நிர்ணயமாம்.



வேதாந்த
சாராமிருத
சிவஞானச்
செம்பொருள்

முற்றுப்பெற்றன.

அன்பே சிவம்.



முருகனே செந்தில் முதல்வனே மாயோன்
மருகனே ஈசன் மகனே—ஒருகைமுகன்
தம்பியே நின்னுடைய தண்டைக்கால் எப்பொழுதும்
நம்பியே கைதொழுவேன் யான்.

ஓம் சாந்தி! சாந்தி!! சாந்தி!!!

திருச்சிற்றம்பலம்.








உ
சிவமயம்.
ஓம் கணேசாய நம:

ஸ்ரீ தத்துவராயர் இயற்றிய

# யோக வதைப் பரணியில்

உள்ள சசிவர்ண போதம் மூலமும்,

சுரோத்திரிய பிரஹ்ம நிஷ்ட

## ஸ்ரீ நித்தியானந்த சுவாமிகள்

இயற்றிய பொழிப்பு உரையும்.



சசிவர்ண போதம் என்பது சசிவர்ணனது போதத்தை உணர்த்தும் நூல் என விரியும். சசி—சந்திரன் போன்ற வெண்ணிறமுடையவன் அதாவது வெண்குஷ்டமுடையவன். போதம்—தத்துவ ஞானம்.

## மங்கலம்:

மதி பருதி யெரி நீர் கால் வான் அவனி இயமானன்
வடிவா எல்லா
அதிபதியா யனைத்துமாயல்லாத அறிவுருவை
அகத்துள் வைப்பாம்
சொல்லால் தம் மதி விரகால் தூயதிது தீயதிது
என்னு மாக்கள்
எல்லார்க்கும் அதுவதுவாய் இறை இருக்கும் படி
யே யாயிருக்க வென்றே.

1. (இதன் பொருள்) மாயோபாதியால் சந்திரன், சூரியன், அக்கினி, ஜலம், வாயு, ஆகாயம், பிருதிவி, ஜீவான்மா என்னும் அஷ்ட மங்கல மூர்த்தமாய் எல்லாவற்றிற்கும் தலைவனாய் இவ்வாறு சகலாவஸ்தையில் சர்வாத்மகமாய் கேவலாவஸ்தையில் இவை யாவும் அல்லாததாயும் இருந்த ஞானகன பாமாத்மாவை மனத்தின் கண்ணே வைத்துத் தியானிப்பாம்.

2. சுருதி, ஸ்மிருதி புராணம் தொல்லோர் நல்லுரைகளாலும் தமது புத்தி சாமர்த்தியத்தினாலும் நம்மால் அனுஷ்டிக்கப்பட்ட இம்மதமே தூய்மையானதாம். பிறரால் அனுஷ்டிக்கப்பட்ட இம்மதமோ தூய்மையல்லாததேயாகும் என்று கூறும் மக்கள் யாவருக்கும் அவரவர் கொள்கைக்கேற்றவாறு அந்தந்த வடிவமாய் இறைவன் இருக்குந் தன்மை போன்று யாம் இருக்குக. என்று நினைத்து (என்றவாறு)

இங்கு ஆத்மாவிற்கு கூறப்பட்ட அட்ட மங்கள மூர்த்தமும் அதிபதியாம்தன்மையும் செயற்கையும் கற்பனையுமாம். அறிவுருவம் இயற்கையும் உண்மையுமாம்.

இது மோகவதைப் ப ர ணி யி ல் உள்ள பேயிரங்கல் அதிகாரத்தில் பேய்கள் தாக மோக முதலியவற்றால் முறை

யிட அவற்றுள் ஒரு பேய் மேற்றிசைக் கண் தீபம் விளங்க ஒருபுருடன் வரக்கனவு கண்டேன் அதன் பயனை திருவாய் மலர்ந்து அருளல் வேண்டும் என்று தேவியை நோக்கி கேட்க அதற்குத் தேவி இறைவனே உன்னை ஆட்கொள்ள வேண்டி அவ்வாறு வந்தனன் என்று காண்டற்கரியனாயினும் கட்புலனுக்குத் தோன்றுமாறு திருவுருக்கொண்டு அன்பர் களுக்கு உதவுவன் நீ கண்ட கனவின் பயன் இதுவே என் றுங் கூற அதற்கு அப்பேய் மன வாக்கிற்கெட்டாதவனும் உற்பத்தி நாசமில்லாதவனும் ஆகிய இறைவன் இவ்வுலகில் திருமேனி கொண்டு வருதலும் விழிக்குப்புலன் ஆதலும் எங்ஙனம் கூடுமெனவினவ.

## தேவி கூறல்.

அருவனாயினும் அன்பர்க்குருவனாய்
வருவன் என்றது மாமறை காணுமே
பத்தியாம் வலையிற்படும் பார்மிசை
புத்தியால் அறியொண்ணாப் புராணனே.

## பேய் பதைத்தல்

தேவி இப்படிக் கூறத்திருவருள் பாவியேற்
கிலம் என்று பதைக்கவே.

---

## தேவி பேய்களுக்குள்ள அச்சம் நீங்கி முக்தி பெறும் உபாயம் கூறல்.

1. அலகை அச்சமற அகவான்களும்
உலகில் முத்தி பெறும் பரிசு ஓதுவாம்.

(இதன் பொழிப்புரை) முமுட்சுக்களாகிய பேய்களே உங்களுடைய ஜனன, மரண துன்பம் நீங்குமாறு மகாபாவி களும் இவ்வுலகின் கண்ணே துன்ப ஒழிவும்

இன்ப அடைவும் ஆகிய வீட்டின்பம் அடையும் நெறியினை யாம் கூறுதும் நீவிர் யாவரும் கேளுமின்.

---

## பாவிகள் பாவம் நீங்கப்பெற்றால் அல்லது அவர்கள் விட்டினை அடையும் நெறியாவது யாது எனத் தேவி கூறல்.

---

2. புணர்ந்த பாவமெலாம் பரிபூரணம்
உணர்ந்த ஞானி விழிபட ஓடுமே.

(இதன் பொழிப்புரை) மனம் வாக்குக் காயமென்னும் முக்கரணங்களாற் செய்யப்பட்டு அந்தக்கரணத்தின் கண் பொருந்திய பாவங்கள் அனைத்தும். எங்கும்நீக்கமறநிறைந் துள்ள பரிபூரண ஆனந்த வடிவமே கூடஸ்த வடிவ ஆத்மா வென அறிந்த ஞாதாக்களின் யோக திருஷ்டியால் சூரியனைக்கண்ட பூதவிருள் போன்று ஒழியும்.

ஞானிகளது அருள் நோக்கம் இதுவெனத்தேவி கூறல்]

---

3. எழிலாரு ஞானி புகழ் என்னை கூறல்
உயர் வீடு இவன் சொல்வழி செய்
தொழிலாளர் சேர்கையது கேளும் முன்னை
இதிகாசம் ஒன்று சொலவே,

(இதன் பொ-ரை) இந்த ஞானியானவன் கூறிய பிரகாரமே ஏவல் இயற்றும் அதிகாரி புருஷர்கள் அடைவது சிறந்தமோக்ஷமேயாம். (அங்ஙனமாயின்) மைத்திரி கருணை முதிதை உபேக்ஷை என்னும் அழகு நிறைந்த கீர்த்திகள் கூறல் எவ்வாறு. ஆயிரம் நாவுடைய ஆதிசேடனாலும் கூறொணாததேயாம். அங்ஙனம் ஞானியினது சேவையால் முத்தியடைந்தவரது சரிதங்கள் உளவோ என பூர்வம்

ஞானியினது ஏவல் புரிந்து மோக்ஷமடைந்த பெரியார் சரித்திரங்களில் ஒன்று கூறுதும் நீவிர் அதனைக்கேளுமின்.

## அவ்விதிகாசம் யாவர்க்கு யாவர் கூறியது எனத் தேவி கூறல்.

4. தந் தாபமற்ற பரன் ஏவல் செய்த
அவனுற்ற பேறுதனை முன்
செந்தாமரைக்கண் முதல்வற்கு எம்மண்ணல்
திருவாய் மலர்ந்தது இதுவே.

(இதன் பொ-ரை) இவ்விதிகாசம் ஆவது தனது தாபத்திரய துன்பம் நீங்கியுள்ள ஞானியினது ஏவற் பணி செய்து வந்த சீடன் அடைந்துள்ள பேற்றினைப் பூர்வம் தாமரை கண்ணராகிய திருமாலுக்கு எம் தலைவராகிய சிவ பெருமான் அருளியதாம்.

---

## அது யாவருடைய சரிதை எனத் தேவி கூறல்.

5. உவமிப்பின் ஞானி விழி பட்டு முன்னை
வினை விட்டு முத்தியுலகில்
தவ மற்ற வெய்ய வினையே புரிந்த
சசிவர்ணன் எய்து கதையே.

(இதன் பொ-ரை) இது இவ்வுலகின் கண்ணே சிறிதும் தவச்செயலின்றி கொடிய தீவினை இயற்றி வந்த சசிவர்ணன் ஒருவாற்ருனும் உவமை இன்றிய ஞானியினது அருள் நோக்கால் அக்கணமே பழைய தீவினைகளினின்றும் விடுபட்டு அபவர்க்கமென்னும் மோக்ஷ வீட்டினை அடைந்துளான் அவனது சரித்திரமே இதுவாகும்.

வேறு.

6. ஏமம் புகுவார் உள பாதகர் ஆம் யாவர்க்குளும்
மிக்கவன் ஆகுமிவன்

நாமம் புகல்வார் குலமும் எரிவாய்
நரகம் புகுமாறு நடந்தனனே.

(இதன் பொ-ரை) நரக துன்பத்தினை அநுபவித்தற்குள்ள பாவிகள் யாவரினும் இவன் மிக மிகச் சிரேஷ்டனேயாவன். இச்சசிவர்ணன் தன் நாமத்தினைக் கூறப்பட்டவரது வம்சங்கள் யாவுமே மாபூதி என்னும் நரகத்தினை அநுபவிக்கும் வண்ணமே தீவினைகளை இயற்றி வந்தனன்.

## தீவினைப் பெருக்கம் இவனது பிதிர்க்கள் அடைந்த கதி.

7. மலமேவிய தீவினையின் வலியால்
மகிழ் உம்பர் பதத்தில் இருந்த இவன்
குலமேவிய தென் புலவாணர்களும்
கொடிதா நரகம் குடியேறினரே.

(இதன் பொ-ரை) அவித்யா மலத்தால் நிறைந்த தீய கர்மத்தின் வலியால் சுவர்க்காதி சுகம் அனுபவித்திருந்த இவனது வம்சத்தில் பொருந்தியுள்ள பிதிர்க்களும் மிக மிகக் கொடுமையான நரக துன்பத்தினையே அநுபவித்தார்கள்.

8. மிகமேவிய புண்ணிய பாவமெனும்
வினையின் பயன் மேலொரு கால முருது
இகமே வரும் என்பதனுல் உள நோயெல்லாம்
இவனைச்செற எய்தினவே.

(இதன் பொ-ரை) மிகுதியா அமைந்துள்ள தர்ம அதர்மங்களின் பயன் பின் ஒரு காலத்தில் பொருந்தாமல் இச்சன்மத்திலேயே அவை தொடருமென தரும சாஸ்திரங்கள் கூறுவதால் ஆயுர் வேதத்திற்கூறப்பட்ட நோய்கள் அனைத்தும் இச்சசிவர்ணனை நலியத் தொடங்கினவாம்.

## அவன் அடைந்துள்ள துன்பத்தினைக் கண்ணுற்ற பாகயஞ்ஞன் அடைந்த துன்பமிதுவெனல்:

9\. தன் புத்திரன் நேயம் விடாமையினால்
தவறுற்ற இவற்பெறு தந்தை உளந்
துன்புற்று இனி என்னை கொலோ புதல்வன்
துயர் தீர் வகை என்று சுழன்றனனே.

(இதன் பொ-ரை) வேத நிஷித்தமாயுள்ள மாபாதகங்கள் யாவும் இயற்றிய இச்சசிவர்ணனை ஈன்ற பிதாவாகிய பாகயஞ்ஞன் தனது புத்திரனிடத்துள்ள வாஞ்சை நீங்காமையால் மனம் துன்புற்று புத்திரனது துன்பத்தினை நீக்கும் உபாயம் மேல் என்னவாகுமெனக் கலக்கத்தை அடைந்துளான்.

## அப்பாக்யஞ்ஞன் மீண்டும் யாது செய்தான் எனத்தேவி கூறல்.

10\. ஒன்றாலும் வினைத்துயர் துய்ப்பதலால்
ஒழிவிக்கும் உபாயம் உனக்கிலதே
என்றாலும் அறிந்தவன் அன்பு விடாது
இவனைக்கொடு உழன்றனன் எங்ஙனுமே.

(இதன் பொ-ரை) இச்சசிவர்ணன் தான் செய்துள்ள தீவினையின் பயனாகிய துன்பத்தினை அநுபவித்து ஒழிக்க வேண்டுமல்லாமல் மணி, மந்திரம், ஔடதம் என்பனவற்றுள் யாதொன்றினாலும் நீக்கும் உபாயம் உமக்கில்லையே என்று கூறினாலும் தானும் சாஸ்திரங்களால் உணர்ந்தவனாகவே இருந்தும் அப்பாகயஞ்ஞன் புத்திர வாஞ்சை விட்டு நீங்காமையால் இச்சசிவர்ணனைத் தலை மீது எடுத்துக் கொண்டு சர்வ புண்ணிய தீர்த்தம் மூர்த்தி வழிபாடுகள் செய்து வந்தனன்.

மூர்த்தி தீர்த்தம் ஆடலின் பயன் இதுவெனல்.

11. ஒரு மாதவன் மற்றிவன் வேதனை கண்டு
ஒழிவு அற்றுள ஒன்றை உளத்துணரும்
பரமாகிய ஞானிகள் கண்ணுறலே
பரமாவிழ்தமென்று பகர்ந்தனனே.

(இதன் பொ-ரை) ஒரு சிறந்த தவமுடைய இருடியானவர் இச்சசிவர்ணன் தந்தையாகிய பாகயஞ்ஞன் படும் துன்பத்தினை அறிந்து. நீக்கமின்றி நிறைந்துள்ள அப்பரம் பொருளைத்தனது உள்ளத்தின் கண் ஆத்ம வடிவமாய் அநுபவிக்கும் ஞானிகளது யோக ஞான திருஷ்டியே மேலாகிய ஔடதமாம் என்று கூறி அருளினர்.

மீண்டும் அதனை விரித்தல்.

12. தான் அந்தமிலாத தனைத் தருவான்
சத்தீச்சுர மென்னும் இடந்தனில் வாழ்
மாநந்தி பராயணர் என்பவர் நின்
மைந்தற் குறுநோய்க்கு மருந்தெனவே.

(இதன் பொ-ரை)தேசகால வஸ்துபரிசேதரகித(தனை) தனது எதார்த்த சொருபத்தைத் தான் கொடுத்தருளும் பொருட்டு. கோகுலா புரமென்னும் க்ஷேத்திரத்தின் வாழ்கின்ற மகாநந்த பராயணர் என்னும் முனிவரர் உனது புத்திரனுக்குப் பொருந்திய நோய்க்கு மருந்தாவர் என அம் மாதவர் கூறினர்.

அப்பாகஞ்ஞன் மேலும் என் செய்தான் என்று பேய்கள் கேட்க தேவி கூறல்.

13. முடியாவு பதேசமென்று இவனும்
முனிவன்பத மெய்தி மொழிந்தனனிக்

கொடியான் வெருவாது குயிற்றிய நோய்
கூறற் கரிதாய கொடுந் தொழிலே.

14. ஈங்குன்றிரு முன் பகரும் படியோ
இவன் எய்திய தீவினை யென்னவெலாம்
நீங்கும்படி தன் அநு பூதியினால்
நிகழும் விழி வைத்தனன் நின் மலனே.

(இதன் பொ-ரை) இம்மாதவர் கூறிய மொழியே மிகவும் சிரேஷ்டமான உபதேசமாகும் என்று உணர்ந்து அப்பாகயஞ்ஞனும் சத்தீச்சுரமென்னும் ஸ்தலத்திற்குச் சென்று ஈசான கங்கையில் நீராடி சத்தீச்சுரனை வணங்கி மஹாநந்த பராயணர் திருமுன் சென்று இக்கொடிய பாவியானவன் சிறிதும் அஞ்சாமல் இயற்றியுள்ள கொடிய செயல்களைச் சொல்லுதற்கு அரியவை அதுவன்றி இச்சசிவர்ணன் இயற்றியுள்ள தீய செயல்களை தேவரீர் திருமுன்பு அவை சொல்லத்தக்கதோஎன்று கூறினன் பாகயஞ்ஞன் இவ்வாறு கூறிய அளவில் மலரகிதரான மகாநந்த பராயண முனிவரர் நோய்களுக்கு நிமித்தமாகிய சகலதீவினைகளும் நீங்கும் வண்ணம் சுவானுபூதியால் விளங்கும் தமது யோக திருஷ்டியை அச்சசிவர்ணன் மீது வைத்தனர்.

## திருஷ்டியை வைத்த அளவில் அதனால் ஆன பயன் இதுவெனத் தேவி கூறல்.

15. கணியாத பவக் கடுவான திருக்கண்
வைத்தலும் விட்டன காது கடும்
பிணியாவையும் நல்ல பிதா இறைதாள்
பேணிப் பணியென்று பெயர்ந்தனனே.

(இதன் பொ-ரை) அளவிட்டு அறிதற்கரிய பிறவி நோய்க்கு விஷம் போன்ற அழகிய திருஷ்டியை வைத்த மாத்திரத்தில் இவனைக் கொல்லுதற்கடைந்த நோய்கள்

யாவும் நீங்கின இத்தகைய மகாத்மியத்தைக் கண்ணுற்ற சற்குணம் அமைந்த அப்பாகயஞ்ஞன் என்னும் தந்தை யானவன் மகாமுனிவரர் திருவடிக்கே சிரத்தையோடும் மனம், வாக்கு, காயம் என்னும் முக்கரணங்களால் அவரது ஏவற்பணியைச் செய்து கொண்டிருக்கக்கடவாய் எனக்கூறி தனது இடத்தைச் சேர்ந்தான்.

## பிதா நீங்கிய பின்னர் ஆசிரியர் பணி இயற்றிய தன்மை இதுவென்று தேவி கூறல்.

16. இடனே முதலாக உவந்து இறையோன்
ஏவும் பணி செய்து இவனும் சிலநாள்
உடனே இவனே திருமேனி தனக்குரியான்
என உற்றனன் உம்பனெடே.

(இதன் பொ-ரை) இச்சசிவர்ணன் மனப்பூரிப்புடனே ஆசிரியர் கூறிய முறையே ஆப்தம் அங்கம் தான முதலிய பணிவிடைகளைச் செவ்வகையாகச் செய்து சிற்சில தினங்களிலேயே இச்சசிவர்ணனே ஆசிரியர் திருமேனியைப் பேணுதற்குரியோன் என உலகம் கொண்டாடுமாறு ஆசிரியரோடு உடற்சாயை போல் விட்டு நீங்காது வாழ்ந்து வந்தனன்.

17. நன்ருய் முனி தாள் வழிபாடதனுல்
நாநா விதமான பிறப்பினை விட்டு
ஒன்ருகிய வீடுணரும் உத்தமர்கட்கு
உள சாதனம் நாலும் உதித்தனவே.

(இதன் பொ-ரை) சசிவர்ணன் ஆசிரியரது திருவடி வழிபாட்டின் மிகுதியால் சுர நர திரியக்காதிகளாகிய எழுவகைப் பிறப்பும் நீங்குமாறு அத்வைதரூப மோக்ஷத்தை அடையவிரும்பும் உத்தமாதிகாரிகளாகிய முமுட்சுக்களுக்கு

உளவாகும் விவேகமுதலிய சாதனங்கள் நான்கும் இவனுக் குண்டாயினவாம்.

## தன் குறைவுபாட்டினது விண்ணப்பம் ஆசிரியர் பால் கூறல்.

18. முனிவன்றிரு முன்பு உளதன் குறை தான்
மொழிவன் சில அஞ்சலி குஞ்சியதாய்
பனி வந்து இருகண்கள் பதங்களிலே
பலகால் வலம் வந்து பணிந்தனனே.

(இதன் பொ-ரை) தன்பால் உள்ள குறைவு பாட்டினை ஆசிரியரது அழகிய சன்னிதியில் தான் கூறும் பொருட்டு சிரத்தின் கண் கையை வைத்து இரு கண்களிலும் தாரை தாரையாய் நீர் வடிய பலமுறை பிரதக்ஷணம் செய்து திரு வடிகளில் விதி பூர்வகமாய் வணங்கினான்.

## சசிவர்ணன் பிறவிக்கடலை கடப்பது எவ்வாறு என வருந்தினேன் எனல்.

19. அருளே வடிவாகிய மாமுனி தான் அறியாதவர்
போல அழுங்கலுறும்
பொருள் ஏதென மைந்தன் நடுங்கினன் இப்
பொல்லாத பவப் புணரிக்கெனவே.

(இதன் பொ-ரை) கருணையே வடிவமாய் விளங்கும் சிறந்த மாநந்தி பராயண முனிவர் தான் எல்லாம் அறிப வரா இருந்தும் சசிவர்ணனது உள்ளக்கருத்தினை உணரா தவர் போன்று ஏ மைந்த! நீ வருந்துவதற்கு உரிய காரண மென்னை! அதனைக்கூறுதி என்று ஆஞ்ஞை செய்ய அதற்கு தமது ஞான புத்திரன் ஆகிய சசிவர்ணன். ஹே சுவாமின்! இந்தப் பிறவிக்கடல் கடந்து கரை காணும் நெறி அறியாது அஞ்சுகின்றேன் ஆகலின் தமியேனுக்கு அந்நெறியை அருள் புரியவேண்டும் என விண்ணப்பிக்க.

## ஆசிரியர் தமது சீடனுக்கு பிறவிக்கடல் விரிவினைத் தொகுத்துக் கூறல்:

20. வெருவும் பிறவிக்கடல் வித்தரம் முன்
வேதாகம கீதை விளம்பும் அதைக்
குருவும் தன தன் பன் மனத்தளவிற்
கொளுமாறு தொகுத்திவை கூறிடுமே.

(இதன் பொ-ரை) ஏ சசிவர்ணனே! முத்தி விருப்புடையோர் அஞ்சத்தக்க பிறவிக்கடலின் விரிவினை முன்னர் வேதாகமங்கள் கீதை முதலிய இவ்வைகள் யாவும் சொல்லுகின்றன எனஅவற்றின் விரிவை தமது ஞான புத்திரனாகிய சசிவர்ணனது உளம் அது கிரகிக்கும் அளவினதாக அதனைச் சுருக்கி இவை கூறுவராயினர்.

## பிறவிக்கடல் உருவகம் செய்தல்.

21. மரணப்வங்களான புனலையுடையது
மதியை விழுங்கு காம அரவு பெரியது
கரண ஒழுங்கருது விடய இரை நுகர்
கண மொடியங்கு மீன மிகவும் உகழ்வதே.

(இதன் பொ-ரை) ஏ சசிவர்ணனே! இப்பிறவிக் கடல் ஆனது தோற்றம் ஒடுக்கமாகியநீரினையுடையது மதியாகிய சந்திரனை விழுங்கும் ஆசையென்னும் சர்ப்பங்களை உடையது. இவை தத்தம் நெறி வழுவாது விஷயங்களாகிய உணவினையே உண்ணும் தன்மையையும்கூட்டம்கூட்டமாய் சஞ்சரிக்கும் இயல்பினையுடையதும் ஆகிய பொறிகள் என்னும் மீன்கள் மிகவும் துள்ளி இயங்குவனவா உள்ளன மரணம்—உடற்கும் பிராணனுக்கும் உள்ள சையோகத்தின் அழிவு பவம். உடற்கும் பிராணனுக்குமுள்ள சையோகம்,

## இதுவும் அதுவும்

22. பெருமிதம் என்று கூறும் பெருமையுடையது
பிணிகள் எனும் கெடாத புலவு கமழ்வது
வரும் இடரின்பமான திரைகள் பொருவது
மனம் என்னும் வஞ்ச ராஜ மகரம் உறைவதே.

(இதன் பொ-ரை) கர்வம் என்று கூறும் பெருமையுள்ளது. நோய்கள் என்று சொல்லும் ஒழியாத புலால் நாற்றத்தினை உடையது. இருவினைப்பயனும் வரும் இன்பத்துன்பங்களையே அலையாக மோதிக் கொண்டிருப்பது மனம் என்னும் கபடமாகிய இராஜ மகரம் ஆகிய மச்சம் வசிக்கும் இயல்பினதேயாம்.

23. அளவில் அகந்தை ஆமை அபரிமிதமுள
அவாவு நிறைந்த ஆழம் அறிய அறியது
களவு நெருங்கு பாரும் மலையுமுடையது
கலக விடங்கள் மேவு கிருமி நெழிவதே.

(இதன் பொ-ரை) ஏ ஞான புத்திரா! மேலும் இதில் எண்ணி அளந்தறிய முடியாத அகங்காரம் என்னும் ஆமைகள் வசிப்பதாஉள்ளன ஆசையென்னும்ஆழத்தினைமிகுதியா அறிய முடியாததேயாம். திருடு என்று சொல்லும் பாரைகளையும் மலைகளையும் உடையது விஷங்கள் பொருந்திய புளுக்கள் நெழியப் பெறுவதுமா உள்ளது.

### இதுவுமது

24. துகள் எனும் நன்கலாத நுரைகள் தருவது
துறவெனும் இன்பமான கரையை விடவகன்
மகளிர் எனும் தவாத வலிய சுழியது
மறலியும் அஞ்சுகோப வடவை எறிவதே,

(இதன் பொ-ரை) பஞ்ச சூதகமென்னும் நன்மை அல்லாத நுரைகளைத் தந்து கொண்டே இருப்பது இன்பத்திற்கு காரணமாமென்னும் துறவாகிய தீரத்தினை அதிகாரி புருஷர்கள் அதனை விட்டு நீங்குமாறு செய்கின்ற பெண்கள் என்னும் கெடாததும் அகன்றதும், வலியுடையதுமான சுழற்சியை உடையது தென்திசைக் கடவுளும் அஞ்சத்தக்க கோபமென்னும் வடவாமுக அக்கினியானது தபித்துக்கொண்டே இருப்பது.

25. வெருவருகின்ற போக முதலை உடையது
விவிதமனந்தமான துறையும் அறிபவர்
ஒருவர் கடந்துபோக விரகிலெழுபவ
உததி விளம்ப யாவர் உலகிலறிஞரே.

(இதன் பொ-ரை) ஏ மைந்த! முத்தி விருப்பு உடையோர் யாவரும் அஞ்சும் இகபரங்களில் உள்ள மாலை சந்தனம் வனிதாதி விடய போகங்கள் என்னும் முதலைகளை உடையது வெவ்வேறு விதமாயும் அநேகமாயும் உள்ள மார்க்கங்களையும் அறிபவர் யாவருமே தாண்டிச் செல்லும் சாமர்த்தியமில்லாத எழுவகைப் பிறப்பென்னும் கடலின் பெருமையை எடுத்துக்கூற இவ்வுலகின் கண்ணே அறிஞர் யாவருளர் ஒருவருமே இல்லையாம்.

## இதுவும் அது

26. பொறி வழி சென்று மீளும் அவல மதி கொடு
பொருசமயங்கள் ஆறும் மறிய விழுமதில்
அறிவழி வொன்றிலாத பொருளதெனவுள
அநுபவ வங்கம் ஏறும் அறிஞர் அகல்வரே.

(இதன் பொ-ரை) ஏ சசிவர்ணனே! ஐம்புல வழியே ஐந்து விடயங்களிற் சென்று மொத்துண்டு மீளும் அறியாமை என்கின்றஅற்பபுத்தியினை உடையோர்அதுகொண்டு

பேத வாதமென்னும் அறுசமயவாதிகளும் அப்பிறவிக் கட லில் அதோ முகமாகவே விழுவார்கள். அவஸ்தாத்திரய சாக்ஷியாய் விளங்கும் கூடஸ்த வடிவ ஆத்மாவே அழிவு இன்றியதான பிரஹ்மமாம்என்றுண்டாகும் சுவாநுபவமென் னும் கப்பலில் ஏறுகின்ற அறிஞர்களே அப்பிறவிக்கடலை நீந்திக் கரை சேர்வர்.

27. புணரி கடந்து போக விரகில் என மொழி
பொழுது புலம்பி ஆவி புதல்வன் இறுமுனம்
உணர்வெனும் வங்கமேறும் அறிஞர் அகல்வர் என்று
உரையை வழங்கி நாதன் உவகை அருளவே.

(இதன் பொ-ரை) இப்பிறவிக்கடல் நீந்திச் செல்லு மாற்றல் இல்லையென ஆசிரியர் கூறிய அக்கணமே தமது சீடனாகிய சசிவர்ணன் பல துறைகள் தேர்ந்த அறிஞர்களா லும் நீந்த இயலாத இப்பிறவிக்கடலை நான் தாண்டிச்செல் வது எவ்வாறு என அழுது பிராணன் விடுவதன் முன்னமே பிரஹ்ம ஞானமென்னும்கப்பல்மீது ஏறியுள்ள மகான்களால் அப்பிறவிக்கடலை எளிதாக நீந்திக் கரை சேர்வர் என மொழிந்து தமது ஆசிரியர் மகிழ்வை உண்டு பண்ணினர்.

28. வாழி என இறைவனடி தொழுது வருபவமாம்
ஆழியினை அகலும் அறிவு அருளுக என அவரே.

(இதன் பொ-ரை) சசிவர்ணன் தமது ஆசிரியர் திரு வடிகள் நீடூழி வாழ்க வாழ்க என்று துதி செய்து அத்திரு வடிகளில் வணங்கி தொன்று தொட்டு வருகின்ற பிறவிக் கடலினை நீந்திச்செல்லும் தத்துவ ஞானத்தினைத் தந்தருள வேண்டுமென விண்ணப்பம் செய்ய அதற்கு அம்முனிவரர்

வித்தை இருவிதமெனக் கூறல்:

29. பரவறிவு அபரவறிவு எனவும் இருபரிசாத்
திரவறிவை அறியுமவர் மொழிவர் தெளிவுறவே.

(இதன் பொ-ரை) வித்தையைப் பர வித்தை, அபர வித்தையென இருவிதமாகக் கூறுவர். ஐயம் திரி பறச் சொருப ஞானமுணர்ந்த மேலோர்.

## வித்தைகளின் இலக்கணம்.

30. அபரவுணர்வு அருமறைகள் முதல் அகில கலையும்
உபரமம் அது அறவுதவும் உணர்வு பரவுணர்வே.

(இதன் பொ-ரை) அரிய வேதாகம கலைகள் யாவும் அபர வித்தையாம். சித்த விசிராந்தியினைக் கொடுக்கும் வித்தையே மேலான பர வித்தை என்பர்.

## அதனை அறிந்தவரது இலக்கணம்.

31. ஆகம விதங்கள் அறிவார் அபரமறிவார்
யோகமொடு உறங்குமவரே பரம் உணர்ந்தோர்.

(இதன் பொ-ரை) நாநாவாயுள்ள கலைகளை ஆய்ந்தவர் அபர வித்தையை உடையவராவர். சித்த விருத்தி நிரோத ருப யோகத்தோடு மித்யாப் பிரபஞ்ச விஷயத்தில் நித்திரையுற்று இருப்பவரேபாவித்தையை உடையவராவர்

## அபர வித்தையின் நிந்தனை.

32. புராணம் இதிகாசம் எவையும் பொருள் அனைத்தின்
பிராணன் அறியாதுள இடத்து இவை பிதற்றே.

(இதன் பொ-ரை) புராணம் இதிகாச முதலிய இவைகள் யாவும் கற்று அவற்றின் பொருளை உணர்தலும் சர்வ வஸ்துக்களின் பிராண பூர்வகமான பரம் பொருளை உள்ளவாறு உணராத இடத்துஇவையாவும் பிதற்றலாய் முடியும். பிராணன் தேகம் நிலைபெறுதற்கேதுவா இருத்தலின் அது போன்று பரம் பொருள் ஜீவேஸ்வர ஜகத்துக்கள் யாவும் நிலை பெறக் காரணமாயுள்ளதாதலின் பொருள் அனைத்தின்

பிராணன் எனக்கூறினர்.

33. இயல் அறிவது, இசை அறிவது, இனம் அறிவது உளவாம் அயல் அறிவது, அறிவு அது அல அறிவுஅறிவது அறிவே

(பொ-ரை) இயற்றமிழை அறிவதும், இசைத் தமிழை அறிவதும், நாடகத் தமிழை அறிவதும் உள்ளன வாம். அவற்றின் ஞானம் அஞ்ஞான ஞானமேயாகும். ஆதலால் அந்த ஞானம் உண்மை ஞானமன்று ஆத்ம சொருபத்தை அறிவதே உண்மை ஞானமாம்.

இயற்றமிழ் என்பது தமிழ் அறிஞர்கள் தம் இன் உயிரெனக் கருதும் இலக்கண இலக்கியங்களாய் புல நெறி வழக்கிற்படுவனவாய செய்யுள் நூல் வசன நூல்களின் தொகுதி அவை சங்க நூல்களும் மற்றைய நூல்களும் அவற்றின் உரைகளுமாம். அது இசைத்தமிழ், நாடகத் தமிழ் என்பவற்றிற்கு உயிர் எனவும் காரணம் எனவும் சொல்லுவர். இசைத்தமிழ் என்பது பண்ணொடு கலந்தும் தாளத்தோடு கூடியும் இயங்கும் தமிழ்ப்பாடல்களால் இயன்ற இலக்கியங்களும் இலக்கணமும் ஆம். நூல்களின் தொகுதி நாடகத்தமிழ் என்பது கையில் நூல் எடுத்துப் படிக்கும் ஆற்றல் இன்றியவர் ஆகிய வேலைக்காரர்களுக்கும் படிப்பு இன்றியவர்களுக்கும் நடித்துக்காட்டி நல் அறிவு புகட்டற்குரிய நெறியைத் தழுவி நிற்கும் நூல்களின் தொகுதியாம்.

உதாரணம்.

தன்னை அறிவது அறிவாம் அஃதன்றிப்
பின்னை அறிவது பேய் அறிவு ஆமே.

34. நவிலு கலை அறுபத்து நாலும் அறிவாரும்
பவலயம் அது அறு சுத்த பரமம்அறியாரே.

(இதன் பொ-ரை) கூறு நின்ற அறுபத்து நாலுகலை களையும் உணர்பவரும் உற்பத்தி நாசமின்றிய பரிசுத்த பரமான்மாவை அறியார்.

35. ஆகவறிவாளர் அறிவார் இவை அனைத்தும்
ஏக அறிவாளர் இவையாவும் அறியாரே.

(இதன் பொ-ரை) அறுபத்துநான்குகலைகளாய் உள்ள இவை அனைத்தையும் தேகான்ம மதியுடையோர் அறிவார் அத்வைத ஞானமுடைய பண்டிதர்கள் இவை யாவும் உணரார்.

36. ஐயறிவு அறிந்து அவை அடங்கினவரேனும்
மெய்யறிவிலாதவர்கள் வீடது பெறுரே.

(இதன் பொ-ரை) ஞானேந்திரிய பஞ்சகமும் அதன் சுபாவமும் இன்னது என உணர்ந்து தத்தம் விஷயங்களில் செல்ல ஒட்டாது தகைந்து வசம் பண்ணிய போதினும் உண்மை ஞானம் இலாதவர் வீடு பேற்றினை அடையார்.

## பரவித்தையின் இயல் இதுவெனல்.

37. மெய்மை அறிவு அல்ல தமில் வேறு அறிவது எல்லாம்
தம்மை அறியும் அறிவதே அறிவு தானே.

(இதன் பொ-ரை) தம்மினும் வேருயுள்ள அனான்ம பதார்த்தங்கள் அனைத்தினையும் அறிகின்ற அறிவு உண்மை அறிவு அன்று. பிரத்தியக் அபின்ன பரமான்ம ருபமாகிய தம்மை அறியும் அறிவே உண்மை ஞானமாம்.

**ஜீவனைப் பூஜகன் ஆகவும் ஈசுரன் பூஜ்ஜியன் பத்திர புஷ்ப பலாதியை பூஜனைத் திரவியங்கள் எனவும் பேதமாய் அறியும் அறிவும் உண்மை ஞானம் ஆகாவாம் எனல்.**

38. பூசனையும் அது சகல பொருளும் அறிதமையும்
ஈசனையும் வேறு அது அற அறிவது அறிவு எனவே.

(இதன்பொ-ரை) ஆராதனையும் அவ்வாராதனைக்குரிய சகல சாமக்கிரிகைகளையும், பூஜா விதிகள் அறிந்த பூஜகன் ஆன ஜீவனையும் பூஜ்ஜியன் ஆன ஈசுரனையும் அபேதமாக அறிவதே உண்மை ஞானமாம் என முனிவரர் கூறி அருளினர்.

### நான் என்னும் சொற்பொருள் இத்தேகத்தினும் வேருகவே உள்ளது என இதனை ஆசிரியர் பால் வினவுதல்.

39. தான் எனும் உடம்பது தனைத் தவிர வேருய்
யான் எனும் அருத்தமுளவோ அருளுக எனவே.

(இதன் பொரை) நான் மனிதன், நான் பிராமணன் என்பன முதலியபிரதீதியின் பலத்தால்! தான் எனவிவகரிக்கப்படுவதாகிய இத்தூல உடம்பினைத் தவிர இதற்கு வேருக யான் என்று விவகரிக்கப்படும் ஆன்மப் பொருள் உண்டோ உண்டு எனின் அதனை உபதேசம் செய்தருளல் வேண்டும் என சசிவர்ணன் கேட்க.

### இத்தூல தேகத்தினும் ஆத்மாவை வேறு என அறிவித்தல் இவை எட்டுச் செய்யுட்களால் முடிவுறும்.

40. என தாடை பொன் பூ மகன் தையல் பாய்மா
இப்பங்கண் முகம் கால் கை மெய் என்ன என்றும்
தனதாய் உரைப்பான் வகுத்து இந்த ஊனைத்
தான் என்று அயர்த்தும் சொலத்தக்கது அன்றே.

(இதன் பொ-ரை) உலகின் கண் புருடராயினோர் எனது ஆடைஎனவும், எனது சுவர்ணம் எனவும், எனதுபூமி எனது மகன், எனது மனைவி, எனது குதிரை, எனது யானை என்று விவகரிப்பது போலத் தேகத்திற்கு வேருகிய தேகியானவன் எனது கண், எனது முகம், எனது கால், எனது கை, எனது தேகம் என்று இம்மாம்ச மயமாகிய உடலை வேறு பிரித்து எப்பொழுதும் தன்னுடையதென்று கூறு நிற்பன். எங்ஙனம் தன்னுடையதாகப் பாவிக்கப்பட்ட ஆடை முதலிய பதார்த்தங்களினும் அவற்றை உடையோனுகிய அப்புருடன் வேறே அங்ஙனம் உடைமைப்பொருளாக விவகரிக்கப்பட்ட கண் முதலிய அவயவ சமுதாயமான தேகத்தினும் அதனை உடையோனுகிய தேகி வேறே யாவன் ஆதலின்! அது அஹம் சப்தார்த்தம் என்று மறந்தும் சொல்லத் தக்கது அன்றும்.

41. தாளாக ஊர் ஆழியார் வெந்நில் வீணை
தண்டாக வன் மார்பு தட்டாக மொட்டா
நாளா மலர்ச் சென்னி கூந்தற் கொடித்தேர்
நாள் நாளும் ஊர் வானில் வேருக நாடே.

(இதன் பொ-ரை) பாதங்களே ஊர்ந்து செல்லும் சக்கரங்களாகவும் முதுகில் வீணைத்தண்டு அஞ்சுரு ஆணியாகவும், வன்மை பொருந்திய மார்பானது தேர்த்தட்டாகவும், அன்றலர்ந்த மலர்களால் அலங்கரித்த சிரமே மொட்டாகவும், கூந்தலே கொடியாகவும் அமைந்துள்ள இத்தேக வடிவ இரதம் எஞ்ஞான்றும் செலுத்துவானினும் அன்னியமாகவே உணரத் தக்கதாம்.

42. கடக்குஞ்சரம் பண்ணி உண்ணின்று ஒருத்தன்
கை பாத கன்னங்கள் மெய் போல் இயக்கும்
கிடக்கும் நடத்தார் இடத்து இவ்வுடம்பும்
கிடக்கும் ஒருத்தன் நடத்தா இடத்தே.

(இதன் பொ-ரை) ஒரு புருடன் மூங்கில் முதலான வற்ருல் மத ஜலமுள்ள யானை போன்று ஓர் உருவம் அமைத்து அந்த யானையின் உள்ளே புகுந்து நின்று துதிக்கை, கால்கள், செவிகள் ஆகிய இவற்றை உண்மையான யானையின் இயக்கம் போன்றே இயக்குவன் அவன் அதனை இயக்காத போது அந்த யானை சேட்டையற்றுக் கிடக்கும் அதுபோல இவ்வுடம்பானது இத்தேகியாகிய ஒரு புருடன் இயக்காவிடத்து சேட்டை அற்றே கிடக்கும் என அறிக.

43. ஒரு கூறு மலமாகும் ஒரு கூறு உடம்பாகும்
ஒரு கூறு மனமாகும் உண்டு அற்ற அன்னம்
இரு கூறு நீயாகில் ஒரு கூறு நீயாம்
இழிக்கும் மலம் சோர் இடப்பட்ட உடலே.

(இதன் பொ-ரை) உண்ணப்பட்டுச்சீரணித்த அன்னமானது ஜாடராக்கினியின் சம்பந்தத்தால் மூன்றுபகுதியாம் அவற்றுள் ஒரு பகுதி அமேத்தியமாகும். ஒரு பகுதி சரீரமாம். ஒரு பகுதி மன ரூபமாம். அவற்றுள் மனமும், மலமும் ஆன இரு பகுதிகள் நீயாயின் சுருதிகளாலும் பெரியோர்களாலும் நிந்திக்கப்படுவதும் மலங்கள் கசிந்து ஒழுகுவதுமான தூல உடம்பாகிய ஒரு கூறும் நீயே யாவாய்.

44. கிளர் ஆதரத்து உண்ணும் அன்னம் சுடக் கை
கிட்டப் பொருதே இருந்தார் முனிந்தார்
தளராது உருப்பு ஒன்றும் உயிர் போக அன்றே
தளற் பள்ளி மீதே துயின்ருர் சகித்தே.

(இதன் பொ-ரை) மிகுந்த அவாவுடன் உண்ணுதற்குரிய அன்னமானது சுடக் க்ரமானது சமீபிக்க அதனைப் பொறுக்காமல் இருந்துகோபித்தவர் எவர். உறுப்பு ஒன்றும் தளராது கை, கால் முதலிய உறுப்புகள் ஒன்றுங் குறைவுபடாமல் பிராணன் நீங்க அக்கணமே நெருப்பாகிய படுக்கையின் மீது பொறுத்துக்கொண்டு துயின்றவர் எவர்.

45. நிழற்பாவை கண்ணுடியிற் பாவை கை கால்
நிமிர்க்கும் முடக்கும் இவன் செய்யும் எல்லாம்
தொழிற் பாலவா மற்று இவ்வுடலஞ் செய் தொழிலும்
சுடர் ஞான வடிவானவன் செய் தொழிலே.

(இதன் பொ-ரை) உடலின் நிழல் வடிவ சாயையும், கண்ணுடியிற்தோன்றும் பிரதிபிம்பமும் கைகால்களை நீட்டும் மடக்கும் அத்தொழில்கள் அனைத்தும் அதிஷ்டானமும், பிம்பமும் ஆகிய இப்புருடன் செய்யும் தொழில்கள் இடத்தனவாம். அதுபோல இவ்வுடல் செய்யும் தொழில்களும் சுயம் பிரகாச சேதன வடிவ ஆன்மாவானவன் இயற்றிய தொழில்கள் இடத்தனவாம்.

46. அறிகின்ற பொருள் என்றும் அறிவானில் வேறே
யாளுல் இவ்வூன் ஆகம் நான் என்னலாமோ
செறிகின்ற புள்ளல்லவே கூடு இவ்வகையே
செடமான உடல் நின்னில் வேறு என்று தெளியே.

(இதன் பொ-ரை) அறியப்படுகின்ற கட பட முதலிய பொருள்கள் அனைத்தும் எஞ்ஞான்றும் திருஷ்டாவினும் வேறே யாம் என்பது உலகப்பிரசித்தம் நம்மால் அறியப் படும் இந்த மாம்ச மயமாகிய உடலை அகம் சப்தார்த்த மாகக் கூறலாமா. நெருங்கி இருக்கும் கூடு பரவை அல் லவே இவ்வாறே அறிவின்றிய தேகமானது அறிவு வடிவ மாகிய உன்னிலும் பின்னம் என்றே தெளியக்கடவாய்.

47. நிலமாகும் வற்பு என்ற நெகிழ்கின்ற நீராம்
நெருப்பாம் இதிற்சுட்ட எல்லாமும் அநிலம்
சலமான புறையான வான் இந்த உடலம்
சடமான ஐம்பூத உருவங்கள் தாமே.

(இதன் பொ-ரை) இத்தூல உடம்பின் கண் கடின சுபாவமுள்ளவையாவும் பிருதிவியின் கூறும் நெகிழ்ச்சியை உடையனவாகிய சுக்கில சோணிதம் முதலிய அப்புவின் கூறும் உஷ்ணத்தன்மைஉடையன ஆகிய பசிதாகமுதலியன அக்கினியின் கூறும். சலன வடிவாயுள்ள போதல் வருதல்

முதலியன வாயுவின் கூறும் சிரம் கண்ட முதலியன ஆகாயத்தின் கூறும் ஆகலின் இத்தேகம் சட்சுபாவமாய் அமைந்துள்ள பஞ்ச பூதங்களின் சொரூபமேயாம்.

## தூல உடம்பினை ஆன்மா அல்லவென நீக்கி இனி இந்திரியங்களை ஆன்மா அல்லவெனக் கூறல்.

48.
விழியைப் புமான் என்னில் ரவியாதியாலே
விளங்கின்ற தல்லால் விளங்காமையாலே
ஒழியப்படும் கன்னம் முதல் நாலும் உன்றன்
உருக்கண்ட கண் தன்னை ஒப்பாக உன்னே

(இதன் பொ-ரை) நேத்திரத்தினை ஆன்மாவெனக் கூறலாமோ எனின்! அது சூரியன் முதலிய ஒளிப்பொருள்களால் உருவபதார்த்தங்களை விளக்குவதாகத் தான் விளங்குவது அன்றி சுயமே அவற்றை விளக்குவதாகத்தான் விளங்காமையால் ஆன்மா அன்றென விளக்கப்படும், செவி முதலிய நான்கு இந்திரியங்களும் உனது உருவங்களைப் பார்க்கின்ற கண்ணுக்கு சமானமாக ஆன்மா அல்ல என்று நீ கருதுவாய்.

## கர்மேந்திரியங்களும் ஆன்மா அன்றுயெனல்.

49.
அழல் உண் பொருள்களில் உண்பவை முக்கூறு
அதில் முதற்கூறு
அணியென்பு நடுக்கூறு அது மச்சைக்கு அணியாகும்
எழில் கொண்ட கடைக்கூறு அது வாக்கா எழும்
என்றே
இயல் நான் மறை அந்தங்கள் இசைக்கின்றனவாமே

(இதன்பொ-ரை) அக்கினியால் உண்ணப்பட்ட பொருள்களுள் உயிர்களால்உண்ணப்படுவனவை ஜாடராக்கினியின் சம்பந்தத்தால் மூன்று பகுதிகளாம். அவற்றில் முதற்பகுதி

அடுக்காயுள்ள என்பேயாகும். மத்திமப் பகுதி எலும்பினுள் இருக்கும் கொழுப்புக்கு விருத்தியைத் தருவதாகும். அழகு வாய்ந்த கடைப்பகுதி வாக்கு இந்திரியமாகத் தோன்றும் என்று அனுதியான உபநிடதங்கள் முழங்கும்.

## பிராணன் ஆத்மா அன்று என மூன்று செய்யுள் களாற் கூறல்.

50. உண்ணும் புனல் முக்கூறு அதில் முதற்கூறு உவர் நீராம்
உதிரம் நடுவிற்கூறு கடைக்கூறு பிராணன்
எண்ணும் இதில் இருகூறு அவை நீஆயிடின்அன்றே
இறுகின்ற பிராணன் அது நீ ஆகுவை இசையே.

(இதன் பொ-ரை) நாள் தோறும் உயிர்கள் உண்ணும் ஜலம் சாடராக்கினியின் சம்பந்தத்தால் மூன்று பகுதிகளாம். அவற்றுள் முதற்பகுதி மூத்திரமாம் மத்திம பகுதி இரத்த மாம். ஈற்றுப்பகுதி பிராணவாயுவாம். மூன்றாகக்கணக்கிடும் இவற்றில் இருகூருயுள்ள மூத்திரமும் இரத்தமுமாய அவை நீ ஆனால் அல்லவா நாசமாகின்ற பிராணவாயுவாகிய அது வும் நீ ஆவாய் என.

51. பிராணனும் அல்ல துஞ்சில் உணர்வு இன்மையால் அஃது
உணரும் புலன்கள் ஒழிவால்
பிராணன் அது என்னின் மன்னே ஒழியாது சேனே
நகர் சூழ் வலம் செய் பொழுதே.

(இதன் பொ-ரை) சுழுத்தி அவத்தையில் உணரும் தன்மை அல்லாமை யாலும் பிராண வாயுவும் அஹம் சப் தார்த்தமன்று. சுழுத்தியில் அவ்வுணர்வு இல்லாமை ஞானேந்திரியங்களின் நீக்கத்தால் ஆம். அவை இருப்பின் பிராணனும் உணரும் ஆதலின் பிராண வாயுவே அவ்வாத்

மா என்று கூறின் அரசன் பவனி வருங்காலத்தில் அரசனை நால்வகைச் சேனைகளும் விட்டு நீங்கா அதுபோலப் பிராணன் ஆத்மாவாயின் இதனை விட்டு ஞானேந்திரியங்கள் நீங்காதிருக்க வேண்டும் அவ்வாறின்மையின் பிராணன் ஆத்மாவன்ரும்.

52. கரணம் ஒடுங்க வாயு நிகழ்வு என் கொல் என்னில்
உடல் காவலாகும் அலதேன்
மரணம் அடைந்தது என்று தமர் சுட்டிடா முன்
வளைவாலின் ஞாளி கொளுமே.

(இதன் பொ-ரை) பிராணன் ஆன்மா அன்று ஆயின் உறக்கத்தில் செவி முதலிய சகலகருவிகளும் ஒடுங்க உசுவாச நிசுவாச ருபத்தால் பிராண வாயுவின் தோற்றம் எதன் பொருட்டு எனின் அது அவ்வுறக்கத்தில் உடலுக்கு காவலேயாகும். மாருயின் மரண தசை அடைந்தது என சுற்றத்தார் தகனம் செய்யுமுன்னர்வளைந்த வாலினையுடைய நாய் உட்கொள்ளும்.

மனமும் புத்தியும் ஆத்மா அன்று எனக்கூறல்.

53. இனமுறவு எண்ணவுள்ள காணத்தில் ஒன்று இது
எனலால் இது என்னது எனலால்
மனம் முனம் அன்னம் என்ற அதனுலும் அல்ல
மதி அல்ல அந்த வகையே.

(இதன் பொ-ரை) கூட்டமாகவும் உறவாகவும் நான் காகவும் எண்ணுதற்கிருக்கின்ற அந்தக் கரணங்களுள் ஒன்றுஎன்று கூறப்படுவதினுலும் இம்மனம் என்னுடையது என்றும் மமதைக்குவிஷயமாய் விவகரிக்கப்படுவதாலும் இம்மனம் முன்னர் அன்னத்தின் காரியம் என்று கூறப்பட்டிருத்தலாலும் இம்மனம் ஆத்மா அன்று அவ்வாறே புத்தியும் ஆத்மா அன்ரும்.

## அஹங்காரம் ஆத்மா அன்று எனக்கூறல்.

54, இடர் இன்பு உளதாய் நிலையற்று அறிவற்று
எண்ணும் கரணங்களில் ஆய் எவரும்
அடரும் பிறவிக்கு அடி என்று உணரும்
அகங்காரமும் நீ அல என்று அறியே.

(இதன் பொ-ரை) இன்பத் துன்பங்கள் உடையதாய் நிலை இல்லாததாய் சடமாய் நான்கு எனஎண்ணப்படுகின்ற அந்தக்கரணங்களில் ஒன்ருகி நெருங்கிய ஜனனத்திற்கு மூலம் என்று யாவராலும் அறியப்படும்அகங்காரதத்துவமும் நீ அன்று என அறியுதி.

## சித்தம் ஆத்மா அன்று எனக்கூறல்.

55. ஐயப்படல் ஓர் பொருள் நிச்சயமாய்
அறியப்படல் யான் எனது என்று மதம்
செய்யப்படல் செய்வது சிந்தனையாம்
சித்தம் அது அன்று என, நீ தெளியே.

(இதன் பொ-ரை) சந்தேகப்படுதற்குரிய ஒருபொருளையும் உறுதியா அறியப்படும் ஒருபொருளையும் யான்எனது என்று அபிமானித்தற்குரிய விடயமாகிய ஒரு பொருளையும் சிந்திப்பது சித்தம் ஆம்ஆகலின் அச்சித்தம் ஆன்மாஅன்று என்று நீ தெளிவாய்.

## முன்னர் வெவ்வேறு யுக்திகளால் ஆன்மா இது அன்று இது அன்று என நீங்கிய தூல உடம்பு முதல் சித்தம் ஈருயுள்ள பொருள்கள் அனைத்தையும் தொகுத்து அவை யாவும் அறியப்படும் பொருள் ஆகலின் ஆன்மா அன்று எனக்கூறல்.

56. முன்னுக உடம்பது சித்தம் அதே
முடிவாக மொழிந்த பொருள் திரள் தான்
நின் ஆகில நீ அறியும் பொருளாய்
நிகழ் கின்றதனுல் என நின் மலனே.

(இதன் பொ-ரை) தேகம் முதலாக சித்த மீருகக் கூறிய தத்துவக் கூட்டங்கள் உன்னுல்அறியப்படும் பொருளாய் விளங்குகின்ற படியால் அது உனது யதார்த்த சொருபம் அன்று என மாநந்தி பராயண முனிவர் கூறி அருள.

## என்னுல் அறியப்படும் ஞாத வஸ்துக்கள் யான் அல்லவாயின் என்னுல் அறியப்படாத அஞ்ஞாத வஸ்துவோ யானு இருப்பது எனச் சசிவர்ணன் விஞவுதல்.

57. உன்னுல் அறியப்படும் யாவையும் உன்
உரு அன்று என ஓதினை ஒக்கும் எனக்கு
என்னுல் அறியாது ஒழியும் பொருளோ
யான் ஆகுவது என்றனன் என்றலுமே.

(இதன் பொ-ரை) உன்னுல் அறியப்படும் ஞாதவஸ்துக்கள் அனைத்தும் உனது யதார்த்த சொருபம் அன்று எனத் தேவரீர் கூறி அருளினீர் அஃது எனக்கும் சம்மதமே ஆனுல் என்னுல் அறியப்படாமல் நீங்கி இருக்கும் வஸ்துவோ (அஞ்ஞாத வஸ்துவோ) அகம் சப்தார்த்தமாவது என்று கூறினன் என்று கூறிய மாத்திரத்தில்.

## ஞாத அஞ்ஞாத வஸ்துக்களுக்கிலக்கணம் கூறி அவை ஆன்மா அன்று எனக்கூறல்.

58. அறியாப் பொருள் காரண மாயை குறித்து
அறியும் பொருள் காரியமாம் உலகு இந்

நெறியாற்றிகழ் நான் மறை அந்தம் எலாம்
நீ அன்றுயென ஓதும் நிரந்தரமே.

(இதன் பொ-ரை) இஃது என்று சுட்டி அறியப்படாத பொருள் ஜகத்திற்குக் காரணமான மாயையாகும். இஃது இன்னது என சுட்டி அறியும் பொருள் மாயையின் காரியமாகிய உலகமாம். காரணமாகிய மாயையும் அதன் காரியமாகிய உலகமும் அஞ்ஞாதமும் ஞாதமும் ஆய் இருக்கும் இந்த முறையால் விளங்குகின்ற நான்கு வேதங்களின் முடிவாகிய உபநிடதங்கள் யாவுமே அவை நீஅல்லவென்று இடையீடின்றிக்கூறும்.

## இவ்விரு வகைப் பொருளும் யான் அல்ல ஆயின் நான் யார் என எவ்வாறு உணர்வது எனக் கூறல்.

59. அறியும் பொருள் அன்று அறியாப் பொருள் அன்று
அறிவாகிய நீ யெனும் அப்பொருள் தான்
பொறியின் வழி நின்று அறியும் பொருளோ
போதக்கண் விழித்து அறியும் பொருளே.

(இதன் பொ-ரை) ஆதலால் ஞாத வஸ்து எப்படி நீ அன்றோ அப்படி அஞ்ஞாத வஸ்துவும் நீ அன்று என்னை யான் எத்தன்மையன் ஆக உளேன் எனின்! ஞாத அஞ்ஞாதங்கள் இரண்டையும்அன்னியப்பிரகாசங்களின் அபேக்ஷை இன்றி அநுபவ ரூபமான சொப்பிரகாச சேதனமாகிய வஸ்துவே ஆத்மாவாகிய நீ என்று சுருதிகள் கூறும் அந்த ஆத்ம ரூப வஸ்துவானது இந்திரியங்களின் வழியாகநின்று அறியப்பட்ட பொருளோ அன்று ஞானக் கண்ணினால் அறியத் தகுந்த பொருளேயாம்.

கூறிவந்த சுயம் ஆத்மாவே வேதப் பிரதி பாத்திய அருத்தமாம் எனல்.

60. வேதப்பொருள் தான் இது வேறு சொலும்
வினையாவையும் அன்று ஒரு வேறும் இலாப்
போதப் பொருள் அந்த மறைக்கு அணியாம்
புனிதப் பொருள் தத்வமசிப் பொருளே.

(இதன் பொ-ரை) இவ்வியல்பினதாகிய சுயம் பிரகாச சேதனமாகிய ஆ த் ம ா வே வேதப் பிரதி பாத்தியமாகிய அர்த்தமாம். இவ்வியல்பினதாகிய ஆத்மாவிற்கு அந்நியமாக வேதத்தாற் கூறப்பட்ட கர்ம உபாஸனைகள் யாவும் அவ்வேதத்தின் சித்தாந்தமான அர்த்தம் அன்று இதுவே சுவகதாதி பே த ங் க ள் உள்ளே ஒரு பேதமும் இன்றிய பொருளாம். அவ்வேதத்திற்கு ஆபரணமாகிய பரிசுத்த வஸ்துவும் தத்துவமசி வாக்கியத்தின் அர்த்தமும் ஆம்.

தத்துவமசி மகாவாக்கியத்தில் உள்ள முப்பதங்களின் அர்த்தங்களைக்கூறல்.

61. நிமலமாம் பரம் அதுவெனும் பொருள்
நீயெனும் பொருள் சீவனே
அமலமான இரண்டு ஐயிக்கியம்
அசி பதப் பொருள் ஆவதே.

(இதன் பொ-ரை) அம்மகாவாக்கியத்தின் கண் உள்ள தத் என்னும் சொல்லின் பொருள் நின்மலமாய் விளங்கும் முற்றறிவு முதலிய உயர் குணம் உடைய பி ர ஹ் ம ம ா ம். (ஈசுரனும்) அவ்வாக்கியத்தின் கண் உள்ள துவம் என்னும் சொல்லின் பொருள் மலசகிதமாய் விளங்குகின்ற சிற்றறிவு முதலிய தாழ்ந்த குணம் நிறைந்த ஜீவான்மாவேயாம். அவ் வாக்கியத்தின் கண் உ ள் ள அசி என்னும் சொல்லின்

பொருள் ஆவது நின்மல வடிவமாயுள்ள இவ்விரு பொருள்களின் ஏகத்துவமாம் என்றார்.

## பரஸ்பர விருத்த தர்மங்கள் உள்ள ஜீவேஸ்வரர்கட்கு ஏகத்துவம் கூடுமாறு எங்ஙனே என சீடன் வினுதல்.

61. அருமையாகிய பிரஹ்மம் முன்னிலை
ஆகும் ஆருயிர் பின்நிலை
இருமையான இரண்டு ஐக்கியம்
எய்துமாறு எவன் என்னவே.

(இதன் பொ-ரை) அறிதற்கு அருமையாகிய பிரஹ்மம் பரோக்ஷமாம் தேக முதலியவற்றில் தாதான்மியமாய்ப் பொருந்திய ஜீவன் அபரோக்ஷமாம் இவ்வாறு முரண்பட்ட தன்மையினை உடைய பிரஹ்மம் ஜீவன் என்னும் இருவருக்கும் ஏகத்துவம் பொருந்தும் விதம் எங்ஙனம் என்றுகேட்க.

## ஜீவேஸ்வரர்களுக்குஉண்டாம்பேதம் உபாதியால் ஆகியதே அல்லது உண்மை அன்று என ஆசிரியர் கூறல்.

62. உபாதியால் வரு பேதமே இவர்
பேதமன்று உரு உயிரினன்
கபாதியாம் உடல் போல் இறைக்குள
காரணுதிகள் காயமே.

(இதன் பொ-ரை) ஈசுரன் சீவன் என்னும் இவர்களது பேதம் உபாதியாலாய பேதமேயாம் அன்றிச் சொருபத்தால் ஆகியதன்று ஜீவனுக்கு கப முதலிய தோஷங்களை உடைய தேக முதலிய உபாதிகள் இருப்பது போன்று ஈசுரனுக்கும் சர்வ காரணத்துவ முதலிய ஏழு உபாதிகள் உள்ளனவாம்.

உபாதிகள் ஏழு. 1. தேகம், 2. இந்திரியம், 3. பிராணன், 4. மனம், 5. புத்தி, 6. அகங்காரம், 7. சித்தம் ஆம்.

ஈசுர உபாதிகளைக் கூறல்.

63. ஈசன் முற்றறிவான் வியாபி
எவைக்கும் ஏது இயம்பும் ஆ
காசகன் நிருபாதி பாவனை
காரணாதிகள் ஆவதே.

(இதன் பொ-ரை) சர்வேஸ்வரத்துவம் சர்வஞ்ஞத்துவம் சர்வவியாபகத்துவம் சர்வகாரணத்துவம் சர்வசிருஷ்டித்துவம் சர்வ ஸ்திதித்வம் சர்வ சம்மாரத்துவம் ஆகிய இவையே ஈசுரனுக்கு உபாதிகளாம்.

## விரோதமாயுள்ள உபாதிகளை நீக்க தத்துவம் என்னும் இரு பதங்கட்கும் சுத்தம் அசுத்தம் என்னும் இருவகைப் பொருளையும் கூறல்.

64. ஆகமுன் திகழ் ஏழு நான் எனல்
தொம்பதத்தில் அசுத்தமே
சோகமின்றிய சான்று நான் எனல்
தொம்பதப் பொருள் சுத்தமே.

(இதன் பொ-ரை) நான் என்பதற்கு விஷயமாகிய உடல் இந்திரியங்கள் பிராணாதி வாயுக்கள் மனம் புத்தி அகங்காரம் சித்தம் என ஏழு உபாதிகளும் அவற்றின் அதிஷ்டானமும் சேர்ந்து துவம்பதத்திலுள்ள அசுத்தார்த்தமாம் நான் என்பதற்கு விஷயம் ஆகிய துன்பமில்லாத சாக்ஷியே துவம் பதத்திலுள்ள சுத்தார்த்தமாம்.

## தத்பதத்திற்கு சுத்தம் அசுத்தம் என்னும் இரு வகைப் பொருள் கூறல்.

65. அகில காரணம் ஆதி நான் எனல்
தத் பதத்தில் அசுத்தமே
சகல காரண சான்று நான் எனல்
தத் பதப்பொருள் சுத்தமே.

(இதன் பொ-ரை) நான் என்பதற்கு விஷயமாகிய சர்வ காரணத்துவ முதலான ஏழு உபாதிகளும் அவற்றின் அதிஷ்டான சேதனமும் சேர்ந்து தத்பதத்திலுள்ள அசுத் தார்த்தமாம். காண்பதற்கு விடயமாகிய சகல காரணத்துவ முதலியவற்றிற்குச் சாக்ஷியாகிய பிரஹமம் தத்பதத்தில் உள்ள சுத்தார்த்தமாம்.

## கூடஸ்த்தப்பிரஹ்மங்களின் ஏகத்துவமே அசிபதப் பொருள் ஆம் எனக்கூறல்.

66. செறிந்த காரண காரியங்கள்
சிதைந்து மேல் உறு சித்து அதாய்
அறிந்த வாதனை தானும் அற்றதவ்
அசி பதப்பொருள் ஆவதே.

(இதன் பொ-ரை) நெருங்கியுள்ள காரணம், காரியம் என்னும் இருவகைப்பட்ட ஏழு உபாதிகளும் விசாரத்தால் நீங்க அவ்வுபாதிகளுக்கு அதீதமாகப்பொருந்திய சைதன்ய வடிவ கூடஸ்தப் பிரஹ்மங்களாய் சீவேஸ்வரர்களை அறிந் ததனால் ஆகிய அந்தப்பேத வாதனையும் நசித்ததுவே அவ் வசி என்னும் பதத்தின் அர்த்தமாவதாம்.

## சுத்தம் அசுத்தம் என்னும் இருவகைப் பொருள் கூறுவது முரண் அல்லவா என அதற்குச் சமாதானங் கூறல்.

67. அசுத்தமாகியது இருபதத்தினும்
முக்கியப்பொருள் ஆகுமே
விசுத்தமானது இலக்கியப் பொருள்
என்று சொல்லுவர் விமலரே.

(இதன் பொ-ரை) துவம்தத் என்னும் இருபதத்தினுக்கும் நம்மாற் கூறப்பட்ட அசுத்தார்த்தமாகிய இதுவே ஏனைய நூல்களில் பெரியோர்களால் முக்கியார்த்தம் என்று உரைக்கப்படுவதாகும் அல்லது இரு பதத்தினுக்கும் நம்மாற் கூறப்பட்ட சுத்தார்த்தமாகிய இதனையே இலக்கியார்த்தமென்று குற்றமற்ற பெரியோர் கூறுவார்கள்.

## பிற நூல்களிற் கூறியவாறே முக்கியம் இலக்கியம் என்னும் இருவகைப் பொருள்களைக் கூறல்.

68. முரண்ட சீவ பரங்கள் தம் உடல்
முக்கியப் பொருள் ஆவதே
இரண்டில் வேறறு சிற் சொரூபம்
இலக்கியப் பொருள் ஆவதே

(இதன் பொ-ரை) தம்உபாதிகளால் முரண்பாடுடைய ஜீவப்பிரஹ்மங்கள் முக்கியார்த்தங்கள் ஆகும் ஜீவப்பிரஹ்மங்கள் இடத்து அபேதமாகிய சின் மாத்திர சொரூபமே இலக்கியார்த்தமாம்.

## ஜீவேஸ்வரர்களின் ஏகத்துவம் பொருந்துமாறு எவ்விதம் என ஆசிரியர் கூறல்.

69. ஊக்கியப் பரஜீவர் தங்கள்
உடம்பு இரண்டும் இலக்கணு
வாக்கியப்படி நீக்கினுல் ஒரு
வத்துவே பரவத்துவே.

(இதன் பொ-ரை) உயர்வு தாழ்வாகப் பொருந்திய சீவேஸ்வரர்களது உபாதிகள் இரண்டையும் இலக்ஷணு வாக்கியப் பிரகாரம் நீக்கிடில் எஞ்சி நின்ற சேதன ரூபமாகிய மேலான வஸ்து ஏக ரூபமேயாம்.

## இலக்கணே எத்தனே வகைப்படும் என ஆசிரியர் அருளல்.

70. ஓரில் விட்டதும் விட்டிடாததும்
உபயமும் என உணர்வு உளோர்
தேரில் இலக்கணே திரி விதத்தில்
இசைப்பர் மற்றது இயம்புவாம்

(இதன் பொ-ரை) வடகலேயில் நிபுணர்களான பண்டிதர்கள் சுருதி ஸ்மிருதி வாக்கியங்களே ஆராயுங்கால். அவை அருத்தமாகாமல் பரஸ்பரம் விரோதம் ஆமேல் விரோத பரிகாரமாய் அருத்தம்ஆகுமாறு தெளிவான இலக்கணே விட்ட இலக்கணே விடாத இலக்கணே விட்டுவிடாத இலக்கணே என மூவகை இலக்கணேயாகச் சொல்லுவர் அம்மூவகை இலக்கணேக்குகூறிய உதாரணங்களே கூறுவாம்

## விட்ட இலக்கணேக்கு உதாரணம்.

71. மஞ்சு கூப்பிடுது என்றல் போலவும்
வடபகீ ரதியுள்ளதே
விஞ்சு கோசம் அது என்றல் போலவும்
விட்டலக்கணேயாவதே.

(இதன் பொ-ரை) மஞ்சம் சப்திக்கின்றது என்றல் போலவும் வடபகீரதியெனப் பெரிய கங்கையின் இடத்து பெரிய இடைச்சேரியானது இருக்கின்றது எனல்போலவும் இருப்பது விட்ட இலக்கணையாய உதாரணமாம்

**இலக்கணையின் தன்மையை முன்னர் கூறியுள்ளேம் விடாதஇலக்கணையின் தன்மை இதுவெனல்**

72. சிவலை நின்றது வெள்ளை போயினது
என்று செப்புதல் போலவே
கவலை இன்றி விடாத இலக்கணை
என்று நீ கொள் கருத்திலே.

(இதன் பொ-ரை) சிவப்பு நின்றது வெண்மை போயிற்று என்று கூறுதல் போலவும் இருப்பது யாதொரு துன்பமும்இன்றி விடாதஇலக்கணையின் உதாரணம் என்று உன் மனத்தின் கண் நிதாரணம் செய்து கொள்ளுதி.

**விட்டுவிடாதஇலக்கணையின் தன்மை இதுவெனல்**

73. மேவும் விட்டு விடாத இலக்கணை
மெய்ம்மையாதெனில் அந்த இத்
தேவதத்தன் எனும் பொருட்படி
சிந்தை செய்திடு தீரவே

(இதன் பொ-ரை) மூன்றுவதாய்ப் பொருந்திய விட்டு விடாத இலக்கணையின் சொருபம்யாது என்றுல் அது ஸோஅயம் தேவதத்தன் என்னும் வாக்கியத்திற்போலாம். உறுதியாக இதனை மனனம் செய்வாய்.

**மகாவாக்கியத்தில் விட்டு விடாத இலக்கணையே உபயோகமாம் எனல்.**

74. விட்ட இலக்கணை தனையும் விட்டு
விடாத இலக்கணை தனையும் நீ
விட்டு விடாத இலக்கணை
யால் விளங்கு விளங்கவே.

(இதன் பொ-ரை) மகாவாக்கியத்தில் உபயோகமின்மையால் விட்ட இலக்கணையையும் விட்டு அவ்வாறே விடாத் இலக்கணையையும் விட்டு மகா வாக்கியத்திற்கு உபயோகமாகிய விட்டு விடாத இலக்கணையால் உன் சொருபம் அபரோக்ஷமாக்விளங்கும்படி நீவிசாரம் செய்குதி

## விட்டு விடாத இலக்கணைக்கு உதாரணம்.

75. போது மேவிய தேசம் விட்டொரு
புருடனைக் கொளுமாறு போல்
ஓதும் ஈருடல் கண்டு விட்டு அதன்
உண்மை காண உணர்ந்திடே

(இதன் பொ-ரை) அவனே இத்தேவதத்தன் என்னும் வாக்கியத்தில் உள்ள அவன் இவன் என்னும் இரு பதங்களின் வாச்சியார்த்தங்கள் உள்ளே ஐக்கிய விரோதியாகப் பொருந்திய இறந்த காலம், நிகழ் காலம், தூரதேசம் சமீப தேசம் ஆகிய இவ்விசேஷணங்களை விடுத்து அவிரோத தேவதத்தனாகிய ஒரு புருடனை அவ்வாக்கியத்தின் அர்த்தமாகக் கொள்வது போல தத்துவமசி மகாவாக்கியத்தில் உள்ள தத்துவம் என்னும் இருபதங்களின் வாச்சியார்த்தங்களில் ஐக்கியவிரோதிகளாக கூறப்படுகின்ற காரணம் காரியம் என்னும் இருவகைப்பட்ட உபாதிகளையும் அறிந்து நீக்கி அவவுபாதிகள் இரண்டிலும்அனுகதமாய் அவற்றிற்கு அதிஷ்டானமாய் அவிரோத சேதனமாய் உள்ள சொருபத்தை ஏகருபமாயும் அவ்வாக்கியத்தின் அருத்தமாயும் காணுமாறு விசாரம் செய்குதி.

## மீண்டும் தெளிவாகக் கூறல்.

76. பிரியா வுயிர் காரியமாம் உடலும்
பிரஹ்மத்துறு காரணமாம் உடலும்
கரியாகிய வாதனையுங் கழியக்
காட்டும்படி கண்டுகொள் கண்ணுறவே.

(இதன் பொ-ரை) ஜீவனை விட்டு நீங்காதிருக்கின்ற காரிய உபாதிகள் ஏழும் பிரஹ்மத்தின் கண் பொருந்திய காரண உபாதிகள் ஏழும் அவ்வுபாதிகள் இரண்டிற்கும் சாக்ஷியாகிய கூடஸ்தப் பிரஹ்மங்களை முறையே ஜீவேஸ்வரர்களது யதார்த்த சொருபமாக உணர்ந்ததனுலாகிய அந்தப்பேத வாதனையும் நீங்க நாம் உணர்த்தும் விதமே அபரோக்ஷமாகத் தெரிந்து கொள்ளுவாய்.

## எந்த அவத்தையில் வஸ்துவைக் காணலாம் எனக்கூறல்.

77. கரணத்திரள் நிற்பினும் அப்பொருளைக்
காணக்கிடையாது அவை கை அறவே
மரணப்படினும் அது கண்டு கொளும்
வழி இல்லை எனும்படி நீ மதியே.

(இதன் பொரை) அகக் காரணம் புறக் காரணம் ஆகிய தத்துவக் கூட்டங்கள் கூடி நின்றுலும் அவ்வஸ்துவை தரிசிக்க முடியாது அத்தத்துவ கூட்டங்கள் யாதொரு செயலுமின்றி ஒடுங்கி நின்றுலும் அவ்வஸ்துவை தரிசிக்க முடியாது என்னும் வழியை நீ தெரிந்து கொள்வாய்.

## அவத்தைகளின் இலக்கணம் கூறல்

78. எந்தக் கரணங்களும் மேவல் நனு
இதில் வாதனையால் விடயங்கள் ஒடே
அந்தக் கரணங்கள் பொருந்தல்கனு
அவைமாய்தல் சுழுத்தி அவத்தையதே.

(இதன் பொ-ரை) பாகியத்திலும் ஆந்தரத்திலுமுள்ள சகல கரணங்களும் பொருந்தி விவகரித்தற்கிடமாகிய அவத்தை சாக்கிராவத்தையாம். இச்சாக்கிராவத்தையில் உள்ள அநுபவத்தால் உண்டாகிய சமஸ்காரத்தால் ஞான சம காலத்துத் தோன்றிய மனைவி மக்கள் முதலிய விஷயங்களோடும் கூடிய மனம் முதலிய அகக்கருவிகளோடும் கூடி விவகரித்தற்கிடமாகிய அவத்தை சொப்பன அவத்தையாம். அவ்வகைக் கரணங்களும் அவித்தையில் ஒடுங்கி இருத்தற்கிடமாகிய அவத்தை சுழுத்தி அவத்தையாம்.

## இதில் எந்த அவத்தையில் அப்பொருள் விளங்கும் என முனிவர் கூறல்.

79. வினவிற் பரத்தை அறிவுறுதற்கு
அவத்தை புலன் வினை மாறியே
நனவிற் சுழுத்தி நிலை வரின் அப்
பொருள் திகழும் நலமாகவே.

(இதன் பொ-ரை) முற்கூறிய சாக்கிர முதலிய மூன்று அவத்தைகளும் பிரஹ்ம தரிசனம் செய்ய இயலாததாயின் அப்பிரத்தியக் அபின்ன பிரஹ்ம தரிசனத்திற்குறிய அவத்தை யாதாம் என்று கேட்கின் கரண வியாபாரங்கள் ஒழிய சாக்கிரத்தில் சுழுத்தி நிலை வருமாயின் அப்பிரத்தியக்க பின்ன பிரஹ்மம் அபரோக்ஷமாக விளங்கும் ஆதலால் இந் நனவிற் சுழுத்தி நிலையே பிரஹ்ம தரிசனத்திற்குரிய அவத்தையாம்.

## பிரியாவுயிர் என்று கூறிய அதிலுள்ள விஷயத்தை இரண்டு செய்யுட்களாற் கூறல்.

80. திவிதத் தவத்தைகளை அறிவுற்ற
அத் துரிய நிலை சீவனே
இவ்விதத்தில் அப்புருடன் நனவுற்ற
அத்துரிய நிலை ஈசனே.

(இதன் பொ-ரை) ஜீவனது சாக்கிர முதலிய அவத்தாத்திரயங்களை உதாசீனமாய் அறிதலைப் பொருந்தி நின்ற அத்துரியம் என்னும் பிரத்தியக் ஆத்ம வடிவமே ஜீவனது யதார்த்த சொருபமாம் இவ்வண்ணம் அவ்வீஸ்வரனது சிருட்டி முதலிய அவத்தாத்திரயங்களை உதாசீனமாய் அறிதலைப் பொருந்தி நின்ற அத்துரியம் என்னும் பிரஹ்ம ஸ்வருபமே ஈசுரனது யதார்த்த சொருபமாம்.

81. அகிலக் கரிப் பரம துரியப் பொருள் துரியம்
அது வாகையே
புகலுற்ற தத்துவமசி யென்னும் முப்பதத்தின் முடி
பொருள் ஆவதே.

(இதன் பொ-ரை) அவத்தாத்திரய சாக்ஷி ருபப் பிரத்தியக் ஆத்மாவானது சர்வ சாக்ஷியாகிய ஈசுர துரிய ருப பிரஹ்மமாக இருத்தலே சாம வேதத்தில் உள்ள சாந்தோக்கிய உபநிடதத்தின் ஆருவது அத்தியாயத்தில் சுவேதகேதுவிற்கு உத்தாலக முனிவர் கூறி அருளிய தத்துவம் அசி என்கின்ற மூன்று சொற்களின் முடிந்த பொருள் ஆவதாம்.

## அகண்டார்த்தப் பேற்றினை அடையும் வலி இன்மையை ஆசிரியரிடம் கூறல்.

82. நிமலப் பொருள் சுருதி நெறியிற் பெறக் கருணை
நிதி கூறவே

அமலப் பொருள் பெறுதல் அருமைத்து எனக்கழறி
அடி வீழவே.

(இதன் பொ-ரை) கருணாநிதியாகிய ஆசிரியர் சுருதி வாக்கிய விசார வாயிலாக நின்மலமாகிய பிரஹ்ம தத்துவத்தை அடையும்படி உபதேசிக்க சசிவர்ணன் பிரத்தியக்க பின்ன பரம் பொருளை எம் போன்றவர்களால் அடைதல் மிகவும் அருமையானதாமென்று விண்ணப்பித்து திருவடியில் வீழ்ந்து வணங்கினான்.

## தீக்ஷை செய்து அநுபவம் வினவத் தொடங்கல்.

83. தமரக்கலைக்கு அளவு தெறிவற்ற தத் பொருள்
அதனை ஈகுவான்
அமரர்க்கு அளப்பரிய பத நற்புனல் கொடு செய்து
அபிடேகமே.

(இதன் பொ-ரை) சப்த ரூப வேதாகமங்களுக்கும் அளந்து அறிதற்கரிய தத் பதார்த்தமாகிய பிரஹ்மத்தை துவம் பதார்த்த ரூபப்பிரத்தியக் ஆத்மாவாக அம்கை நெல்லிக்கனி போல் அபரோக்ஷமாய் அளித்தற் பொருட்டு தேவர்களுக்கும் அளவிட்டுக் கூறுதற்கரிய தனது பாத தீர்த்தத்தைக் கொண்டு சீடனுக்கு அபிடேகம் செய்து அருளி.

### இதுவும் அது.

84. பவளத்தில் வைத்த அமிர்தினின்மிச்சில் இட்டுஇனிய
பரிவோடு மா
தவளப் பொடிக் கவசம் என விட்டு உடற் பகைகள்
தலை சாயவே.

(இதன் பொ-ரை) உடல் முதலிய காரிய உபாதிகள் ஆகிய சத்துருக்கள் தலை சாய்ந்து ஓடும்படி பெருமை மிக்க

வெண்ணிற விபூதியினை வஜ்ரகவசம் போலத்தரித்து இனிமையான அன்பிருல் பவளம் போன்ற அதரத்தில் வைத்துத் திருவமுது செய்தருளிய அமிர்தத்தினை ஒத்த தனது பரிகல சேடத்தைக் கொடுத்தருளி.

85. உதகத்து உடற் பொருளொடு உயிர் கைக்கொடு உச்சிமிசை
ஒரு போதொடே
பதகத் தலத்தை விட இருகைத் தலத்தொடு இரு
பத மேவியே

(இதன் பொ-ரை) நீர் பூர்வகமாய் உடல் பொருள் ஆவி என்னும் மூன்றையும் வாங்கிக் கொண்டு ஒருக்ஷணத் திலேயே அஞ்ஞான சப்த பூமிகளினின்றும் நீங்கி ஞான பூமியின் முடிவாகிய அநுபவத்தைப் பெறுமாறு சிரசின்மீது இரு கரங்களோடு இரண்டு திருவடிகளையும் மேவுவித்து.

86. ஒழியப் புலக்கண் உபநிடதப் பொருள் தெரிய
உள ஞானமாம்
விழியைக்கொடுத்து மொழி என முப்பதப் பொருளும்
வெளியாகவே.

(இதன் பொ-ரை) விஷய திருஷ்டி நீங்குவதற்கும் உபநிடதங்களின் அருத்த ருபமான பிரஹ்ம வடிவ பிரத்யக் ஆத்மாவானது விளங்குவதற்கும் ஏதுவாகவுள்ள ஞானமா கிய திருஷ்டியைக் கொடுத்து ஏ சசிவர்ண! தத்துவமஸி மகாவாக்கியத்தின் கண் உள்ள மூன்று பதங்களின் அர்த் தங்களையும் யாம் உபதேசித்த வண்ணமே நீ அநுபவித்த படி விளக்கமாகக் கூறுதி என ஆஞ்ஞை செய்ய.

## சீடன் தனது அநுபவத்தைக் கூறத்தொடங்கல்.

87. நனவைத் துவக்கி முடி துரியத்தை முற்ற இறை
நவில் நீதியே

மன வர்க்கம் அற்ற அநுபவம் உற்ற சிற்சகன
வலி ஓதுமே

(இதன் பொ-ரை) ஜீவசாக்கிரத்தைத் தொடங்கி சிவ துரியத்தை ஈருக. ஆசிரியர் திருவாய் மலர்ந்து அருளிய வண்ணமே தான்அடைந்த மனமுதலிய கரணக்கூட்டங்கள் அற்றதனுலாகிய பிரஹ்மாநுபவத்திரத்தைச் சசிவர்ணன் கூறுவான்.

## ஜீவ சாக்கிரம் வேறு.

88. புரணமாகவே புறம் புள புலன்களும் அந்தக்
கரணம் இயாவையும்வழங்கிடம்நனவெனக்கண்டேன்

(இதன் பொ-ரை) பாகியத்தில் சம்பூரணமாக உள்ள கரணங்களும் மன முதலிய அந்தக் கரணங்களும் ஆகிய அனைத்தும் ஸ்திர விஷயங்களோடு பொருந்தி தத்தம் விவகாரங்களைச்செய்யும் அவஸ்தையை ஜீவ சாக்கிரமென யான் அறிந்துளேன்.

## ஜீவ சொப்பனம்.

89. புரண்மாகிய புறம் புள புலன் கெட அந்தக்
கரணம் யாவையும் வழங்கிடம் கனவெனக் கண்டேன்

(இதன்பொ-ரை) பாகியத்தில் உள்ள விளக்கமாகிய கரணங்கள் அவித்தையில் ஒடுங்க மன முதலிய அந்தக்கரணங்கள் யாவும் சாக்கிரத்தில் உள்ள விஷய வாசனையால் கற்பிக்கப்பட்ட அஸ்திர விஷயங்களோடு பொருந்தி தத்தம் விவகாரங்களைச் செய்யும் அவத்தையை ஜீவ சொப்பனம் என யான் அறிந்துளேன்.

## ஜீவ சுழுத்தி.

90. மரணமாகிய திசை இதுவெனும்படி மறுதி
கரணம் யாவைவும் இறந்துளசுழூத்தியுங்கண்டேன்

(இதன் பொ-ரை) மரணம் போன்ற காலம் இவ் அவத்தை என்று யாவரும் கூறும்படி மனம் முதலிய சகல கரணங்களும் அவித்தையின் கண் ஒடுங்கியுள்ள ஜீவசுழுத்தியையும் யான் அறிந்துளேன்.

## ஜீவ துரியம்.

91. எஞ்சல் இன்றி எக்காரணமும் இறந்து
இருண்டு இருந்த
துஞ்சல் அங்கு உணர்போதமாம் துரியமும் கண்டேன்

(இதன் பொ-ரை) குறைவின்றி அகக்கரணம் புறக்கரணம் ஆகிய யாவுமே அவித்தையின் கண் லயமாகி அந்தகாரமயமா இருந்த அச்சுழுத்தி அவத்தையை அறிந்து கொண்டு இருக்கின்ற சேதன வடிவப் பிரத்தியகாத்மாவை உணர்வதாகிய ஜீவ துரியத்தையும் யான் அறிந்துளேன்.

## ஈஸ்வர சாக்கிரம்.

92. துரியமாகிய போதம் ஓர் துளக்கம் அற்று அனைத்தின்
கரியதா இருந்திடம் பரன் நனவு எனக் கண்டேன்.

(இதன் பொ-ரை) ஜீவ துரியத்தில் விளங்குவதாகிய சேதன ரூபப் பிரத்தியக் ஆத்மாவானது யாதொரு சலனமும் இன்றி சர்வப்பிரபஞ்சத்திற்கும் சாக்ஷிரூபமா உள்ளதை உணர்ந்த அவஸ்தையை ஈசுர சாக்கிரம் என்று யான் அறிந்துளேன்.

## ஈசுர சொப்பனம்.

93. புணர்ந்த இச்சகத்துஒழித்துஉணர்போதமாம் தனையே
உணர்ந்த மற்றது பரன் கனவெனும்படி உணர்ந்தேன்

(இதன் பொ-ரை) இந்தச் சர்வ பிரபஞ்சத்திற்கும் யான் சாக்ஷி ரூபப் பிரஹ்மமாக இருக்கின்றேன் என்று

பொருந்திய பாவனையை ஒழித்து சாக்ஷி ரூப சேதனமாகிய தன்னையே அறிந்து நின்ற அவஸ்தையை ஈசுர சொப்பனம் என்று சொல்லும்படி உணர்ந்தேன்.

### ஈசுர சுழுத்தி.

94. சான்று சாக்கியம் இறந்திடத்தான் இருந்தமையும்
தோன்றுருவிடம் பரன்சுழுத்தியது எனத்துணிந்தேன்

(இதன் பொ-பொரை) சாக்ஷிய ரூபப் பிரபஞ்சம் அனைத்திற்கும் சாக்ஷி ரூபப் பிரஹ்மம் யான் சாக்ஷி ரூபப் பிரஹ்மமா இருக்கிறேன் என்னும் ஈசுர சாக்கிரம் நசிக்க சாக்ஷி ரூபப் பிரஹ்மமாக நான் இருக்கிறேன் என்று தான் இருந்த ஈசுர சொப்பனமும் தோன்ருதுள்ள அவஸ்தையை ஈசுர சுழுத்தியென்று யான் அறிந்துளேன்.

### ஈசுர துரியம்.

95. மரித்தது என்று உணர்ந்து உரைத்ததும் மரித்திடம்
தனிலே
தெரித்த போத மேது அது பரன் துரியமாய்த்
தெளிந்தேன்.

(இதன் பொ-ரை) ஈசுர சாக்கிரம் இறந்தது என்று அறிந்து கூறத்தக்கதாகிய ஈசுர சொப்பனமும் இறந்த ஈசுர சுழுத்தி அவஸ்தையை அந்தச் சுழுத்தியை விளக்குவதாகிய சேதனத்தைஉணரும் அவஸ்தை எதுவோ அதனை ஈசுர துரியமாய் யான் தெளிந்தனன்.

### சிவ சாக்கிரம்.

96. இறை எனும் பொருள் துரியமே என்னை ஆண்டவனே
மறையின் அந்த நற்பதப் பொருள் நனவு என
மதித்தேன்

(இதன் பொ-ரை) நாயினும் கடையேன் ஆகிய அடியேனைத் தடுத்து ஆட்கொண்டு அருளிய எமது குருமூர்த்தியே ஈசுர துரியத்தையே வேதத்தின் முடிவாகிய நல் அசி பதத்தின் பொருள் ஆகிய சிவ சாக்கிரம் எனத் தெளிந்து உள்ளேன்.

## சிவ சொப்பனம்.

97. பண்டை விச்சுவ வாதனைப்பழுது போய் முழுதும்
கண்ட கண்ணதே ஆகிய கனவதும் கண்டேன்.

(இதன் பொ-ரை) முன்னிருந்த ஜகத் வாசனையாகிய குற்றம் நீங்க காணப்பட்ட சர்வ திருசியங்களையும் திருக்குருபமாய் அறிந்ததாகிய சிவ சொப்பனத்தையும் யான் கண்டனன்.

## சிவ சுழுத்தி.

98. காட்சி யாவையும் கண்ணதாய் அக்கணும் கரைந்த
மாட்சியாகிய அகோசரம் உறக்கமாய் மதித்தேன்.

(இதன் பொ-ரை) திருசியங்கள் அனைத்தையும் திருக்கு ருபமாய் அறிய அத்திருக்கு ருப (அறிவும்) உணர்ச்சியும் நசித்த மாட்சிமை பொருந்திய வாக்கு மனங்கட்கு எட்டாத நிலைமையை சிவ சுழுத்தியெனவே நிச்சயம் செய்துளேன்.

## சிவ துரியம்.

99. அருந்தவா மறை அந்தமாம் அகோசரந்தனில் நீ
இருந்தவாறு அறிவித்தவாறுயெங்ஙனம் இசைப்பேன்

(இதன் பொ-ரை) அரிய தவத்தை உடையவரே! வேதத்தின் முடிவாகிய வாக்கிற்கும் மனத்திற்கும் எட்டாத சிவ துரிய நிலையில் தேவரீர் இருந்த விதத்தையும் அடியேற்கு அறிவித்த வித்தையும் யான் எவ்வாறு கூறுவேன்

## சர்வ அவஸ்தைகளிலும் விளங்கும் பொருள்கள் தேவரீரே ஆகலின் அதனை யான் கூற அறிந்திலேன் எனக்கூறல்.

100. எம்பிரானிடம் தொறும் இடந்தொறும் அதுவாய்த்
தம்பிரான் நடம் செய்யும் வகைச் சாற்றுமாறு அறியேன்.

(இதன் பொ-ரை) திருக்கூட்டத் தலைவரும் எமது இறைவரும் ஆகிய தேவரீர் ஜீவசாக்கிர முதல் சிவ துரியம் ஈருயுள்ள அவஸ்தைகள் தோறும் அந்த அந்த அவஸ்தை களுக்கு ஏற்றபொருள் வடிவமாய் கிரீடை செய்கின்ற விதத் தையும் கூறும் தன்மை யாது என அறிந்திலேன்.

## ஆசிரியர்க்குச்செய்யும் கைமாறு காணேன் எனல்

101. ஆவியே அடியேன் செய்கைமாறு உனக்கு என் எனில்
பாவியேனது தானும் உன்னுடையதாம் பண்டே.

(இதன் பொ-ரை) எனது பிராண பூதரான ஹே சுவா மின்! முத்தியை அளித்த பேர் உபகாரத்திற்கு அடியேன் செய்கின்ற பிரதி உபகாரம் தேவரீர்க்கு என்னவென்றால் என்னை அடிமை கொண்ட அன்றே பாவியாகிய எனது உடல் பொருள் ஆவி மூன்றும் உம்முடையனவேயாம்! ஆத லால் இப்போது செய்யும் கைமாறு ஒன்றையும் யான் கண்டிலேன்.

## இவ்வுடல் உள்ளவரை அடியவர்களுக்கு செய்யும் சேவையையே கைமாறாகக் கொள்ளல் வேண்டும் எனல்.

102. ஆவல் செய்து எனது ஆக்கை உள்ள அளவும்
நின் அடியார்க்கு
ஏவல் செய்வதே அன்றி மற்றொன்றும் நான்அறியேன்

(இதன் பொ-ரை) அடியேன் உடல் உள்ள அளவும் தேவரீரது தொண்டர்களுக்கு அன்பு கொண்டு ஏவற்பணி விடைகளைச் செய்வதே கைமாறு அன்றி வேறு ஒன்றினையும் யான் கைமாருக உணரேன் ஆகலின் இதனையே கைமாருகக் கொள்ளல் வேண்டும்.

## குரு பணிவிடையைப் புகழ்ந்து பின் யாது செய்தான் எனக்கூறல்.

103. இறவில் எப்பதமும் பெற வேண்டிலேன் என்றும்
பிறவி வேண்டுவன் நின் திருப்பணி செயப்பெறினே.

(இதன் பொ-ரை) தேவரீர் திருப் பணிவிடைகளைச் செய்யப்பெற்ருல் அழிவு இன்றிய எம் முத்தியையும் பெற விரும்பேன் எப்பொழுதும் பிறவியையே விரும்புகின்றேன்.

## பின் இது செய்தான் எனல்.

104. என்று பலகால் விழும் எழும் தொழும் அழும் புரியும்
என்னை இனியான்
நின்று பலவாக உரை செய்த அவன் அன்பிளெடு
நெஞ்சு உருகியே.

(இதன் பொ-ரை) ஆசிரியர் சன்னிதியில் நின்று இவ்வாறு பலவிதமாகக்கூறிய அச்சசிவர்ணன் அன்பிஞல் மனம் உருகி மேல் யான் செய்வது என்னை ஒன்றும் இல்லை என்று கூறி பல முறை வணங்கினன் பின் எழுந்து நிற்பன் மீண்டும் வணங்குவன் அழுவன்

## ஜீவித காலத்தில் முத்தனு இருக்கும் அவனுக்கு மீண்டும் அதனை யாம் கூறவேண்டுவதில்லை எனல்.

105. ஏட்டில் அறிவின்றி இறைதன்னில் அறிவின்றி இவ்
உடம்பின் உடனே
வீட்டில் உறைவானை இனி வீடு பெறும் என்பது
விளம்புகிலமே.

(இதன் பொ-ரை) சாஸ்திர ஜன்னிய ஞானமும் இன்றி பிரஹ்மத்தின் சாக்ஷாத்கார ஞானமும் இல்லாமலே இத் தேகத்துடனேயே ஆன்ம இராமனாய் இருக்கும் இவனை தேக நீக்கத்தின் பின்னரே மோக்ஷமடைவன் என்ன யாம் கூறேம்.

## பிரஹ்ம ஞானத்தின் பிரவாகம் இது எனல்.

106. வஞ்ச வலியால் நரகில் வீழ் பிதிரர் அந்நரகு
பாழ்பட மிகா
விஞ்சை வலியால் அடைய ஏறினர் சுராதிபர்கண்
மேல் உலகமே.

(இதன் பொ-ரை) சசிவர்ணன்பூர்வம் செய்த பஞ்சமா பாதகத்தோடு கூடிய பாவ கர்மத்தின் பலத்தினுல் நரகினை அடைந்த அவனது பிதிர்க்கள் யாவரும் குற்றம் அற்ற இப்போது அடைந்துள்ள தத்துவ ஞானத்தின் பலத்தினுல் அந்நரகத்தினின்றும் நீங்கி இந்திராதியர் வாழும் சுவர்க் கத்தினை அடைந்தார்கள்.

## ஜீவன் முத்திபதத்தினை அடைந்த இச்சசிவர்ணனை வானும் வையமும் வந்து தாள் வணங்கின எனல்.

107. தேவரும் மனித்தரும் இவன் தொழில் வியந்து உரை
செயப்படுவதோ
மூவரும் வணங்கி முடியால் அவனது ஏவல் செய
முந்துறுவரே.

(இதன் பொ-ரை) சிவ விஷ்ணு வாதிகளும் தம் சிரத்தால் வணங்கி அச்சசிவர்ணனது சேவையைச்செய்ய யான் யான் என முன்னர்த் தலைப்படுகின்றனர் இங்ஙனமானால் இந்திரன் முதலிய தேவர்களும் இம்மண் ஆளும் அரசர்களும் இவனுக்குச் செய்துள்ள சேவையை அதிசயித்துச் சொல்லத் தக்கதாமோ! அன்று.

## அருவனாயினும் அன்பர்க்கு உருவனாய் வருவன் என்றதுமாமறை காணுமே என்று உபக்கிரமித்ததை தேவி உப சம்கரித்தல்.

108. ஞானியை நரன் சுரன் எனாது ஒழிக ஞாலம் உய
நாதன் அருளால்
மேனியது கொண்டு தனை நல்கவரும்என்று அறையும்
வேத முடிவே.

(இதன் பொ-ரை) உலகம் கடைத்தேற இறைவனே கருணையால் திருமேனியைத் தாங்கிக்கொண்டு பரிபூரண பிரஹ்ம சொருபமாகிய தன்னை அதிகாரிக்கு சுபாவமாக அளித்தற்பொருட்டு வருவன் என்பதாக உபநிடதங்கள் கூறும் ஆதலால் தத்துவ ஞானியை மனிதன் எனவும் தேவன் எனவும் கூறுதல் வேண்டியது இல்லையாம்.

## சசிவர்ண போதமும் பொழிப்பு உரையும் முற்றுப்பெற்றன.

ஓம் சாந்தி! ஓம் சாந்தி!! ஓம் சாந்தி!!!



பேர் ஆதரிக்கும் அடியவர் தம் பிறப்பை ஒழித்துப்
பெரு வாழ்வும் பேறும் கொடுக் கவரும்

பிள்ளைப்பெருமான் என்னும் பேராளா
சேரா நிருதர் குலகாலா சேவற்கொடியாய் திருச்

செந்தூர்த் தேவா தேவர் சிறை மீட்ட
செல்வா என்று உன் திருமுகத்தைப்

பாராநின்ற முலைத்தாயார் பரவிப்புகழ்ந்து விருப்புடன்
அப்பா வா வா என்று உனைப்போற்றப்

பரிந்து மகிழ்ந்து வரவழைத்தால்
வாராதிருக்க வழக்குண்டோ வடிவேல்
முருகா வருகவே.

வளரும் களபக் குரும்பை முலை வள்ளி கணவா
வருக வருகவே.

அன்பே சிவம்.

மனம் எனும் பகையை வென்றோர் மலரடி
முடிமேற் கொள்வாம்.









| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 |
|---|---|---|---|---|---|---|---|
| ஓம் | ந | மோ | நா | ரா | ய | ணு | ய |

என்னும்

அஷ்டாக்ஷர மகா மந்திரம்.

அஷ்டாக்ஷரம் என்பது வைஷ்ணவர்களால் பெரிய திருமந்திரம் என்னும் பெயரால் உபதேச மூலமாக அநுசந்திக்கும் ஓம் நமோ நாராயணுய என்பதாம்.

ஓமித்யே காக்ஷரம் நம இதித்வே அக்ஷரே நாராயணுயேதி!பஞ்சாக்ஷாராணி! இதீ அஷ்டாக்ஷரம் சந்தஸ் காயத்ரீ சேதி. ஓமித்யக்ரேவ் யாஹாரேத்நமஇதிபஸ்சாத்!நாராயணுயேத்யுபரிஷ்டாத்!என்றவாக்கியங்களின்படியே எட்டு அக்ஷரங்களாயும், மூன்று பதங்களாயும் பிரகாசிக்கின்றனவாம்.

இந்த அஷ்டாக்ஷரத்தைச் சொல்லுமிடத்தில் ஓமித்யேகாக்ஷரம், ஓங்காரம் (பிரணவம்) ஓர் அக்ஷரமாகவும் நம இதித்வே அக்ஷரே "நமஸ்ஸை" இரண்டாமக்ஷரமாகவும் (நாராயணுயேதி பஞ்சாக்ஷ ராணி) நாராயணுய என்னும் பதத்தைப்பஞ்சாக்ஷரமாகவும் உபநிடதங்கள் கூறுகின்றன.

| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 |
|---|---|---|---|---|---|---|---|
| ஓம் | ந | மோ | நா | ரா | ய | ணா | ய |

என்னும் எட்டு அக்ஷரங்களும்,

ஓம், நமோ, நாராயணாய என்று மூன்று பதங்களாயும், இம்மூன்று பதங்களும் ஸேஷத்துவம், பாரதந்த்ரியம், கைங்கர்யம் என்னும் மூன்று அர்த்தங்களையும் கொண்டுள்ளன. இப்பதத் திரயத்தில் முதல் பதம் ஆகிய ஓங்காரத்தின் வடிவத்தை வைஷ்ணவ சித்தாந்திகள் கருத்திற்கிணங்க இதனை யான் விளக்குகின்றேன்.

## பிரணவத்தின் உண்மை விளக்கம்.

ஓங்காரமானது சகல சம்பந்தங்களுக்கும் சகல வேதங்களுக்கும் சகல லோகங்களுக்கும் சகல தூல சூட்சுமப்பிரபஞ்சங்கள் அனைத்திற்கும் காரணமாய் இருத்தலினால் சகல வேத சாரமாம்.

## ஓங்காரத்தின் அர்த்தம்.

ஏகாக்ஷரமாக விளங்கும் ஓங்காரம் ஆனது அகாரம், உகாரம், மகாரம் என்னும் மூன்று அக்ஷரங்கள் அமைந்து உள்ளது.

| ஓம் | அகாரம் | உகாரம் | மகாரம் |
|---|---|---|---|
| பரம்பொருள்! | விராட்டு | இரண்யகர்ப்பன் | அவ்வியாகிருதம் |
| | வைஸ்வானரன் | சூத்திராத்மா | அந்தரியாமி |
| | விஷ்ணு | பிரமா | உருத்திரன் |
| | காத்தல் | படைத்தல் | அழித்தல் |
| | சத்துவம் | இரஸஸு | தமஸு |
| | தூலம் | சூட்சுமம் | காரணம் |
| | சாக்கிரம் | சொப்பனம் | சுழுத்தி |

| | | |
|---|---|---|
| விசுவன் | தைஜஸன் | பிராக்ஞன் |
| ஜீவாத்மா | அந்தராத்மா | பரமாத்மா |
| ஈசுரன் | ஜீவன் | ஜகத்து |
| பிரகிருதி | பிரதானம் | அவித்தை |
| சகளம் | சகள நிட்களம் | நிஷ்களம் |
| பூரகம் | கும்பகம் | ரேசகம் |
| சஞ்சிதம் | ஆகாம்யம் | பிராரத்தம் |
| இச்சை | அநிச்சை | பரவிச்சை |
| மந்தம் | தீவிரம் | அதிதீவிரம் |
| உத்கிருஷ்டம் | மத்யமம் | சாமானியம் |
| மனோநாசம் | வாசனுக்ஷயம் | தத்துவ ஞானம் |
| லோக வாசனை | சாஸ்திரவாசனை | தேக வாசனை |
| வாதம் | ஜல்பம் | விதண்டை |
| கர்மம் | பத்தி | ஞானம் |

இவை யாவும் பிரணவத்தின் வாச்சியப்பொருளே இவை யாவுமாய் உள்ளனவாம்.

அகரம், உகாம், மகரம் இம்மூன்று எழுத்துக்களின் இயல் அறியாதவன் மூடனே என்பதனை பலமேலோர்கள் எட்டும் இரண்டும் தெரியாத ஏழையேன் என பல பாக்களினுல் அறிவதுமன்றி உலகின் கண் இதனையே கொண்டு எட்டு இரண்டும் அறியாதவன் எனவும் உலக வழக்கின் கண்ணும் உள்ளது அதனை ஆராயின் தமிழ் மொழியில் எட்டு என்பது அகரம் ஆம். இரண்டு உகரமாம் உம்மையே மகரமாயின இவற்றினை இலக்கணை ருபமா அறியாதவன் பாமரனேயாவன் அகர, உகர, மகர இலக்கணம் அறியாதவன் என்பதாம். இன்னும் ஒருபொருள்உண்டு அது என்னை எனின்! எட்டும் இரண்டும் பத்து ஆம். தமிழின் கண் பத்து என்பது யகரமாம். அந்த யகரம் உயிர்களாம். அந்த உயிரின் இலக்கணம் அறியாதவன் எனவும் ஒரு பொருள் கொள்ளலாம்.

| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 |
|---|---|---|---|---|---|---|---|
| ஓம் | ந | மோ | நா | ரா | ய | ணு | ய |

என்னும் எட்டு அக்ஷரங்களும்,

ஓம், நமோ, நாராயணுய என்று மூன்று பதங்களாயும், இம்மூன்று பதங்களும் ஸேஷத்துவம், பாரதந்த்ரியம், கைங்கர்யம் என்னும் மூன்று அர்த்தங்களையும் கொண்டுள்ளன. இப்பதத் திரயத்தில் முதல் பதம் ஆகிய ஓங்காரத்தின் வடிவத்தை வைஷ்ணவ சித்தாந்திகள் கருத்திற்கிணங்க இதனை யான் விளக்குகின்றேன்.

## பிரணவத்தின் உண்மை விளக்கம்.

ஓங்காரமானது சகல சம்பந்தங்களுக்கும் சகல வேதங்களுக்கும் சகல லோகங்களுக்கும் சகல தூல சூட்சுமப்பிரபஞ்சங்கள் அனைத்திற்கும் காரணமாய் இருத்தலினுல் சகல வேத சாரமாம்.

## ஓங்காரத்தின் அர்த்தம்.

ஏகாக்ஷரமாக விளங்கும் ஓங்காரம் ஆனது அகாரம், உகாரம், மகாரம் என்னும் மூன்று அக்ஷரங்கள் அமைந்து உள்ளது.

| ஓம் | அகாரம் | உகாரம் | மகாரம் |
|---|---|---|---|
| பரம்பொருள்! | விராட்டு | இரண்யகர்ப்பன் | அவ்வியாகிருதம் |
| | வைஸ்வானரன் | சூத்திராத்மா | அந்தரியாமி |
| | விஷ்ணு | பிரமா | உருத்திரன் |
| | காத்தல் | படைத்தல் | அழித்தல் |
| | சத்துவம் | இரஸஸு | தமஸு |
| | தூலம் | சூட்சுமம் | காரணம் |
| | சாக்கிரம் | சொப்பனம் | சுழுத்தி |

| | | |
|---|---|---|
| விசுவன் | தைஜஸன் | பிராஞ்ஞன் |
| ஜீவாத்மா | அந்தராத்மா | பரமாத்மா |
| ஈசுரன் | ஜீவன் | ஜகத்து |
| பிரகிருதி | பிரதானம் | அவித்தை |
| சகளம் | சகள நிட்களம் | நிஷ்களம் |
| பூரகம் | கும்பகம் | ரேசகம் |
| சஞ்சிதம் | ஆகாம்யம் | பிராரத்தம் |
| இச்சை | அநிச்சை | பரவிச்சை |
| மந்தம் | தீவிரம் | அதிதீவிரம் |
| உத்கிருஷ்டம் | மத்யமம் | சாமானியம் |
| மனோநாசம் | வாசனக்ஷயம் | தத்துவ ஞானம் |
| லோக வாசனை | சாஸ்திரவாசனை | தேக வாசனை |
| வாதம் | ஜல்பம் | விதண்டை |
| கர்மம் | பத்தி | ஞானம் |

இவை யாவும் பிரணவத்தின் வாச்சியப்பொருளே இவை யாவுமாய் உள்ளனவாம்.

அகரம், உகாம், மகரம் இம்மூன்று எழுத்துக்களின் இயல் அறியாதவன் மூடனே என்பதனை பல மேலோர்கள் எட்டும் இரண்டும் தெரியாத ஏழையேன் என பல பாக்களினல் அறிவதுமன்றி உலகின் கண் இதனையே கொண்டு எட்டு இரண்டும் அறியாதவன் எனவும் உலக வழக்கின் கண்ணும் உள்ளது அதனை ஆராயின் தமிழ் மொழியில் எட்டு என்பது அகரம் ஆம். இரண்டு உகரமாம் உம்மையே மகரமாயின இவற்றினை இலக்கணை ருபமா அறியாதவன் பாமரனேயாவன் அகர, உகர, மகர இலக்கணம் அறியாதவன் என்பதாம். இன்னும் ஒருபொருள்உண்டு அது என்னை எனின்! எட்டும் இரண்டும் பத்து ஆம். தமிழின் கண் பத்து என்பது யகரமாம். அந்த யகரம் உயிர்களாம். அந்த உயிரின் இலக்கணம் அறியாதவன் எனவும் ஒரு பொருள் கொள்ளலாம்.

| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 |
|---|---|---|---|---|---|---|---|
| ஓம் | ந | மோ | நா | ரா | ய | ணு | ய |

என்னும் எட்டு அக்ஷரங்களும்,

ஓம், நமோ, நாராயணுய என்று மூன்று பதங்களாயும், இம்மூன்று பதங்களும் ஸேஷத்துவம், பாரதந்த்ரீயம், கைங்கர்யம் என்னும் மூன்று அர்த்தங்களேயும் கொண்டுள்ளன. இப்பதத் திரயத்தில் முதல் பதம் ஆகிய ஓங்காரத்தின் வடிவத்தை வைஷ்ணவ சித்தாந்திகள் கருத்திற்கிணங்க இதனே யான் விளக்குகின்றேன்.

## பிரணவத்தின் உண்மை விளக்கம்.

ஓங்காரமானது சகல சம்பந்தங்களுக்கும் சகல வேதங்களுக்கும் சகல லோகங்களுக்கும் சகல தூல சூட்சுமப்பிரபஞ்சங்கள் அனைத்திற்கும் காரணமாய் இருத்தலினுல் சகல வேத சாரமாம்.

## ஓங்காரத்தின் அர்த்தம்.

ஏகாக்ஷரமாக விளங்கும் ஓங்காரம் ஆனது அகாரம், உகாரம், மகாரம் என்னும் மூன்று அக்ஷரங்கள் அமைந்து உள்ளது.

| ஓம் | அகாரம் | உகாரம் | மகாரம் |
|---|---|---|---|
| பரம்பொருள்! | விராட்டு | இரண்யகர்ப்பன் | அவ்வியாகிருதம் |
| | வைஸ்வானரன் | சூத்திராத்மா | அந்தரியாமி |
| | விஷ்ணு | பிரமா | உருத்திரன் |
| | காத்தல் | படைத்தல் | அழித்தல் |
| | சத்துவம் | இரஸஸு | தமஸு |
| | தூலம் | சூட்சுமம் | காரணம் |
| | சாக்கிரம் | சொப்பனம் | சுழுத்தி |

| | | |
|---|---|---|
| விசுவன் | தைஜஸன் | பிராஞ்ஞன் |
| ஜீவாத்மா | அந்தராத்மா | பரமாத்மா |
| ஈசுரன் | ஜீவன் | ஜகத்து |
| பிரகிருதி | பிரதானம் | அவித்தை |
| சகளம் | சகள நிட்களம் | நிஷ்களம் |
| பூரகம் | கும்பகம் | ரேசகம் |
| சஞ்சிதம் | ஆகாம்யம் | பிராரத்தம் |
| இச்சை | அநிச்சை | பரவிச்சை |
| மந்தம் | தீவிரம் | அதிதீவிரம் |
| உத்கிருஷ்டம் | மத்யமம் | சாமானியம் |
| மனோநாசம் | வாசனக்ஷயம் | தத்துவ ஞானம் |
| லோக வாசனை | சாஸ்திரவாசனை | தேக வாசனை |
| வாதம் | ஜல்பம் | விதண்டை |
| கர்மம் | பத்தி | ஞானம் |

இவை யாவும் பிரணவத்தின் வாச்சியப்பொருளே இவை யாவுமாய் உள்ளனவாம்.

அகரம், உகாம், மகரம் இம்மூன்று எழுத்துக்களின் இயல் அறியாதவன் மூடனே என்பதனை பல மேலோர்கள் எட்டும் இரண்டும் தெரியாத ஏழையேன் என பல பாக்களி னல் அறிவதுமன்றி உலகின் கண் இதனையே கொண்டு எட்டு இரண்டும் அறியாதவன் எனவும் உலக வழக்கின் கண்ணும் உள்ளது அதனை ஆராயின் தமிழ் மொழியில் எட்டு என்பது அகரம் ஆம். இரண்டு உகரமாம் உம்மையே மகரமாயின இவற்றினை இலக்கணை ருபமா அறியாதவன் பாமரனேயாவன் அகர, உகர, மகர இலக்கணம் அறியாத வன் என்பதாம். இன்னும் ஒருபொருள்உண்டு அது என்னை எனின்! எட்டும் இரண்டும் பத்து ஆம். தமிழின் கண் பத்து என்பது யகரமாம். அந்த யகரம் உயிர்களாம். அந்த உயி ரின் இலக்கணம் அறியாதவன் எனவும் ஒரு பொருள் கொள்ளலாம்.

## அகாரத்தின் அருத்தம்.

அகரத்திற்கு (1) பிரகிருதி சி த் த ம் என்றும், (2) உற்பத்தி சித்தம் என்றும் இரண்டு சக்திகள் உண்டு. இவ் விரண்டில் (1) அது வாசகங்களுக்கெல்லாம் காரணமாவ தனுலும் வாச்சியங்கட்கெல்லாம் காரணமாகிய விஷ்ணுவை விஷ்ணு என்னும் உற்பத்தியினுல் வியாபக ஸ்வருபத்தைத் தெரிவிப்பதால் சர்வேஸ்வரன் என அறிவிப்பதனுலும் பிர கிருதி சித்தமாம்.

2. இரண்டாவது இரக்ஷிப்பவன் என்னும் அர்த்தத்தினை அறிவிப்பதால் உற்பத்தி சித்தமாம்.

ஆகவே அகரம் சுருதி, ஸ்மிருதி முதலிய சகல சப்தங் களுக்கும் காரணமாயுள்ளது என்பதனையே.

அகரவுயிர் போல் அறிவாகி எங்கும்
நிகரில் இறை நிற்கும் நிறைந்து எனவும்
அகர முதல எழுத்தெல்லாம் எனவும் உம்பர்கள்
பரவும் ஒரு தமிழ் வேதமும் முழங்குகின்றன.

## உகரத்தின் அருத்தம்.

இந்த அகாரத்திற்கு அடுத்த உகர எழுத்து ஆனது காருண்யத்திற்கு அறிகுறியான ஸ்ரீ இலக்குமி தேவியை உணர்த்தும்,

இந்த உகாரத்துக்கு முன் நிற்கும் அகார வாசகன் ஆன சர்வேஸ்வரனுக்கும் இந்த உகாரத்திற்குப்பின் நிற் கும் மகார வாசகனை ஜீவாத்மாவிற்கும் இந்த உ கா ர வாசகம் ஆகிய காருண்யம் இருந்து மாதாவைப்போல் பர மாத்மா ஜீவாத்மா இரண்டினையும் சம்பந்தப்படுத்துவனவாம் ஆகலின் இந்த உகரத்தின் அடுத்த எழுத்தினை ஊன்றி விசாரிப்பாம்.

## இனி மகாரத்தின் அருத்தம்.

மகாரம் 25-ம் அக்ஷரம் பிருதி வியாதி பிரகிருதி அந்தமான இருபத்துநான்கு தத்துவங்களுக்கும் வாசகமா இருக்கும் ககர முதல் பகர அந்தமான இருபத்து நான்கு அக்ஷரங்கள் போல் அல்லாமல் இந்த மகாரம் இருப்பத்து ஐந்தாவது எழுத்தாம் இது ஞான அனுகுணமாயும் ஞான ஸ்வருபமாயும் உள்ள ஜீவாத்மாவைத் தெரிவிப்பதாம்.,

ஆகவே அகாரம் ஞான ஸ்வருபனுன சர்வேஸ்வரனை யும் உகரம் சித் ஸ்வருபையான காருண்யத்திற்கும்! மகாரம் தாசனுன ஜீவாத்மாவிற்கும் சொல்லப்பட்டிருக்கின்றன.

அகாரஸ் சித் ஸ்வருபஸ்ஷிய விஷ்ணோர் வாசக இஷ்யதே மகாரஸ்து தயோர் தாபி! இதி பிரணவ இலக்ஷணம்! மேலும்,

அகாரேணச்சயதே விஷ்ணுஸ் ஸர்வலோஹேசுவரோ ஹரி: உத்தர் தா விஷ்ணு நா, லக்ஷிமி ருகாரே ரேச்யதே, சதா தஹரஸ்து தயோர் விப்ர ஸ்ரீ நாராயணுயோ ஸ்சதா ஆத்ம நச்ஷே பூதஸ்ய வாசக ஸ்விருதி சோதிதன் என்று வைஷ்ணவப் பெருமக்கள் முழங்குவர்.

## பிரகலாதன்கூறிய எட்டு அக்கரங்களின் பெருமை

நயந்ததெலாம் எளிது அருளும் நாராயணுய
நமவென்னும்
உயர்ந்த திரு மந்திரம் என்றன் உள்த்தில் விண்ணின்
மாருதம் போல்

நமஸ்காரம் நாராயணனுக்கு என்னும் மந்திரம் சர்வார்த்த சாதகமாம் ஆகாயத்தினின்றும் வாயுவே போலும் எனது இருதய கோசத்தினின்றும் அஃது அகலாது உறைக

பிரணவத்தோடு கூடியஇதுபவித்திரமாய தேசங்களிலேயே நியமித காலத்தில் சுசியாக இருந்து ஜபிக்கத்தக்கது நிரந் தரம் தகாது எனப் பிரணவமின்றிக்கொண்டதாம்! இருதய கோசம் எனக் கூறியது. மானஸ ஜப முக்கியத் தன்மையை விளக்குதற் பொருட்டாம். முன்னர் யாண்டும் நாராயண மயனே என்றதை தெளிவு படுத்தல்! ஹரியே ஆ சை யு ம் திசையும்! ஹரியே விண்ணும்! ஹரியே மண்ணும்! ஹரியே ஜகத்தும்! அமேயாத்மாவாகிய ஹரியே யானும்! என்னும் முறையில் விஷ்ணு மயமே யானுயினேன் வி ஷ் ணு ம ய ம் பாவனையானே விஷ்ணுப் பிராயம் பெண் மயல் விடல் என் பது போல பாவனையால் ஆக்கப்பெற்ற தற்பாவ இலக்க ணப் பிரசுரியத்தில் மயட் விகுதியாம். யாதின் பொருட்டு இங்ஙனம் கற்பிக்கின்றனே எனிற் கூறல்! பேணி அரியை என்பதாதி அவிஷ்ணுவா இருந்து விஷ்ணுவைப் பூஜித்து பூஜா பலத்தை அநுபவிப்பவன் ஆக மாட்டான் அவிண்டு வாய் விண்டுவை அருச்சியாதுஒழிக அவசியமாய் சிவத்தை அர்ச்சி யாது ஒழிக என்னும் விதியை அநுசரித்தென்பதாம்.

## அஷ்டாக்ஷரத்தின் பெருமை.

நடந்து விடுங்கால் இரு வினைகள் நாராயணுய
நம வென்னில்

நடந்து விடுங்கால் பிறப் பிறப்பு நாராயணுய
நம வென்னில்

நடந்து விடுங்கால் பகையுறவு நாராயணுய
நம வென்னில்

நடந்து விடுங்கால் அகங்காரப்பேய் நாராயணுய
நம வென்னில்

சுயம் ஜோதியாகிய சர்வான்ம தேவரே நா ரா ய ண சப்த வாச்சியார்த்தராவர். தற்சமீபத் தன்மையானே யாவற் றையும் தத்தம் காரியத்தே முயல்விப்பது நாமமாம். மாயை

அதற்குச் சம்பந்தி ஆகலின் மாயை நாராவாம். சூக்கும உலகம் மாயா காரியமாதலின் அம்மாயா நாராவாம். இவ்விரண்டிலும் அது பிரதி பிம்ப ருபமாய் நிகழு தலின் அம்மாயா விசிஷ்டப் பரமான்மாவும் சூக்குமபிரபஞ்ச ருப இரண்ய கருப்பரும் நாராயணரெனப் பெறுவர். பர மான்ம ருப தான் உண்டாக்கியநீர் நாராவாம். அது விராட் டுக்கு ஆதாரமாதலின் நாராயணர் எனப்பெறுவர். நதி நீர் ஓட ஆதாரமேபோல்பூமியோடுஆதாரநீர் பரமான்மாவினின் றேயுண்டாமாதலின் நாராவெனப்பெறுவர்.அதனை அதுவே சூத்திரான்ம வடிவ பிராண ருபத்தால் தாரணம் செய்தலின் நாராயணரெனப்பெறுவர் தூலப்பிரபஞ்ச சரீர விராட்டும் சூக்குமப்பிரபஞ்ச சரீரஇரணிய கருப்பரும்நரரெனப்படுவர் அவ்விருவரின் திதியும் பரமான்மாவின் இடத்தில் ஆகலின் அது நாராயணவெனப்பெறும். பிரதி பிம்ப ஜீவர் நாராவர். அவர் நிருபணம் பிம்ப ருபப்பரமான்மாவானே நிகழும் ஆக லின் நாராயணுவெனப் பெறும். ஜீவர்களிடத்திலுள்ள காமக்குரோதாதி தோஷங்கள் அரவாம் அவற்ருல் ஆகும் துக்கம் ஆரவாம். அதற்காசிரய அஞ்ஞாஞதி ஆராயண மாம். அது சுயஞ் ஜோதியானந்த ஆன்மாவில் முக்காலத் தும் இன்ருமாதலின் நாராயணவெனப்பெறும். அவித்தை யாதி ஐந்து கிலேசங்கள் அறம், பாவம், இன்பம், துன்பம், அவற்றின் வாசனை என்பன யாவும் சம்சார சக்கரத்தின் அராக்களாம் அவற்றிற்கு மாயை பரிணும உபாதானம் ஆகலின் இது ஆராயணமாம். இதனினும் கூடஸ்தர் வேரு மாதலின் நாராயணர் எனப்பெறுவர். கற்பித தாதாத்மிய அத்தியாசருபசம்பந்தத்தால்மாயையாகிய நாரியின் ஸ்திதி பரமான்மாவிலேயேயாமாகலின் நாராயணவெனப்பெறுவர். பரமேச ருப நர சம்பந்தி இலக்குமி நாரியெனப்படுவள். அவ்வம்மை சகல தேக தாரிகளுக்கும் பிரியையும் அநேகங் கலையோடு அநேக ருபமுடையவளும் அத்தியந்தம் மனோரம்

மியும் புண்ணியவான்களுக்குச் சந்ததம் சுகங் கொடுப்பவளும் பாவிகட்குத் தன்னை அடைவியாமலும் நரசத்தானும் எப்போதும் துக்கத்தை அடைவிப்பவளும் ஆவள். அந்நாரி பரமான்ம புருடனிடத்தே நிச்சயமாய் நிலைபெறுவள். ஆதலின் நாராயணர் ஆவர். ஆனந்த வடிவ திருஷ்டாவாகிய ஆன்மாவிற்கு நானாவகையாய பதார்த்தங்களைக் காண்பிக்கும் சர்வ ஜீவர்களின் புத்தி நாரியாம். அதனை ஆன்மாவே ஒளிர்விக்குமாதலின்நாராயணராம். பரமான்வினும் வேறாய் ஒரு சிறிதும் இன்றுமாதலின் நாராயணராம்.

குலந்தரும் செல்வந்தந்திடும் அடியார்
பருதுயர் ஆயின எல்லாம்

நிலந்தரும் செய்யும் நீள் விசும்பு அருளும்
அருளொடு வெரு நிலம் அளிக்கும்

வலந்தரும் மற்றும் தந்திடும் பெற்ற
தாயினும் ஆயின செய்யும்

நலந்தரும் சொல்லை நான் கண்டு கொண்டேன்
நாராயணாயவென்னும் நாமமே.

ஓம் தத் ஸத்.

அன்பே சிவம்.










## கிருஷ்ணன் பகவன் என்னும் இருபதங்களுக்கும் உள்ள பொருள்கள்.

கிருஷ் என்னுந்தாது சத்தையின் வாசகம். ண என்னுப்பிரத்தியயம் ஆனந்தத்தின் வாசகம் அவ்விரண்டின் ஐக்கிய ருபமான பரப்பிரஹ்மம் கிருஷ்ணன் என்னும் சொல்லிற்கு பொருள் என்பர். (1) ஐஸ்வரியம், (2) வீரியம் (3) கீர்த்தி, (4) ஸ்ரீ, (5) ஞானம், (6) வைராக்கியம் என்னும் ஆறுக்கும் பகம் என்னும் பெயர் உண்மையால் பகவன் என்பதற்கு இந்தஆறுகுணங்களேயும் உடையோன் என்பது பொருள் என்பர்.

மியும் புண்ணியவான்களுக்குச் சந்ததம் சுகங் கொடுப்பவளும் பாவிகட்குத் தன்னை அடைவியாமலும் நாசத்தானும் எப்போதும் துக்கத்தைத் அடைவிப்பவளும் ஆவள். அந்நாரி பரமான்ம புருடனிடத்தே நிச்சயமாய் நிலைபெறுவள். ஆதலின் நாராயணர் ஆவர். ஆனந்த வடிவ திருஷ்டாவாகிய ஆன்மாவிற்கு நானுவகைய்ாய பதார்த்தங்களைக் காண்பிக்கும் சர்வ ஜீவர்களின் புத்தி நாரியாம். அதனை ஆன்மாவே ஒளிர்விக்குமாதலின்நாராயணராம். பரமான்வினும் வேருய் ஒரு சிறிதும் இன்ருமாதலின் நாராயணராம்.

குலந்தரும் செல்வந்தந்திடும் அடியார்
படுதுயர் ஆயின எல்லாம்

நிலந்தரும் செய்யும் நீள் விசும்பு அருளும்
அருளொடு வெரு நிலம் அளிக்கும்

வலந்தரும் மற்றும் தந்திடும் பெற்ற
தாயினும் ஆயின செய்யும்

நலந்தரும் சொல்லை நான் கண்டு கொண்டேன்
நாராயணுயவென்னும் நாமமே.

ஓம் தத் ஸத்.

அன்பே சிவம்.










## கிருஷ்ணன் பகவன் என்னும் இருபதங்களுக்கும் உள்ள பொருள்கள்.

கிருஷ் என்னுந்தாது சத்தையின் வாசகம். ண என்னுப்பிரத்தியயம் ஆனந்தத்தின் வாசகம் அவ்விரண்டின் ஐக்கிய ரூபமான பரப்பிரஹ்மம் கிருஷ்ணன் என்னும் சொல்லிற்கு பொருள் என்பர். (1) ஐஸ்வரியம், (2) வீரியம் (3) கீர்த்தி, (4) ஸ்ரீ, (5) ஞானம், (6) வைராக்கியம் என்னும் ஆறுக்கும் பகம் என்னும் பெயர் உண்மையால் பகவன் என்பதற்கு இந்தஆறுகுணங்களையும் உடையோன் என்பது பொருள் என்பர்.







உ

## இராமன் என்பதற்குப் பொருள்

சதா இரமித்துக் கொண்டிருப்பவன். ஆத்மாவின்கண் இரமித்தலையுடையோன் ஆத்ம இராமன் என்பர்.

இந்திரியங்களில் இரமித்துக்கொண்டிருப்பவனை இந்திரிய இராமன் என்பர்.

அன்பே சிவம்

ஓம் சாந்தி! ஓம் சாந்தி!! ஓம் சாந்தி!!!



சிவமயம்.

# சிவ இராஜயோகம், சிவஞானச் செம்பொருள்

| வரி | பிழை | திருத்தம் | பக்கம் |
|---|---|---|---|
| 27 | உற்பற்று ஆகிய | உற்பற்றுப் புறப்பற்றுஆகிய | 6 |
| 27 | ஏன்ஞ‌ஊ | என்ஞ‌ணே | 6 |
| 10 | பாவிடும்பன் | பரவிடும் கரணம்பன் | 7 |
| 27 | அம்மை | அன்னை | 7 |
| 12 | சாகன் | சாதகன் | 11 |
| 3 | நிவிருத்த | நிவிருத்திப் | 23 |
| 2 | அடைந்ததும் | அடைந்தும் | 28 |
| 9 | ஸ்கார ஷ்கார | ஸகார ஹகார | 32 |
| 7 | பூண்டடின் | பூண்டின் | 34 |
| 1 | புத்தியாகி | புத்தியாகிய | 36 |
| 9 | தத்துவத்தையுய் | தத்துவத்தையும் | 42 |
| 9 | இராஜ்யோ | இராஜயோக | 42 |
| 13 | இருதுகாஸத் | இருது காலத்தில் | 44 |
| 15 | உள்ளபேத | உள்ளபேதம் | 47 |
| 5 | ஆவஸ்யம் | ஆலஸ்யம் | 49 |
| 15 | சுழுத்திக்கும் சமாதிக்கு உள்ள பேத | சுழுத்திக்கும் சமாதிக்கும் உள்ள பேதம் | 47 |
| 11 | பாகியாம் | பாகியம் | 50 |
| 19 | சவாதி | சமாதி | 50 |
| 10 | பிரவண | பிரணவத்தி | 60 |
| 5 | பாவாய் | பாலாய் | 97 |
| 25 | என்னிஸ் | என்னில் | 106 |
| 23 | ஒன்றும் ஆச்சியம் | ஒன்றும் கடைந்து எடுக்கும் ஆச்சி | 152 |
| 25 | சமஸ்வயம் | சமன்வயம் | 155 |

உ

சிவமயம்.

# சிவஇராஜயோகம், சிவஞானச் செம்பொருள்

| வரி | பிழை | திருத்தம். | பக்கம் |
|---|---|---|---|
| 9 | காட்டென்ணு | காட்டொணுதே | 163 |
| 25 | உபதேச என் | உபதேசமிதென்று | 177 |
| 10 | மலம் மேலிய | மலம் மேவிய | 175 |
| 14 | அப் பாக்ய | அப்பாகயஞ் | 176 |
| 23 | அப் பாக்ஞ்ஞு | அப்பாகயஞ் | 177 |
| 1 | அதுவும் இதுவும் | அதுவும் இது | 182 |
| 19 | உயிரினன் | உயிரினின் | 199 |
| 3 | விட்டு விடாத | விட்டுவிட்டு விடாத | 205 |
| 5 | இடம்தொறும் அதுவாய் | இடந்தொறும் இடந்தொறும் அதுவதுவாய் | 215 |

தேவர் குறளும் திருநான் மறைமுடிவும்
மூவர் தமிழும் முனிமொழியும்—கோவை
திருவாசகமும் திருமூலர் சொல்லும்
ஒரு வாசகம் என்றுணர்.






உ

சிவமயம்.

## இந்நூல்கள் கிடைக்குமிடங்கள்:

**சித்தனுதன் விபூதி ஸ்டோர்**

அடிவாரம், பழனி

**வெங்கடேஸா லாட்ஜ்**

அடிவாரம், பழனி

**கலா மண்டபம்**

வேட்டைக்காரன்புதூர்

**கோபால் ஐயர்** அவர்கள்,

மணீஸ் கபே, வேட்டைக்காரன்புதூர்

**A. S. கோபாலகிருஷ்ண செட்டியார்**

புஸ்தக வியாபாரம், கடைவீதி, பொள்ளாச்சி

**கோபால விலாசம் பிரஸ்**

கோட்டூர் ரோடு, பொள்ளாச்சி

இந்தபபிரதிகள் 500 ஆனதால்
மறுபதிப்பிற்கே இப்பொருள் உதவுமாறு
விலை வாங்கியதாகும்

(அஞ்சல் செலவு பிரத்தியேகம்)